# முஸ்லிம் சிந்தை

## ஒரு விளக்கம்




ஹஸ்ஸான் ஹத்ஹூத்

அஹ்மத் ஸகி யமானி
அவர்களின் முன்னுரையுடன்

தமிழ் மொழிபெயர்ப்பு:
ஹாபிஸ் இஸ்ஸதீன்

## அர்ப்பணம்

அன்புக்காகவும் உண்மைக்காகவும்
மனித குலத்துக்காகவும்
தம்மை அர்ப்பணித்துக்கொண்டவர்களுக்கு

# பொருளடக்கம்

# முன்னுரை

ஷெய்க் அஹ்மத் ஸகி யமானி*

இஸ்லாம் என்ற சொல் ஒரு கோத்திரத்தினதோ அல்லது தனிநபரினதோ பெயரிலிருந்து தோன்றியதல்ல. இந்த வகையில் இது உலகின் பிரதான மதங்கள் அனைத்திலுமிருந்து வேறுபட்டு நிற்கிறது. யூத சமயம் ( Judaism) கிறிஸ்தவம் பௌத்தம் ஆகிய பெயர்கள் முறையே Judea என்ற பிரதேசப் பெயரிலிருந்தும் கிறிஸ்து நாதரின் பெயரிலிருந்தும் புத்தரின் பெயரிலிருந்தும் தோன்றியுள்ளன. இஸ்லாம் என்ற பெயரோ இறைதூதர் முஹம்மத் (இறைவன் அவர் மீது சாந்தியையும் அருளையும் பொழிவானாக) அவர்களின் பெயரிலிருந்து உருவாகியதல்ல. முஹம்மதிய சமயம், முஹம்மதியர் போன்ற சொற்களை உபயோகிப்பதில் கடந்த கால கீழைத்தேயவாதிகள் நாட்டம் காட்டிய போதிலும் இப்பெயர்களை தம் சமயத்தையோ தம்மையோ குறிப்பனவாக முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்வதில்லை.

இஸ்லாம் என்ற பெயர் தஸ்லீம் (அடிபணிதல்) ஸலாம் (சமாதானம்) ஆகிய இரு மூலங்களைக் கொண்டுள்ளது. சுருக்கமாகச் சொல்வதானால், மனிதனுக்கும் அவனைப் படைத்தவனுக்குமிடையில் உள்ள உறவையும் மனிதர்கள் தமக்கிடையே கொண்டுள்ள உறவுகளையும் பரிபாலிக்கின்ற முழுமையானதும் ஒருமைப்பாடு கொண்டதுமான ஒரு கோட்பாடுதான் அது.

*ஷெய்க் அஹ்மத் ஸகி யமானி ஸஊதி அரேபியாவின் பெற்றோலிய மற்றும் கனிப்பொருள் வள அமைச்சராக இருந்தவர். எமது காலத்தில் பெருமளவு சாதனைகள் புரிந்த ஓர் அரசியல் தலைவர்.அவர் ஓர் இஸ்லாமிய அறிஞரும்கூட. ஹாவார்ட் சட்டக் கல்லூரியில் இடம் பெறும் இஸ்லாமிய ஷரீஆ பற்றிய பாடநெறியில் வருடந்தோறும் கலந்துகொள்பவர். அவரது நூலான The Everlasting Shariah (ஸஊதி பப்ளிஷிங் ஹவுஸ்-1970) என்பதும் அவரது பெருந்தொகையான எழுத்தாக்கங்களும் விரிவுரைகளும் இஸ்லாத்தைப் பற்றிய உண்மைகளைத் தெளிவாக்குவதில் பெரும் பங்களிப்புச் செய்துள்ளன. இங்கிலாந்து லண்டன் மாநகரில் அமைந்துள்ள புகழ்பெற்ற Centre for Global Energy Studies என்ற நிறுவனத்தின் ஆரம்பகர்த்தாவும் தலைவரும் அவரே. பழங்கால இஸ்லாமிய கையெழுத்துப் பிரதிகளைப் பாதுகாத்துப் பதிவு செய்து வெளியிடுவதில் ஈடுபட்டுள்ள 'அல் புர்கான்' என்னும் அமைப்பின் ஆரம்பகர்த்தாவான அவர்அதன் தலைவராகவும் இருக்கின்றார்.

*மனிதனுக்கும் எல்லாம் வல்ல இறைவனுக்கும் இடையிலான உறவானது, ஒரு படைப்பு தன்னைப் படைத்தவனுக்கு முற்று முழுதாக அடிபணிவதாகவே இருக்கிறது. இதுதான் இஸ்லாம் என்ற சொல்லின் முக்கியமானதும் பொதுவானதுமான கருத் தாகும். இது இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களினூடாக அருளப்பட்ட சமயத்துக்கு மாத்திரம் உரிய ஒன்றல்ல. உண் மையில் எமது நபி முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு முந்திய காலங் களில் இறை தூதர்களாகத் தோன்றிய பலரைப் பற்றி குர்ஆன் குறிப்பிடுகிறது. இப்றாஹீமினது (ஆபிரஹாம்) - உண்மையில் அனைத்து இறை தூதர்களினதும் - மார்க்கம்தான் இஸ்லாம் என குர்ஆன் கூறுகிறது.*

> *". . . .உங்களுடைய தந்தை இப்றாஹீமுடைய மார்க்கத்தை (கடைப்பிடியுங்கள்!). அவன் (இறைவன்)தான் (இதற்கு) முன்னர் உங்களுக்கு முஸ்லிம்கள் எனப் பெய ரிட்டான். இதிலும் (இவ்வேதத்திலும்)தான் (அவ்வாறே) உங்களுக்குப் பெயர் கூறப்பட்டுள்ளது. இது ஏனெனில், (நம்முடைய) இத்தூதரே உங்களுக்குச் சாட்சியாக இருப் பதற்காகவும் நீங்கள் மற்ற மனிதர்களுக்குச் சாட்சியாக இருப்பதற்குமேயாகும்." (22:.78)*

*அதே வேளை மனிதர்கள் தமக்கிடையே கொண்டுள்ள உறவுகளை இஸ்லாம் என்ற சொல்லின் அடுத்த மூலக் கருத்தான சமாதானம் என்பதே நிர்ணயிக்கிறது. சமாதானம் என்னும்போது அது சகிப்புத்தன்மையையும் கருணையையும் உள்ளடக்குகிறது. முஸ்லிம் யார் என்பதை இறைதூதர் விவரிக்கும் போது "ஒரு முஸ்லிமின் நாவிலிருந்தும் கரங்களிலிருந்தும் அடுத்த முஸ்லிம்கள் பாதுகாப்புப் பெற்றிருப்பர்" எனக் கூறினார்கள். சகிப்புத் தன்மை பற்றியும் சகித்துக்கொள்வோர் பற்றியும் நபிகளார் புகழ்மாலை சூடினார்கள். " . . . சகிப்புத்தன்மை உடையவர் மீது இறைவன் கருணை காட்டுவான். அத்தகையவர் விற்பனை செய்வதில் சகிப் புத்தன்மை காட்டுவதோடு கொள்வனவு செய்வதிலும் சகிப்புத் தன்மை காட்டுவார்."*

*யுத்தத்தைப் பொறுத்தமட்டில் முஸ்லிம் அல்லாத ஒருவரி னால் அச்சுறுத்தப்படும்போது மாத்திரமே அவரோடு ஒரு முஸ்லிம் போரிட முடியும் எனப் போராட்ட விதிகள் கூறுகின்றன. இந்த அடிப்படையில்தான் யுத்தம் புரிவதற்கான இறை அனுமதி முஸ்லிம்களுக்கு வழங்கப்பட்டது. குர்ஆன் இதனைப் பின்வரு மாறு கூறுகிறது:*

> *"போர்தொடுக்கப்பட்டோருக்கு - நிச்சயமாக அவர் கள் அநியாயம் செய்யப்பட்டிருக்கிறார்கள் என்ற காரணத்*

*தினால் (அவ்வாறு போர்தொடுத்த நிராகரிப்பவர்களை எதிர்த்துப் போராடுவதற்கு) அனுமதி அளிக்கப்பட்டிருக் கிறது. நிச்சயமாக அவர்களுக்கு உதவி செய்வதற்கு இறை வன் பேராற்றலுடையவன்." - (22:39)*

முஸ்லிம்களுக்கும் பொதுவாக முஸ்லிம் அல்லாதவர் களுக்கும் - குறிப்பாக வேதம் அளிக்கப்பட்டவர்களுக்கும் இடை யிலான உறவானது பன்முகத்தன்மையுடைய ஒரு விடயமாகும். விரிவான கலந்துரையாடல் தேவைப்படும் இந்த விடயம் பற்றி இப்படியான நூல் அறிமுகத்தில் உள்ளடக்கிவிட முடியாது. இந்த உறவானது சகிப்புத்தன்மை, சமாதானம் ஆகிய இரு கோட் பாடுகளையும் அடிப்படையாகக் கொண்டது என்பதனை மட்டும் இங்கு கூறிவைக்கலாம். இதுவே குர்ஆனிலும் நபிகளாரின் கூற்றுக் களிலும் வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது. இந்தக் கோட்பாடு களுக்கு முரணான விதத்தில் வரலாற்றில் இடம்பெற்றுள்ள நிகழ்வுகளைப் பொறுத்தமட்டில் அவற்றுக்குக் காரணமாக அமைந்தது சம்பந்தப்பட்ட முஸ்லிம்களேயன்றி இஸ்லாம் அல்ல. கிறிஸ்தவத்துக்கு முரணாக இடம்பெறுகின்ற நடத்தைகளுக்குத் தனிப்பட்ட கிறிஸ்தவர்கள் காரணமேயன்றி யேசு கிறிஸ்துவின் (இறைவன் அவர் மீது சாந்தியைப் பொழிவானாக) போதனைகள் காரணமாக இருப்பதில்லை என்பதும் இதைப்போன்றதே.

ஒரு முஸ்லிம் மற்றவர்களோடு சமாதானமாக இருப்பதைப் போன்றே தன் சுயத்தோடும் சமாதானத்தைப் பேண வேண்டும் என்ற உண்மை இஸ்லாத்தைச் சிறப்பித்துக் காட்டுகிறது. ஒரு முஸ் லிம் இறைவனுக்கு முற்றாக அடிபணிந்து விடுவதன் அடிப்படை விளைவே இது. வாழ்க்கையில் ஆன்மீகத்துக்கும் லௌகீகத்துக்கும் இடையில் பொருத்தப்பாட்டையும் இணக்கத்தையும் ஏற்படுத்தும் விடயத்தில் இஸ்லாம் தனிச்சிறப்புடையதாக விளங்குகிறது. உலகம் சார்ந்த விடயங்களில் ஒரு முஸ்லிம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது அவர் விசுவாசிக்கும் சமயத்தின் ஆத்மீகப் போதனைகளால் கட்டுப்படுத்தப்பட்டு நெறிப்படுத்தப் படுகின்றது. வியாபாரக் கொடுக்கல் வாங்கல்கள் அல்லது தனிப் பட்ட நடத்தை தொடர்பான இஸ்லாமிய சட்ட விதிகளைப் பற்றிப் பரிச்சயமுள்ளோரால் இதனை எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். மறுபுறத்தில் இஸ்லாமிய வணக்க முறையானது வார்த் தைரீதியான பிரார்த்தனைகளும் உடல்ரீதியான அசைவுகளும் இணைந்ததாகக் காணப்படுகிறது. ஆத்மீக மனநிலையை வலி யுறுத்தி உறுதிப்படுத்துவதே இதன் நோக்கம். உதாரணமாக, ஒரு முஸ்லிமின் தினசரித் தொழுகை பல்வேறு உடலசைவுகளை உள்ளடக்கியிருக்கிறது. இவற்றில், 'ருகூஉ' என்னும் சிரம் தாழ்த் தலின் போது "மகத்துவம் மிக்க என் இறைவனைத் துதி செய்

கிறேன்" என்று கூறியவாறு ஒரு முஸ்லிம் தனது இறைவனின் மகத்துவத்தின் முன்னால் தனது பணிவையும் அடக்கத்தையும் எடுத்துக் காட்டுகிறான். அதே போன்று தொழுகையில் 'ஸுஜூத்' என்னும் தரையில் சிரம் பதித்தலின் போது "மேன்மைமிகு எனது இறைவனைத் துதி செய்கிறேன்" என்று கூறியவாறு இறைவனின் எல்லையற்ற மாட்சிமையின் முன்பாக மனிதன் எத்துணை அற்ப மானவன் என்பதைப் பிரதிபலிக்கின்றான். ஒரு முஸ்லிமின் இந்த உடல் அசைவுகளும் நிலைகளும் தன்னைப் படைத்துப் பாது காக்கும் இறைவனின் கருணையிலும் அன்பிலும் தனக்குள்ள நம்பிக்கையைப் புதுப்பித்துக்கொண்டு அவனுக்குச் சேவகம் புரியத் தான் தயார் என்பதைக் குறித்துக்காட்டுகின்றன. சிரம் தாழ்த்தலும் தரையில் சிரம் பதித்தலும் ஒரு முஸ்லிமின் முற்று முழுதான பணிவை வெளிக்கட்டுகின்றன. இப்பணிவு வேறு எவருக்குமன்றி இறைவனுக்கு மாத்திரமே காட்டப்படக்கூடியது. பின்வருமாறு கூறும்படி குர்ஆன் முஸ்லிம்களைப் பணிக்கிறது:

"(எங்கள் இரட்சகா!) உன்னையே நாங்கள் வணங்கு கிறோம். உன்னிடமே நாங்கள் உதவி தேடுகிறோம்" (1:5)

சக மனிதர்களோடு மேற்கொள்ளப்படும் உறவுகள் சமத்து வத்தின் அடிப்படையில் அமைய வேண்டும் என அவர்களது மார்க்கம் போதிக்கிறது.

சீன, எகிப்திய, கிரேக்க, பாரசீக, ரோம நாகரிகங்கள் எனப் பல நாகரிகங்களை மனித வரலாறு கண்டிருக்கிறது. அது இஸ்லாமிய நாகரிகத்தையும் கண்டிருக்கிறது. இஸ்லாத்துக்கு முந்திய ஒவ் வொரு நாகரிகமும் ஏனையவற்றிலிருந்து அதனைப் பிரித்துக் காட்டுகின்ற ஏதோவொரு அம்சத்தில் புகழ்பெற்றிருந்தது. கிரேக்க நாகரிகத்தில் தத்துவவியல் செழித்தோங்கியது போலவே ரோமர் களின் காலத்தில் கட்டடக் கலை முக்கியத்துவம் பெற்றிருந்தது. எனினும் இஸ்லாமிய நாகரிகத்தின் போது மருத்துவம், வானியல், வேதியியல், கணிதம், தத்துவம், கட்டடக்கலை போன்ற பிரதான அறிவுத் தறைகள் அனைத்தும் எழுச்சி பெற்றிருந்தமை கவனிக்கத் தக்கது. எனினும் இஸ்லாமிய நாகரிகத்தை அதற்கு முந்திய வற்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் பிரதான அம்சம் அது வரலாற்றின் எந்தக் காலத்தில் உருவாகியது என்பதை நாம் திருத்தமாக அறியக்கூடியதாக இருப்பதே. அது கி.வ. ஏழாம் நூற் றாண்டில் இறைதூதர் அவர்களுக்கு இஸ்லாமிய மார்க்கம் அருளப்பட்ட தினத்திலிருந்தே ஆரம்பிக்கிறது. மறுதலையாக, ஏனைய நாகரிகங்கள் படிப்படியாக உருவாகி இனங்காணத்தக்க ஒரு வடிவத்தில் தோற்றமளிப்பதற்குப் பல நூற்றாண்டுகள் பிடித் தன.அவற்றுக்குக் குறிப்பிட்ட ஆரம்ப நாள் அல்லது பிறந்த

நாளொன்று இருக்கவில்லை. அத்தோடு ஏனைய நாகரிகங்கள்அவை உருவான சமூக சூழல்களின் தாக்கத்தினால் தோன்றிய போதிலும் ஏழாம் நூற்றாண்டில் மக்காவில் வாழ்ந்த அராபியரிடம், அறிவுக்கு முக்கியத்துவம் கொடுத்த நாகரிகமொன்றை உருவாக்கும் வல்லமை இருக்கவில்லை. அவர்கள் பொதுவாகவே அறியாதவர்களாகவும் படிப்பறிவில்லாதவர்களாகவும் இருந்தனர். இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் அழைப்புத்தான் அவர்களுடைய அத்திவாரத்தையே குலுங்கச் செய்து அவர்களது சமூகக் கட்டமைப்பைத் தலைகீழாக மாற்றியமைத்தது. அந்த அழைப்பினாலும் தெய்வீகத் தூதினாலும் மாற்றியமைக்கப்பட்ட அவர்கள் அன்று அறியப்பட்டிருந்த உலகின் எல்லாத் திசைகளிலும் புறப்பட்டுச் சென்று தாம் பயணித்த வழி நெடுகே வரலாற்றினை மாற்றி அமைத்தார்கள்.

இஸ்லாத்துக்கு முந்திய காலத்திலிருந்த அராபிய கோத்திரப் பழக்கவழக்கங்கள் அனைத்தும் குர்ஆனினாலும் இறை தூதர் அவர்களின் 'ஸுன்னாஹ்'[1] வினாலும் ஒழிக்கப்படவில்லை என்பது உண்மையே. அவற்றுள் சில அங்கீகரிக்கப்பட்டும், சில திருத்தியமைக்கப்பட்டுப் புதிய சட்ட மற்றும் ஒழுக்க முறையுடன் ஒன்றிணைக்கப்பட்டன. அத்தோடு இஸ்லாத்துடன் முரண்படுபவை கைவிடப்பட்டன. இவற்றுள் குர்ஆனினாலோ ஸுன்னாஹ்வினாலோ நேரடியாகக் கவனத்தில் எடுக்கப்படாத சில பழக்கவழக்கங்கள், பிற்காலத்தில் மூலாதார நூல்களை வியாக்கியானம் செய்யும் பணியை மேற்கொண்ட சட்டவல்லுனர்களாலும் அறிஞர்களாலும் அணுகப்பட்டன. அவர்கள் எடுத்த முடிவுகளின் காரணமாகத்தான் பண்டைய நாடோடி அராபியரின் விரும்பத்தகாத சில பழக்கவழக்கங்கள் இஸ்லாமிய சட்டத் தொகுதியான ஷரீஆவுக்குள் புகுந்து கொண்டன. ஷரீஆவின் இவ்வாறான அம்சங்கள் மாற்றப்பட முடியாதவையல்ல என்பதையும் இவை ஒவ்வொரு காலப்பகுதியிலும் தகுதிவாய்ந்த சட்டவல்லுனர்களின் பரிசீலனைக்கு உட்படுத்தப்பட வேண்டும் என்பதையும் நாம் பின்னர் கண்டுகொள்வோம். எப்படியிருப்பினும் இது நீண்ட கருத்துப்பரிமாற்றமும் விளக்கமும் தேவைப்படுகின்ற சிக்கலான விடயமொன்றாகும். எனினும் குடும்பச்சட்டங்கள் பற்றிய துறையில் ஓரிரண்டு உதாரணங்கள் இவ்விடயத்தை விளக்க உதவலாம்.

---

[1] ஸுன்னாஹ் என்றால் 'வழி, வழிமுறை, நெறி, அல்லது வாழ்க்கை முறை' எனப் பொருள்படும். இஸ்லாமிய இலக்கியத்தில் அது இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் முன்மாதிரியை அல்லது வாழ்க்கை முறையைக் குறிக்கப் பயன்படுகின்றது. இதுவே இஸ்லாமிய சட்டங்களின் இரண்டாவது பிரதான மூலாதாரமாக விளங்குகிறது.

பலதார மணமும், நினைத்தவாறு மனைவியரை விவாக ரத்துச் செய்யும் உரிமையும் இஸ்லாத்துக்கு முந்திய அரேபி யாவிலே பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டு நடைமுறையில் இருந்தன. ஒருவன் தான் விரும்பியவாறு எத்தனை மனைவியரை வைத்திருக்கவும் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி அவர்களை விவாக ரத்துச் செய்யவும் மாற்றவும் அனுமதி இருந்தது. நபிகளாரின் வாழ்க்கையின் முதற் பாதி வரை.இந்நிலை நீடித்தது. ஒருவன் ஒரே நேரத்தில் வைத்திருக்கக்கூடிய மனைவியரின் எண்ணிக்கையை இஸ்லாம் வரையறை செய்ததோடு ஒருவன் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரை வைத்திருக்க வேண்டுமாயின் அவர்களை சமமான நியாயத்தோடு நடத்த முடியுமாக இருக்க வேண்டும் என்ற நிபந்தனையையும் விதித்தது. மேலும் ஆரம்பத்தில் விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகளுடன் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியரை வைத் திருக்கும் உரிமையானது, ஆண்கள் தங்களது பராமரிப்பில் அநா தைப் பிள்ளைகளை வைத்திருக்கும் நிலைமையோடு நெருங்கிய தொடர்புற்றிருந்தது. நியாயப்படி அநாதைகளுக்கு உரித்தான சொத்துக்களைத் தமதாக்கிக் கொண்டவர்களை குர்ஆன் பின் வருமாறு அச்சுறுத்துகிறது.

> "நிச்சயமாக அநாதைகளின் சொத்துக்களை அநியா யமாகத் தின்கின்றார்களே அத்தகையோர் - அவர்கள் தங்கள் வயிறுகளில் (நிரப்பித்) தின்னுவதெல்லாம் நெருப் பையேதான். இன்னும், அவர்கள் (மறுமையில்) கொழுந்து விட்டெரியும் நெருப்பில் நுழைவார்கள்". (4:10)

அநாதைகளின் சொத்துக்கள் பொறுப்புச்சாட்டப்பட்டிருந்த முஸ்லிம்கள் இதனால் எச்சரிக்கையடைந்தார்கள். இச்சொத்துக் களின் ஒரு பகுதி தங்களுடைய முதலீடுகளில் கலந்து விடுவதனால் அந்த அநாதைகளுக்குக் கிடைக்காமற் போய்விடுமோ எனப் பயந்த அவர்கள் இறைசட்டத்துக்கு மாறு செய்வதிலிருந்து தம்மைக் காத்துக்கொள்வதற்காக அநாதைகளின் சொத்துக்களை இறை தூதரிடம் ஒப்படைக்க முயன்றனர். இச்சந்தர்ப்பத்தில் இன்னொரு குர்ஆன் வசனம் இறங்கியது:

> "அநாதைகள் விடயத்தில் நீதம் செய்ய முடியாது என நீங்கள் அஞ்சினால் பெண்களில் உங்களுக்கு விருப்பமான வர்களை இரண்டிரண்டாகவோ, மும்மூன்றாகவோ, நன்னான்காகவோ நீங்கள் திருமணம் செய்து கொள்ளுங் கள். அவர்களுக்கிடையில் நீங்கள் நீதமாக நடக்க முடியா தெனப் பயந்தால் ஒரு பெண்ணை (த் திருமணம் செய்து கொள்ளுங்கள்) . . . . " (4:3)

*பலதார மணம் தொடர்பாக குர்ஆன் வழங்கிய சட்டபூர்வ இணக்கப்பாட்டை முஸ்லிம்கள் துஷ்பிரயோகம் செய்வது கவலைக்குரியது. எப்படியான நிபந்தனைகளின் கீழ் அது நடைமுறைப்படுத்தப்பட வேண்டும் என்பதை அவர்கள் அலட்சியம் செய்துவிடுகின்றனர். அது அனுமதிக்கப்பட்ட சூழ்நிலைகள் வேண்டுகின்றபடி முழு ஜாக்கிரதையோடும் கருத்தூன்றியும் நோக்காமல், அது எத்தகைய நிபந்தனைகளின் கீழ் ஏவப்பட்டது என்பதைக் கவனிக்காமல் (சில சமூகங்களைச் சேர்ந்த ஆண்கள்) பலரோடு பாலுறவு கொள்வதற்குக் கிடைத்த அனுமதிப் பத்திரமாக பலதார மணத்திற்குரிய உரிமையை எடுத்துக் கொள்கின்றனர்.*

*குறிப்பாகப் பல அராபியர்கள் தாம் செல்வத்தைச் சேர்த்துக் கொண்ட பின்னர் பலதார மணத்தை ஒரு விதிவிலக்காகக் கருதுவதற்குப் பதிலாக, ஒரு விதியாகவே எடுத்துக் கொள்கின்றனர். ஒரே நேரத்தில் நான்கு மனைவியர் என்ற வரையறையை அவர்கள் மீறாத போதிலும், மாற்றிக்கொள்ளும் ஆசை ஏற்படும் போதெல்லாம் விவாகரத்தை நாடுகின்றனர். விவாகரத்தானது சட்டபூர்வமானதாக இருந்தாலும் இறை துதரின் வார்த்தைகளில் அது "சட்டபூர்வமானவற்றுள் இறைவனுக்கு மிகவும் வெறுப்பானது" என்பதை அவர்கள் அறிந்துள்ளனர். எனினும் உலக இன்பங்களை அடைவதற்காக அதனைப் பயன்படுத்துகின்றனர். மேலும், விரும்பத்தகாத இந்த சட்டரீதியான அனுமதி எவ்வாறு நிறைவேற்றப்பட வேண்டும் என்பது பற்றி அல் குர்ஆன் மிகத் தெளிவாக இருக்கிறது. விவாக உறவுகள் நெருக்கடிக்குள்ளாகிச் சிதைவுறும் போது முதலில் சமரசத் தீர்வே நாடப்பட வேண்டும்..*

> *"... இருவருக்குமிடையில் பிளவை நீங்கள் அஞ்சினால் அப்போது அவனது குடும்பத்தாரில் ஒரு மத்தியஸ்தரையும் அவளது குடும்பத்தாரில் ஒரு மத்தியஸ்தரையும் நீங்கள் அனுப்புங்கள். அவ்விருவரும் சமாதானத்தை உண்டுபண்ண நாடினால் இறைவன் இவ்விருவரையும் ஒற்றுமையாக்கி விடுவான் ...." (4:35)*

*சமரசத் தீர்வு தோல்வியடையும் பட்சத்தில், கணவன் விவாக விலக்கின் ஒரு கட்டத்தை அமுல் படுத்தலாம். அதனுடைய விளைவு மூன்று மாதங்களும் பத்து நாட்களுக்கு இடை நிறுத்தி வைக்கப்படும். அதன் பின்னரே விவாக விலக்கு இறுதி விளைவை அடையும். இந்த இடைநிறுத்தற் காலத்தில் மனைவி தன் புகுந்த வீட்டிலேயே தங்கியிருக்க வேண்டும். இதன் மூலம் விவாகரத்து என்னும் சட்டரீதியான - ஆனால் இறைவனின் பார்வையில் வெறுப்புக்குரிய - தீர்வை கணவன் மீளாலோசனை செய்வதற்*

*குரிய வாய்ப்பு வழங்கப்படுகிறது. இந்த வகையான விவாக விலக்கு கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் இரு தடவைகள் நிகழலாம். இது மூன்றாவது தடவையாகவும் இடம் பெற்றால் விவாகரத்து உடனடியாக அமுலுக்கு வந்துவிடும். இருவரும் நிரந்தரமாகப் பிரிக்கப்பட்டு விடுவர். அந்தப் பெண் இன்னொரு வரை மணந்து அவரிடமிருந்து விவாரத்துப் பெற்றாலேயன்றி அவர்கள் மீண்டும் ஒன்றிணைய முடியாது.*

> *"(மீட்டுக் கொள்ளக்கூடிய) விவாகரத்து இரண்டு தடவைகளாகும். பின்னர் நல்ல முறைப்படி (தன்னிடமே) தடுத்து வைத்துக் கொள்ளலாம். அல்லது நல்ல முறையில் (பிரிந்து) விட்டுவிடலாம்." (2:229)*

> *"பிறகு அவளை அவன் (இறுதியாக) விவாகரத்துச் செய்துவிட்டால் அதன் பிறகு அவனல்லாத வேறொரு கண வனை அவள் திருமணம் செய்யும் வரை அவள் அவனுக்கு ஆகுமானவளாக மாட்டாள். அவளை (இரண்டாம் கண வனாகிய) அவன் விவாகரத்துச் செய்துவிட்டால் இருவரும் இறைவனின் சட்டவரம்புகளை நிலைநிறுத்துவார்கள் என்று கருதினால், அப்பொழுது அவ்விருவரும் (திருமண பந்தத்தில்) மீண்டு கொள்வதில் அவ்விருவர் மீதும் குற்ற மில்லை." (2:230)*

*இந்த விடயத்தில் அல்குர்ஆன் மிகத் தெளிவாகக் கூறியிருந் தும் கூட சில முஸ்லிம் கணவன்மார் சிலவேளைகளில் மூன்று விவாக விலக்குகளையும் ஒரே கூற்றுடன் நிறைவேற்றி விடுகின் றனர். கணவனும் மனைவியும் மீள்பரிசீலனை செய்வதற்கு வசதி யாக அல்குர்ஆன் அனுமதித்திருக்கும் ஆறவிடும் காலத்தை நிலைநிறுத்த விரும்பும் சில சட்ட அறிஞர்கள் ஒரே கூற்றில் அல்லது ஒரே நேரத்தில் செய்யப்படும் மூன்று விவாக விலக்குகளும் ஒரு தடவைக்குரிய விவாக விலக்காகவே கருதப்பட வேண்டும் எனக் கூறியுள்ளனர். எவ்வாறாயினும், இறை தூத ருக்குப் பின் இரண்டாவது கலீபாவாக வந்த உமர் இப்ன் அல் கத்தாப் அவர்கள் விவாகரத்து என்னும் பாரதூரமான விடயத்தை மக்கள் எளிதாக எடுத்துக்கொள்வதைக் கண்டு, மூன்று விவாக விலக்குகளையும் ஒரே தடவையில் சொன்னாலும் அது மூன்று தடவைகளில் சொல்லப்பட்டதாகவே கருதப்பட வேண்டும் எனத் தீர்ப்பளித்தார். மேலும், மாதவிடாய்க் காலத்தில் அல்லது உடலுறவு நிகழ்ந்திருக்கும் நிலையில், இரு மாதவிடாய்களுக்கு இடைப்பட்ட காலத்தில் ஒருவன் தனது மனைவியை விவாக ரத்துச் செய்யக்கூடாது என இறைதூதரின் போதனைகள் கூறு கின்றன. (மாதவிடாயின் போது உடலுறவு கொள்வது தடுக்கப்*

பட்டுள்ளது) நபித் தோழர்களுள் ஒருவராகிய அப்துல்லாஹ் இப்ன் உமர் இந்த விதியை மீறிய காரணத்தால் அவர் தனது மனைவியை மீண்டும் சேர்த்துக்கொள்ளுமாறு ஏவப்பட்டார்.

சில முஸ்லிம் சமூகங்களில் காணப்படுகின்ற கவலைக்குரிய நடைமுறைகளுக்கு இவை சில எடுத்துக்காட்டுக்கள். சில அவதானிகள் எமது சட்டமுறைகளைப் பற்றிக் கொண்டுள்ள திரிபடைந்த கண்ணோட்டத்துக்கு இவையே காரணமாக அமைந்துள்ளன. நிலைமை அப்படியிருப்பினும் ஷரீஆவானது - குறிப்பாக பெண்கள் மற்றும் யாப்புரீதியான விடயங்கள் தொடர்பான அதன் பகுதிகள் - மனித உரிமைகளைப் பாதுகாக்கின்ற, மனித சமூகங்களையும் தனிமனிதர்களையும் ஒழுங்கு படுத்தி அமைக்கின்ற தனிச்சிறப்புடைய ஒரு சட்டத்தொகுதியாக விளங்குகின்றது.

வேறெந்த சட்டத் தொகுதியையும் போலன்றி மனித சமுதாயத்துக்குப் பயன்தருகின்ற ஷரீஆவின் உன்னதமான அம்சங்கள், இஸ்லாத்தில் தண்டனைகள் பற்றிய கருத்துப்படிவத்தை மிகக் கொடூரமானதாக மிகைப்படுத்திக் காட்ட முயலும் சில முஸ்லிம்களின் செய்கையினால் மறைக்கப்படுவது உண்மையில் துரதிர்ஷ்டமே. அந்நிய கீழைத்தேயவியல் அறிஞர்கள் ஒருபுறமிருக்க எமது முஸ்லிம்களே பலியாகியிருக்கின்ற இஸ்லாம் பற்றிய ஒரு பாரதூரமான விளக்கக்குறைபாடே இதற்குக் காரணமாகும். திருடியவனின் கையை வெட்டவோ தகாத உறவுகொண்டவனைக் கல்லெறிந்து கொல்லவோ இறக்கப்பட்டது அல்ல இஸ்லாம். மாறாக, மனிதனின் கௌரவத்தைப் பாதுகாக்கவே அது வந்தது. குற்றம் செய்தவருக்கு வழங்கப்படும் கடுமையான தண்டனை குற்றம் புரிவதைத் தவிர்க்கத் தூண்டும் வழியாக இருக்கிறதேயன்றி உடனடி நிறைவேற்றலுக்குரியதாக அல்ல. தண்டனை வழங்கப்பட முன்னர் பல தடைகள் தாண்டப்பட வேண்டியிருப்பது இதனையே சுட்டிக் காட்டுகிறது. குற்றத்தை நிரூபிப்பதற்குப் பட வேண்டியுள்ள சிரமங்கள் காரணமாக குறித்த தண்டனை நடைமுறைச் சாத்தியமற்றதாகலாம்.

எனவேதான் உண்மையான இஸ்லாமிய சமூகம் இரக்கத்தையும் இணக்கப்பாட்டையும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. உன்னதமான நாகரிகமொன்றை நிறுவுவதற்குத் தேவைப்படும் நிபந்தனைகளாக இஸ்லாம் இவற்றை ஏவுகிறது. அத்தோடு இந்த நாகரிக சமூகத்தின் ஆக்கக்கூறுகளாக அமைகின்ற மனிதப் பிறவிகளும், உயர் தகைமைகள் கொண்டவர்களாகவும் தங்களைப் படைத்தவனால் நிர்ணயிக்கப்பட்ட இலக்குகளின்படி உருவாக்கப்பட்டவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

*எப்படியிருப்பினும், முஸ்லிம்கள் தமது இரட்சகனின் கட்டளைகளை ஏற்று நடப்பதற்கு லௌகீக ஆசைகளின் கவர்ச்சிகள் தடையாக இருக்கின்றன. எனவே இன்றைய முஸ்லிம் சமூகத்தில் முழுமையாக இஸ்லாமிய நடத்தையைக் கொண்டவர்கள் நிறைய இருப்பார்கள் என எதிர்பார்க்க முடியாது. எனது சொந்த வாழ்க்கை அனுபவத்தில் அப்படியான ஒரு சிலரையே நான் சந்தித்திருக்கிறேன். அப்படியானவர்களில் டாக்டர் ஹஸ்ஸான் ஹத்ஹூத் ஒருவர் என அடித்துக் கூறலாம். எனவே அவருடைய* Reading the Muslim Mind *என்ற நூலுக்கு அறிமுகமொன்றை எழுதித் தருமாறு அவர் கேட்டபோது நான் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைந்தேன். அவரது நூலை வாசிக்க முன்னரே அவரது சிந்தனைகளைக் கிரகித்துக்கொண்டதனால் யதார்த்தரீதியான இலட்சியங்களைக் கொண்ட ஓர் உலகை நோக்கிய பயணத்தை என்னால் ஆரம்பிக்க முடிந்தது.*

*இஸ்லாம் எப்படிப் புரிந்துகொள்ளப்பட வேண்டுமோ அவ்வாறே அதன் உண்மையான வடிவில் டாக்டர் ஹத்ஹூத் அதனைப் புரிந்துகொண்டிருக்கிறார். எனவே இறைவன் மீதும் அவனது ஏகத்துவத்தின் மீதும் கொண்டுள்ள விசுவாசமானது, இறைவனால் இறக்கிவைக்கப்பட்டவற்றையும் இறைதூதரின் போதனைகளையும் ஏற்றுக்கொண்டதன் காரணமாக மட்டும் ஏற்பட்ட விளைவு அல்ல. தர்க்கத்தையும் பகுத்தறிவையும் பிரயோகித்துச் செய்யப்பட்ட தீவிரமான உளச்செயற்பாட்டின் விளைவாகவும் இது இருக்கின்றது. அப்படியான உள முயற்சியானது அண்ட சராசரங்களைப் பற்றியும் அவற்றுள் தன் இருப்புப் பற்றியும் சிந்திக்குமாறும் ஆராயுமாறும் அல்குர்ஆன் விடுக்கும் அறிவுரைகளோடு இணங்கிப் போவதாகவும் இருக்கிறது. இத்தகைய ஆராய்ச்சிதான் படைத்தவனைப் பற்றிய அறிவை மனிதர்களில் விருத்தியடையச் செய்கிறது. இது பற்றி அல்குர்ஆன் கூறுவதைப் பார்ப்போம்.*

> *"நிச்சயமாக, வானங்கள் மற்றும் பூமியைப் படைத்திருப்பதிலும் இரவும் பகலும் மாறிமாறி வருவதிலும் அறிவுடையோருக்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன." (3:190)*

> *"(அறிவுடைய) அத்தகையோர், நின்ற நிலையிலும் இருந்த இருப்பிலும் தங்கள் விலாப்புறங்களின் மீது (சாய்ந்து)ம் இறைவனையே நினைத்து, வானங்கள் மற்றும் பூமியின் படைப்பைப் பற்றியும் சிந்தித்து "எங்கள் இரட்சகனே! நீ இவற்றை வீணுக்காகப் படைக்கவில்லை. நீ மிகத் தூயவன். . ." (3:191)*

எனவேதான் இந்நூலின் 'இறைவன்' என்ற தலைப்பிலான முதல் அத்தியாயம் முஸ்லிம்கள் தம் இரட்சகனை அறிந்து கொள்ளும் வகையில் வழியமைத்துக் கொடுக்கிறது. இதன் மூலம் விசுவாசத்திற்கும் முற்றான ஏற்றுக்கொள்ளலுக்கும் வழியேற்படு கிறது. அவரது பாணி இளைஞர்களால் ஏற்றுக்கொள்ளப்படக் கூடியதாக இருக்கும் அதே வேளையில். விசுவாசமற்ற வளர்ந் தோரின் உள்ளங்களைச் சம்மதிக்கச் செய்வதாகவும் இருக்கிறது. இறைவன் ஒருவன் இருக்கின்றான் என்பதைச் சுட்டிக்காட்டும் காரணிகளைத் தர்க்கரீதியாகப் பகுப்பாய்வு செய்வதன் மூலம் இரண்டாம் அத்தியாயத்திலே அவர், மனிதனிலும், மீளுயிர்ப் பித்தல் மற்றும் மரணத்திற்குப் பிந்திய வாழ்விலும், மனிதனுக்கும் விலங்குகளுக்கும் இடையிலுள்ள வேறுபாட்டிலும், இப்றாஹீமை பொது மூலமாகக் கொண்டு தோன்றிய யூத சமயம், கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய ஓரிறைக் கொள்கையுடைய மூன்று சமயங் களிலும் இறைவன் இருப்பதன் காரணமாக வெளிப்படுகின்ற விளைவுகளை மேலும் தர்க்கரீதியாகப் பகுப்பாய்வு செய்கின்றார்.

மூன்றாவது அத்தியாயம் இஸ்லாத்தைப் பற்றிய சுவாரஷ்ய மானதும் அகவயமானதுமான விளக்கமொன்றைத் தருவதோடு ஏனைய இரு சமயங்களுடனுமுள்ள தொடர்பை எடுத்துக் காட்டுகிறது. குறிப்பாக, இஸ்லாத்துக்கும் கிறிஸ்தவத்துக்கும் இடையிலுள்ள பிணைப்புக்களைக் காணும் இஸ்லாத்தைப் பற்றிய அறிவில்லாத வாசகர் ஒருவர் வியப்படைவார். அல்குர் ஆன் எமக்குப் பின்வருமாறு கூறுகிறது:

> "... நிச்சயமாக 'நாங்கள் கிறிஸ்தவர்கள்' என்று கூறு கின்றனரே அத்தகையோரை விசுவாசங்கொண்டிருந் தோருக்கு அன்பால் மிக நெருக்கமானவராக நீர் காண்பீர். அது (ஏனென்றால்) அவர்களில் (கற்றறிந்த) குருக்களும் துறவிகளும் இருக்கின்றனர்; மேலும் நிச்சயமாக அவர்கள் பெருமையடிக்க மாட்டார்கள் ..." (5:83)

மேற்குலக நாகரிகத்தின் பல்வேறு அறிவுத் துறைகளிலும் கலைகளிலும் இஸ்லாமிய நாகரிகம் தெளிவாகத் தடம் பதித் திருக்கிறது. மேற்குலகு தன் நாகரிகத்தைக் கட்டியெழுப்பிக் கொள்வதற்குத் தேவையான அடித்தளத்தை அது வழங்கியது. அறபுச் சொற்களின் இசைவாக்கப்பட்ட வடிவங்களும் மொழி பெயர்ப்புக்களும் பரவலாகப் பயன்படுத்தப்படுவது இதனையே சுட்டிக் காட்டுகிறது.

பல்கலைக் கழகத்தைக் குறிக்கும் அறபுச் சொல்லான ஜாமிஆ என்பது ஓர் ஊரிலுள்ள பெரிய பள்ளிவாசலைக் குறிக்கின்ற.

'ஜாமி' என்ற சொல்லிலிருந்தே தோன்றியுள்ளது. ஆரம்பத்தில் மருத்துவம், வானவியல், சட்டம் போன்ற அறிவுத்துறைகள் பள்ளிவாசல்களிலேயே கற்பிக்கப்பட்டன. அங்கு ஆசிரியரைச் சுற்றிவர மாணவர்கள் வட்டமாக அமர்ந்து கற்பர். இதனைப் பின்பற்றிய மேற்குலகு, கற்பித்தலுக்கான விசேட கட்டடங்களை அமைத்து அவற்றுக்கு 'ஜாமி' என்ற அறபுச் சொல்லுக்குச் சமமான பெயரொன்றை வழங்கியது. Universitas என்ற அந்த லத்தீன் மொழிப் பெயர் நவீன ஆங்கிலத்தில் University எனப் படுகிறது. தனது கற்கை நெறியை வெற்றிகரமாக முடித்த முஸ்லிம் மாணவருக்கு வழங்கப்பட்ட பட்டம் 'இஜாஸாஹ்' எனப்பட்டது. இது Licence என்ற சொல்லுக்குச் சமமானது. சில ஐரோப்பிய நாடுகளில் கற்கைப் பட்டங்கள் இப்போதும் இப்பெயராலேயே அழைக்கப்படுகின்றன.

கடந்த காலத்தில் முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இடையில் ஏற்பட்ட பிளவுக்கு அரசியலே மூலகாரணம் என்பது இப்போது புரிந்திருக்க வேண்டும். அது இஸ்லாம் என்னும் சமயத்தின் தோற்றத்தின் காரணமாக ஏற்பட்டதல்ல. சில நூலாசிரியர்கள் சுட்டிக்காட்டுவதைப் போல இன்றைய பிரதான நாகரிகத்தை யூத - கிறிஸ்தவ நாகரிகம் என விபரிப்பது தவறானது. அது நிரூபிக்கப்பட்ட வரலாற்று உண்மைகளை மூடிமறைக்க எடுக்கும் முயற்சியாகும். இந்த நாகரிகத்தில் ஆரம்பகால முஸ்லிம்களின் செல்வாக்கு கணிசமானது. யூதர்களின் செல்வாக்கு அதைவிடப் பன்மடங்கு குறைந்ததே. எனவே இன்றைய நாகரிகத்தை யூத - கிறிஸ்தவ-இஸ்லாமிய நாகரிகம் என்று குறிப்பதே பொருத்தமானது. யூதர்களின் தீர்க்கதரிசியான மூஸாவை (மோஸஸ்) அல்குர்ஆன் எந்தளவுக்குக் கண்ணியப்படுத்துகிறது என்பதை இவ்வத்தியாயம் எடுத்துக் காட்டுகிறது. மூஸாவினதும் அவரது கூட்டத்தினரதும் போராட்டம் பற்றி அல்குர்ஆன் பல தடவைகள் மீட்டிக் கூறுகிறது. உண்மையில் எமது இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் பெயரை விட மூஸாவின் பெயர் கூடுதலான தடவைகள் இடம் பெற்றுள்ளது.

இஸ்மாயில் (Ishmael), இஸ்ஹாக் (Isaac), யாகூப் (Jacob), மூஸா (Moses), ஹாரூன் (Aaron), தாவூத் (David), ஸுலைமான் (Solomon), யூஸுப் (Joseph) ஆகிய நபிமார்களின் பெயர்கள் இஸ்லாமிய சமுதாயத்தினரிடையே மிகவும் பிரபல்யமானவை. முஸ்லிம்களுக்கும் யூதர்களுக்கும் இடையிலுள்ள சச்சரவுகள் சமய ரீதியானவை அல்ல; அவை வெறும் அரசியல் சார்பானவை என்பதையே இவையனைத்தும் சுட்டிக்காட்டுகின்றன. உண்மையில் வேறெங்கும் கிடைக்காத பாதுகாப்பும் கவனிப்பும் இஸ்லாமிய ராச்சியத்தில்தான் தமக்குக் கிடைத்தன என்பதை யூதர்கள்தான்

முதன்முதலில் ஒப்புக்கொள்வார்கள். ஸ்பெயினிலே இஸ்லாமிய ஆட்சி முடிவுக்கு வந்த போது, அங்கிருந்த யூதர்கள் புதிய ஆட்சி யாளர்களிடமிருந்து தப்பியோடி உதுமானியர்களின் இஸ்லாமிய ராச்சியத்துக்குள்தான் குடிபுகுந்தனர்.

இதே வகையில், இஸ்லாமிய மற்றும் கிறிஸ்தவ உலகங் களுக்கு இடையிலான சகிப்புத் தன்மை, கூட்டுறவு முதலிய பிணைப்புக்கள் மிக உறுதியானவையாக அமைய முடியும். இதற்கு நேர்மையான அரசியல் திட சித்தம்தான் தேவைப்படுகின்றது. இரண்டு சமயங்களுக்கும் இடையிலான வேறுபாடுகள் பகை மையைத் தோற்றுவிக்க வேண்டிய அவசியமில்லை. அவற்றுக்கு இடையே கணிசமான அளவில் காணப்படுகின்ற பொதுவான கரிசனைகள், முஸ்லிம்கள் மீது தொடர்ந்தும் இழைக்கப்பட்டு வருகின்ற அநீதிகளை முடிவுக்குக் கொண்டுவரப் போதுமானவை. இவை அனைத்துக்கும் முடிவுகட்டிவிட்டு யுகம் யுகமாக வளர்க் கப்பட்டு வந்துள்ள கசப்புணர்வையும் வெறுப்பையும் நீக்கி ஒன்றாகக் கைகோர்த்து நிற்பதற்குரிய காலம் வந்திருக்கிறது.

இந்நூலின் மிக நீண்டதும் மிக முக்கியமானதுமான நான் காம் அத்தியாயம் இஸ்லாத்தின் கட்டமைப்பைப் பகுப்பாய்வு செய்கிறது. இஸ்லாமிய சட்டத் தொகுப்பான ஷரீஆ, சமயத் தையும் அரசையும் பிரித்து நோக்குதல், ஜனநாயகம் என்பன பற்றி டாக்டர் ஹத்ஹூத் சுருக்கமாக ஆராய்கிறார். அடுத்ததாக அவர் இஸ்லாத்தின் ஆத்மீக அம்சத்தை அணுகியிருக்கிறார். வழிபாடு சம்பந்தப்பட்ட விடயங்களும் முஸ்லிம்களை ஒழுக்க நெறிப் படுத்தி, அவர்களில் அன்பையும் கருணையையும் தழைக்கச் செய்து, நன்மையான அனைத்தையும் விரும்பச் செய்த ஒழுக்கம் சார்ந்த போதனைகள் பற்றியும் இங்கு ஆராயப்பட்டுள்ளது. டாக்டர் ஹத்ஹூத் ஷரீஆ பற்றித் தந்துள்ள சுவாரஷ்யமான விளக்கத்திற்கு நானும் ஒரு விடயத்தைச் சேர்க்க விரும்புகிறேன். இரண்டு விடயங்கள் தொடர்பாக நாம் தெளிவான வேறுபாட் டைக் கண்டுகொள்ள வேண்டும்: ஒரு புறத்தில் குர்ஆன் தருகின்ற விதிகளும் கட்டளைகளும் (இவை எண்ணிக்கையில் குறைந்தவை) இறைதூதரின் நிரூபிக்கப்பட்ட கூற்றுக்களும் செயல்களும் இருக்கின்றன. இவையனைத்தும் புனிதமான, மாற்றப்பட முடி யாத சட்ட மூலாதாரங்களாக இருக்கின்றன. மறுபுறத்தில் காலத்துக்குக் காலம் ஒவ்வொரு பிரிவையும் சேர்ந்த முஸ்லிம் சட்ட வல்லுனர்களும் அறிஞர்களும் வழங்கியுள்ள பெருந்தொகை யான சட்ட அபிப்பிராயங்கள் உள்ளன. பிந்திய வகையான சட்டங்கள் முஸ்லிம்களை மார்க்க ரீதியாகக் கட்டுப்படுத்து வதில்லை. எனவே அவற்றைப் புனிதமானவை என்றோ மாற்றப்பட முடியாதவை என்றோ கருதுவதற்கில்லை.

இஸ்லாமியச் சட்ட மூலாதாரங்களுள் ஒன்றுதான் இஸ்லாமிய சட்டவல்லுனர்களால் 'மஸாலிஹ் முர்ஸலாஹ்' என அழைக்கப்படுவது. 'பொது நலன்' என இதனை ஓரளவுக்கு மொழிபெயர்க்கலாம். இறைதூதர் வாழ்ந்த காலத்தில் இருக்காத -அதன் காரணமாகக் குர்ஆன், ஸுன்னாஹ் என்பவற்றில் இடம் பெறாத - நிலைமைகள் தொடர்பாகப் புதிய விதிகளை விதிப்பதற்கு ஆரம்பகால சட்டவல்லுனர்கள் இந்த மூலாதாரத்தைப் பயன்படுத்தினார்கள். அத்தோடு மூலாதாரங்களில் தரப்பட்டுள்ளவற்றை வியாக்கியானம் செய்வதற்குரிய வழிகாட்டியாகவும் இந்தப் பொதுநலக் கோட்பாட்டை சட்ட வல்லுனர்கள் பயன்படுத்தினர். இன்னுஞ் சிலரோ இதனையும் தாண்டிச் சென்று மூலாதாரங்களோடு முரண்பாடு ஏற்படும் சந்தர்ப்பங்களில் பொதுநலத்திற்கு முன்னுரிமை வழங்கினார்கள். இது கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாத தீவிரபோக்குடைய முயற்சியாகும்.

மாறிவரும் காலத்தோடு இணைந்து முஸ்லிம் சமுதாயத்தின் தேவைகளில் ஏற்பட்டுவரும் மாற்றங்கள் காரணமாக உருவாகி வரும் புதிய பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதற்கான தேடல்கள் தொடர்கின்றன. எனவேதான் ஷரீஆ விருத்தியடைய வேண்டியிருக்கிறது. அதன் விருத்தி இறைதூதர் மறைந்து சிறிது காலத்தின் பின்னர் ஆரம்பமாகியது. இவ்வாறு மாற்றங்களை ஏற்படுத்துவதில் துணிந்து செயற்பட்ட ஒருவர்தான் இரண்டாவது கலீபாவான உமர் இப்ன் அல்கத்தாப். அவர்கள்.குர்ஆனிய ஏற்பாடுகள் சிலவற்றை இசைவாக அமைத்துக்கொள்ளும் அல்லது இடைநிறுத்தி வைக்கும் அளவுக்கு அவர் செயற்பட்டார். இந்த விடயம் பற்றி முழுமையாக விளக்கம் தருவதற்கு இந்த அறிமுகம் தகுந்த இடமல்ல. எனவே, சட்ட ரீதியாக நியாயப்படுத்தல் அல்லது இஜ்திஹாத் என்ற விடயம் தொடர்பாகக் காணப்படும் இருவகையான சிந்தனைப் போக்குகளுக்கிடையில் உள்ள வித்தியாசத்தைச் சுட்டிக் காட்டுவதற்கு மாத்திரம் எனது கருத்துக்களை மட்டுப்படுத்திக் கொள்கிறேன். அவற்றிலொன்று மூலாதாரக் கூற்றுக்களின் நோக்கத்தைப் பற்றி அதிகம் சிந்திக்காது அவற்றின் நேரடிக் கருத்தை ஏற்றுக்கொள்கிறது. மற்றையது சட்ட விதிகளின் பின்னால் மறைந்திருக்கும் நோக்கத்திலும் ஞானத்திலும் கூடிய கவனம் செலுத்துகிறது.

பனூகுரைளாக்களின் பிரதேசத்திலன்றிஅஸர் (பிற்பகல்) நேரத் தொழுகையை நிறைவேற்ற வேண்டாம் எனப் பணிக்கப்பட்ட படையினரின் சம்பவத்தை டாக்டர் ஹத்ஹூத் எடுத்துக் கூறியிருக்கிறார். குறிக்கப்பட்ட இடத்தை அடைய முன்னரே அஸர் தொழுகைக்குரிய காலம் முடிவுறப் போகும் நிலையில் அவர்களுள் சிலர் தமது தொழுகையை நிறைவேற்ற முடிவு

செய்தனர். இறை தூதரது பணிப்புரையின் கருத்து அவர்கள் தமது இலக்கை விரைவாகச் சென்றடைய வேண்டும் என்பதே; அவர்கள் தொழக்கூடாது என்பதல்ல என அவர்கள் கருதினர். ஏனைய படைவீரர்கள் இறைதூதரின் பணிப்புரையின் நேரடிக் கருத்தை ஏற்று தாம் சேர வேண்டிய இடத்தை அடையும் வரை தொழாமல் இருந்தனர். பின்னர் இறைதூதர் இரு சாராரின் கருத்துக் கொள்ளலையும் சரியென அங்கீகரித்தனர். அவையிரண்டும் சரியான அடிப்படையைக் கொண்டிருந்ததே இதற்குக் காரணம். இஜ்திஹாத் விடயத்தில் உமர் இப்ன் அல்கத்தாப்[2] அவர்கள் மூலாதாரங்களின் நேரடிக் கருத்தைவிட, சட்டவிதிகளின் நோக்கத் துக்கும் அவற்றின் பின்னாலிருந்த ஞானத்துக்கும் முதலிடம் வழங்கும் சிந்தனைப் போக்கைச் சார்ந்தவராகவே இருந்தார். சட்டவிதிகளுக்குக் கருத்துக் கொள்வதிலும் மாறிவரும் புதிய நிலைமைகளுக்கு ஏற்ப அவற்றை இசைவாக்கி விருத்திசெய்து கொள்ளும் விடயத்திலும் டாக்டர் ஹத்ஹூத் இந்த சிந்தனைப் போக்கையே கொண்டிருக்கிறார் என்றே எனக்குப் புலனாகின்றது.

இஸ்லாத்துக்கும் ஜனநாயகத்துக்கும் இடையிலுள்ள தொடர்பை ஆழமாக விளக்குவதில் நூலாசிரியர் திறமை காட்டு கிறார். குர்ஆன், ஸுன்னாஹ் ஆகியவற்றால் நிர்ணயிக்கப்பட் டுள்ள இஸ்லாமிய அரசாங்கத்தில் குறிப்பிட்ட வகையான யாப்பு முறையொன்று அடங்குவதில்லை. பதிலாக, எந்தவொரு யாப்பை யும் அமைத்துக்கொள்ளக்கூடிய அடிப்படைக் கோட்பாடுகளை யே மூலாதார நூல்கள் முன்வைத்துள்ளன. ஆட்சியாளர் மற்ற வர்களால் தெரிவுசெய்யப்பட வேண்டி இருப்பதோடு, சட்டங் களின் அடிப்படையில் மாத்திரமே அவர் ஆட்சி செய்ய வேண்டும். சமூகத்தின் விவகாரங்கள் பெரும்பான்மை முடிவுகளின்படியே முகாமை செய்யப்பட வேண்டும். 'ஷூரா' முறையின் சாராம்சம் இதுவே. இஸ்லாமிய அரசின் தலைவராக இறைதூதர் அவர்கள் இருக்கையில், இறை அறிவிப்புக்களினால் ஏவப்பட்டிராத பட்சத்தில், அன்னாருடைய செயல்கள் 'ஷூரா' முறையினா லேயே கட்டுப்படுத்தப்பட்டிருந்தன. சகல விடயங்களும் அவற்றின் கால, இட பரிமானச் சூழ்நிலைகளின் தேவைகளுக்கு ஏற்பத் தீர்மானிக்கப்படுவதன் மூலமே 'ஷூரா' நடைமுறைப் படுத்தப்

[2] எவ்வாறாயினும் கலீபா உமர் அவர்களின் முடிவுகள் தன்னிச்சைப்படி எடுக்கப்பட்டனவல்ல. மாறாகக் குர்ஆனின் கட்டளைகளைத் தான் விளங்கிக் கருத்துக்கொண்டதன் அடிப்படையிலும், நாட்டின் நடப்பு நிலைமைகளுக்கு ஏற்ப அவற்றைப் பிரயோகித்தல் தொடர்பாகவுமே அவை அமைந்திருந்தன. அவ்வாறான எல்லா சந்தர்ப்பங்களிலும் அவர் தனதுஆலோசனைச் சபையில் அங்கம் வகித்து அதில் பிரசன்னமாகியிருந்த கற்றறிந்த நபித் தோழர்களுடன் கலந்துரையாடி அவர்கள் அனைவரினது இணக்கத்தையும் பெற்றுக்கொண்டார்.

பட்டது. இந்த வகையில், மிக முக்கிய அம்சமான நெகிழ்வுத் தன்மை உறுதிசெய்யப்பட்டது. உமர் அவர்களுடைய கிலாபத் ஆட்சியின் போது அவர் தமது ஷூராவை (கலந்தாலோசனையை) பள்ளிவாசலிலேயே நடத்தினார். எடுத்துக்கொள்ளப்பட்ட விடயம் சிக்கலானதாகவும் துருவி ஆராயப்பட வேண்டியதாகவும் இருந்தபோது அவர் கலந்துரையாடலில் பங்குபற்றும் அனைவரையும் அழைத்துக்கொண்டு நகருக்கு வெளியேயுள்ள திறந்த வெளிக்குச் சென்றுவிடுவார். அங்கே அவர்கள் அவ்விடயத்தைப் பற்றி கலந்தாலோசித்து பெரும்பான்மை முடிவொன்றை அடையும் வரை பலநாட்களைக் கழிப்பார்கள். அவ்வாறு எடுக்கப்பட்ட முடிவுக்கு ஆட்சியாளர் கட்டுப்பட்டவராக இருப்பார்.

ஷூரா முறையைக் கொண்ட பெரும்பான்மை ஆட்சி முறையோடு மனித உரிமைகள் என்ற கருத்துப்படிவத்தையும் இஸ்லாம் நிலை நிறுத்தியது. வழிபாட்டு, பேச்சு மற்றும் பிரயாண சுதந்திரங்களோடு தேசத்தின் பிரஜைகளுக்கிடையிலான சமத்துவமும் உறுதிப்படுத்திப் பாதுகாக்கப்பட்டன. ஏனைய அரசுகள் இவற்றைத் தமது ஆட்சிமுறையில் பல சிரமங்களுக்கு மத்தியில் அறிமுகம் செய்வதற்கு வெகு காலத்துக்கு முன்பே இது நிகழ்ந்தது. துரதிர்ஷடவசமாக, இஸ்லாம் தோன்றியது முதல் பல மாற்றங்கள் நிகழ்ந்திருக்கின்றன. இஸ்லாமிய அரசியல் யாப்பு முறையின் தூய்மையான பண்புகள் பல தூர்ந்துபோகவிடப்பட்டுள்ளன. சில இஸ்லாமிய நாடுகளை நோக்கும் போது இஸ்லாத்துக்கும் ஜனநாயகத்துக்கும் இடையில் கடும் பகை இருப்பது போன்ற உணர்வுதான் ஏற்படுகிறது.

முஸ்லிம்கள் இளவயதிலேயே கற்றுக்கொள்கின்ற இஸ்லாத்தின் ஐந்து தூண்களையும் பற்றி நூலாசிரியர் தெளிவாகவும் சுருக்கமாகவும் விளக்கியிருக்கின்றார். ஒரு முஸ்லிம் வழிபாட்டு விடயத்திலும், அன்றாட வாழ்க்கையில் இறைவனின் ஏவல்களை ஏற்று விலக்கல்களைத் தவிர்ந்துகொள்ளும் விடயத்திலும் தன்னைச் சிருஷ்டித்தவனுடனான தன் உறவை எப்படி நிறைவுசெய்ய முயற்சிக்கின்றான் என்பதை முஸ்லிம் அல்லாத வாசகருக்குத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுவதே இதன் நோக்கமாக இருக்கிறது. ஒரு முஸ்லிமின் வாழ்க்கையில் அவன் மற்றவர்களுடன் எப்படி நடந்துகொள்கிறான் என்ற அம்சமே அவதானிப்பவரின் கவனத்தை முதலில் ஈர்க்கின்றது. இங்கு, இஸ்லாம் விதித்துள்ள ஒழுக்க நியமங்கள் உன்னதமானவை; வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் ஊடுறுவிச் செல்பவை. இவைதான் ஒரு முஸ்லிமை தாராளத்தன்மையும், சகிப்புத் தன்மையும் தன்னடக்கமும் உள்ளவனாக உருவாக்குவதோடு, தனது உற்றார் உறவினர்க்குச் செய்வது போலவே சக முஸ்லிம்களுக்கும் நல்லது செய்ய வேண்

டும் என முயல்பவனாக அவனை மாற்றுகிறது. குர்ஆனிலிருந்தும் ஸுன்னாஹ்விலிருந்தும் அருமையான உதாரணங்களை நூலாசிரியர் எடுத்துக் கூறியிருக்கின்றார். இவை பல நூற்றாண்டுகளாக முஸ்லிம்கள் மீது செல்வாக்குச் செலுத்தி வந்துள்ளதோடு, இஸ்லாம் என்பது எப்படிப்பட்டது என்ற தெளிவான படத்தை முஸ்லிம் அல்லாதோருக்கு வழங்கக் கூடியனவாகவும் இருக்கின்றன.

உலகம் முழுவதிலும் அதிக கருத்து வேறுபாடுகளை ஏற்படுத்தியுள்ள அரசியல் மற்றும் சமூக விவகாரங்கள் பற்றியதாக ஐந்தாம் அத்தியாயம் அமைந்துள்ளது. நூலாசிரியரின் கருத்துக்களும் அவர் முன்வைத்துள்ள தீர்வுகளும் அவர் எந்த அளவுக்கு ஆழமாக இஸ்லாமிய ஷரீஆவையும் அது அறிமுகப்படுத்திய ஒழுக்கக் கோட்பாடுகளையும் விளங்கிக்கொண்டிருக்கிறார் என்பதை எடுத்துக் காட்டுகின்றன. நூாசிரியரின் கருத்துக்கள் மற்றும் தீர்வுகள் தொடர்பாக சில முஸ்லிம்கள் வேறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருக்கக்கூடும். எனினும் அவ்வாறான கருத்து வேறுபாடுகளை இஸ்லாம் வரவேற்கின்றது. இந்த விடயத்தில் இறைதூதர் அவர்கள் எமக்கு வழங்கியுள்ள விதி இதுதான்: எவரொருவர் உண்மையைத் தேடுவதில் அல்லது ஒரு பிரச்சினைக்குத் தீர்வைத் தேடுவதில் தன் உள்ளத்தால் முயற்சி செய்து சரியான விடையைக் கண்டுகொள்கிறாரோ அவருக்கு இரண்டு வெகுமதிகள் கிடைக்கும். அதேவேளை, தன் உள்ளத்தால் முயற்சித்து உண்மையைக் கண்டுகொள்ளத் தவறியவருக்கு ஒரு வெகுமதி கிடைக்கும். இந்த வகையில், மூலாதாரங்களில் உள்ள விடயங்களின் நேரடிக் கருத்தை மட்டும் நோக்காமல் அவற்றில் அடங்கியுள்ள உண்மையான நோக்கங்களையும் ஞானத்தையும் கண்டுகொள்வதைத் தேர்ந்துகொண்டுள்ள டாக்டர் ஹத்ஹூத் அவர்களுக்கு இரண்டு வெகுமதிகளும் கிடைக்கும் என்றே என் மனம் கூறுகிறது.

# முகவுரை

எகிப்தை பிரிட்டிஷார் கைப்பற்றியிருந்த காலத்தில் நான் அங்கு பிறந்தேன். இது எனது வாழ்க்கையில் முக்கிய பங்களிப்பொன்றைச் செய்தது எனலாம். ஏனெனில் சிறுபிள்ளையாக, எனக்கு நினைவு தெரிந்த காலம் முதல் “நான் உன்னைக் கர்ப்பமுற்றிருந்த போது உன்னை ஹஸ்ஸான் என அழைப்பேன் எனவும் எகிப்திலிருந்து பிரிட்டிஷ்காரரை வெளியேற்றுவதற்காக உன்னை அர்ப்பணிப்பேன்’ என்றும் வாக்குறுதியளித்திருக்கிறேன் என எனது தாயார் அடிக்கடி தூண்டுவது நினைவிலிருக்கிறது. அது மிக வலிமையாக என்னுள் பதிந்துவிட்டது. அதன் விளைவு? எனக்கு கவலைகளற்ற பிள்ளைக் காலமோ குற்றங்குறும்புகள் புரியும் வாலிபமோ இருக்கவில்லை. எனது வாழ்க்கைக்கு ஒரு காரணமும் நோக்கமும் இருந்தது.

எனது தலைமுறையினரும் முடியுமான வழிகளில் பிரிட்டிஷாருக்கு எதிராகப் போராடுவதில் தமது முன்னைய தலைமுறையினரைப் பின்பற்றினர். பிரிட்டிஷாரையும் அவர்களது அடிவருடிகளான எகிப்திய அரசாங்கங்களையும் பொறுத்தமட்டில் நாம் பயங்கரவாதிகள். நாட்டின் ஏனைய மக்களுக்கும் உலகுக்கும் நாங்கள் ‘சுதந்திரப் போராளிகள்’ ஆனோம். பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் முடிவைக் காணக் கூடிய பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பிற்காலத்தில் எனது கல்விக்காக நான் பிரிட்டனில் தங்கியிருந்தபோது என் மனதில் பிரிட்டிஷ் மக்கள் மீது அன்பு பாராட்டவும் அவர்களை மெச்சவும் ஆரம்பித்தேன். ஒரு நாட்டின் மக்கள் அவர்களது ஆட்சித்தலைவர்களினதும் அரசியல் வாதிகளினதும் வெளியுறவுக் கொள்கையிலிருந்து அதிகம் வேறுபட்டவர்களாக இருக்கலாம் என்பதை நான் உணர்ந்துகொண்டேன். பின்னர், நான் அமெரிக்காவை எனது வதிவிடமாகத் தேர்ந்து அங்கு வந்தபோது இதே நிலை மீண்டும் ஏற்பட்டது.

எனது கல்லூரி வாழ்க்கை தீவிர மன உறுதியினால் உந்தப்பட்டது. நான் மகப்பேற்றியல் மற்றும் பெண் நோயியல் துறையில் உயர் தகைமைகளைப் பெற்று முன்னேறியதோடு உறுதியான கல்விசார் அடித்தளமொன்றை உறுதிப்படுத்தும் நோக்கோடு ஸ்கொட்லாந்தின் எடின்பரோ பல்கலைக்கழகத்தில் எனது Ph D (டாக்டர்) பட்டத்தையும் பெற்றுக்கொண்டேன். எனது ஆய்வின் தலைப்பு ‘Studies in Normal and Abnormal Human Embryogenesis’ (சாதாரண மற்றும் அசாதாரண மனித முளைய உருவாக்கம் பற்றிய கற்கை) என்பதே. பல்கலைக்கழகப் பேராசிரியராக, எனது பிரிவுத்தலைவராக, மருத்துவராக, விஞ்ஞானியாக, போதனாசிரியராக வந்து எனது தொழில்

வாண்மைத் துறையில் பிராந்திய, தேசிய மற்றும் சர்வதேச மட்டங்களில் உயர்நிலையை அடைவதன் மூலம் எனது வாழ்க்கைக் கனவுகளை நிறைவேற்றித் திருப்தி கண்டேன்.

எவ்வாறாயினும் இவையனைத்தும் நான் சுவாசிக்கும் இரு நுரையீரல்களிலும் ஒன்றைத்தான் குறித்துநிற்கின்றன. சமயத்தை - பிரதானமாக எனது சமயத்தையும் அத்தோடு ஏனையவற்றையும் - கற்பதே எனது அடுத்த வேட்கையாக இருந்தது. சமயத்துறையில் நான் வாசித்தறிந்தவை சமயத்துறை மாணவர்கள் கற்பவற்றைவிட எந்தவகையிலும் குறைந்தவை அல்ல. எனினும் எனது விஞ்ஞான, மருத்துவப் பின்னணியானது எனது சமயத்தைப் பற்றி நான் ஆழமாகச் சிந்திப்பதற்கும் அதனைப் புரிந்துகொள்வதற்கும் அதனை விளக்குவதற்கும் உதவும் பெறுமதிமிக்க கருவியாக அமைந்துவிட்டது.

இரு கலாச்சாரங்களையும் இரு மொழிகளையும் அறிந்திருந்த நான் மேற்குலகில் இஸ்லாம் தவறாகவே புரியப்பட்டுள்ளது என்பதை உணர்ந்துகொண்டேன். (இதற்கான பொறுப்பின் ஒரு பகுதியை முஸ்லிம்களே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் சிலவேளைகளில் உணர்கிறேன்) துணிந்து இஸ்லாத்தின் மீத அவதூறு கூறுவதும் மாசு கற்பிப்பதும் அரசியல், ஊடகங்கள், மற்று பொழுதுபோக்குத் துறைகளைச் சேர்ந்த சில குழுவினரின் நோக்கமாகவும் தொழிலாகவும் மாறியிருக்கிறது.

ஒருவரை உள்ளது உள்ளபடியே அறியப்படவேண்டும் என்பது அடிப்படை மனித உரிமைகளுள் ஒன்று என நான் உறுதியாக நம்புகிறேன். அத்தோடு கண்மூடித்தனமான கருத்துக்களினதும் பொய்களினதும் அடிப்படையில் அன்றி - திருத்தமான புரிந்துணர்வின் அடிப்படையில்தான் மக்களிடையே சமாதானத்தையும் சமரசத்தையும் நல்லெண்ணத்தையும் ஏற்படுத்த முடியும் என்பதே எனது நம்பிக்கை. அப்போதுதான் மக்கள் உண்மையான ஒத்த தன்மைகளையும் வேறுபாடுகளையும் புரிந்துகொள்வதோடு அவ்வேறுபாடுகளை மதித்து அவற்றைச் சகித்துக்கொண்டு அவர்களோடு வாழ்வதற்கு இணங்குவார்கள்.

இப்புவியில் ஒரு பில்லியனுக்கும் மேற்பட்ட எமது அயலவர்களின் சமயமான இஸ்லாம் சமயத்தின் சார்பாக நாம் மேற்குறித்த நோக்கில் செய்யப்படும் ஒரு பணிவான பங்களிப்புத்தான் இந்நூல்.

நான் இதனை அன்புடன் உங்களுக்குச் சமர்ப்பிக்கின்றேன்.

அன்பு அறைவனிடமிருந்து வருவது. வெறுப்போ தீய சைத்தானுக்கு உரியது.

*ஹஸ்ஸான் ஹத்ஹூத்*

# அத்தியாயம் ஒன்று

## இறைவன்?

“நீ இறைவன் இருக்கிறான் என நம்புகிறாயா?” என நான் எனது பேத்தியிடம் கேட்டேன். “நிச்சயமாக!” எனச் சட்டெனக் கூறிய அவள் மூச்சு வாங்கியவாறே “அம்மாவும் அப்படிச் சொல்கிறார்” என்றாள். அடுத்து நான் அவளுடைய புத்தகங்களுள் ஒன்றைத் தூக்கிப்பிடித்துக்கொண்டு “இந்தப் புத்தகத்தை எழுதியது யார்?” எனக் கேட்டேன். உடனடியாக அவள் அதை எழுதியவரின் பெயரை வாசித்துக்காட்டினாள். விவாதத்தைத் தொடரும் நோக்கில் நான் கேட்டேன் “நூலாசிரியரின் பெயரைக் கொண்ட முன்பக்கத்தை கிழித் தெறிந்துவிட்டு, இந்தப் புத்தகம் எழுத்தாளர் யாருமின்றி தன்னைத் தானே எழுதிக்கொண்டது என நான் கூறினால் நீ என்ன சொல்வாய்?” என்று கேட்டேன். அவளது அழுத்தமான பதில் “அப்படியிருக்க முடி யாது” என்பதாகவே அமைந்தது. அதனைத் தொடர்ந்து எமது கலந்துரையாடலானது ஒரு புத்தகம் எப்படி ஓர் எழுத்தாளர் இருப்பதை நிரூபிக்கிறதோ அதே போன்று ஒரு சிருஷ்டியானது ஒரு சிருஷ்டி கர்த்தா இருப்பதை நிரூபிக்கிறது என்ற தர்க்கரீதியான முடிவினை ஏற்படுத்தியது.

நெளிவு வளைவில்லாத இந்த எளிய கருத்துப்படிவம்தான் ஒரு முஸ்லிமின் சிந்தனையின் மையக் கருத்தாக இருக்கிறது. இதே போன்ற அறிவுரீதியான ஒரு செயன்முறைதான் எமது குலத்தந் தையாரான இப்றாஹீம் (நபிமார்களின் தந்தை என இவர் இஸ்லாத்தில் அழைக்கப்படுகிறார்) இறைவனைக் கண்டுகொள்வதற்கு வழிவகுத் தது எனலாம். தமது மக்கள் கூட்டத்தினர் தாமே செதுக்கி வழி படுகின்ற சிலைகளின் பொய்மையை திட்டவட்டமாக அறிந்துகொண்ட

அவர் நட்சத்திரங்கள், சந்திரன், சூரியன் போன்ற இயற்கைப் பொருட்கள் இறைவனாக இருக்குமோ எனச் சிந்திக்க ஆரம்பித்தார். எனினும் அவை யாவும் குறித்த சில விதிகளுக்கு அடிபணிந்து செயற்படுவதைக் கண்டுகொண்ட அவர் அந்த விதிகளை அமைத் தவன் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார். இது பற்றி குர்ஆன் மிகச் சுவைபட விளக்குகிறது.

*''மேலும் வானங்களுடையதும் இன்னும் பூமியுடையதுமான (நம்முடைய) ஆட்சியை நாம் இப்றாஹீமுக்கு இவ்வாறே காண்பித்தோம். அவர் உறுதிகொண்டவர்களில் ஆவதற்காக (இவ்வாறு செய்தோம்). ஆகவே, அவரை இரவு மூடிக்கொண்ட போது ஒரு நட்சத்திரத்தை அவர் கண்டுவிட்டு ''இது என் னுடைய இரட்சன்'' எனக் கூறினார். ஆனால் அது மறைந்த போது ''மறையக்கூடியவற்றை நான் விரும்பமாட்டேன்'' எனக் கூறிவிட்டார். பின்னர் சந்திரன் உதயமாவதைக் கண்டபோது ''இது என்னுடைய இரட்சகன்'' எனக் கூறினார். அதுவும் மறை யவே ''என் இரட்சகன் என்னை நேரான வழியில் செலுத்தா விடில் வழிதவறிய சமூகத்தாரில் (ஒருவனாக) நிச்சயமாக நான் ஆகிவிடுவேன்'' என்று கூறினார். பின்னர் சூரியன் உதய மாவதைக் கண்ட போது, ''இது என்னுடைய இரட்சகன்; இது மிகப் பெரியதாகும்'' எனக் கூறினார். பின்னர் அதுவும் மறைய வே, அவர் ''என் சமூகத்தோரே! நீங்கள் (ஒரே இறைவனுக்கு) இணையாக்குபவைகளிலிருந்து நிச்சயமாக நான் நீங்கியவன்'' என்று கூறினார். வானங்கள் மற்றும் பூமியை எவன் படைத் தானோ அவனின் பக்கமே சாய்ந்தவனாக நிச்சயமாக நான் எனது முகத்தை திருப்பிவிட்டேன். (அவனுக்கு) இணைவைப் போர்களில் (ஒருவனாக) நான் இல்லை'' (என்று கூறினார்) (6:75-79)*

எனினும் இறைவன் பற்றிய கருத்து நாம் கற்பனை செய்யும் அளவுக்கு ஜனரஞ்சகமானதாக இல்லை. முன்னைய கம்யூனிஸ்ட் நாடுகளைச் சேர்ந்தவர்கள் மட்டுமன்றி - அமெரிக்காவிலும் ஐரோப் பாவிலும் உள்ள எனது கல்விசார் வட்டங்களைச் சேர்ந்த சக விஞ்ஞானிகளில் பலர்கூட - நாஸ்திகர்களாக இருப்பதைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன். என்னுடைய வாழ்க்கையின் ஒரு கட்டத்திலும் அப்படியொருவனாக இருக்க நான் பெருமுயற்சி செய்தேன். இரண்டாம் உலகப் போரைத் தொடர்ந்து வந்த காலத்தில் எனது தாய் நாடான எகிப்தில் பல்கலைக்கழக மாணவரிடையே அப்படியொரு போக்குக்

காணப்பட்டது. நானும் எனது சமகூட்டத்தினரோடு அனுசரித்துப் போக முயற்சித்தாலும் இறைவனற்ற அண்டசராசரம் பற்றிய கருத்துப்படிவத் தினுள் என்னைப் பிரயோகித்துக்கொள்ள முடியவில்லை. ஒருநாள் மாலையில் சொல்லொன்றின் பொருளை அறிந்துகொள்வதற்காக அகராதியைத் திறந்ததோடு அந்தப் பிரச்சினை முடிவுகண்டது. அப் போது எனக்கு இப்படியொரு சிந்தனை உதித்தது: இந்த அகராதியில் எந்தப் பிசகுமின்றிச் சொற்கள் ஒழுங்குபடுத்தப்பட்டிருப்பதற்கு ஓர் அச்சகத்தில் ஏற்பட்ட வெடிப்பொன்றே காரணம் என்றும் அதன் விளைவாக காற்றில் சிதறிப் பறந்த ஈய எழுத்துக்கள் யாவும் அகர வரிசைப்படி ஒழுங்காக வந்து சொற்களாக பதிந்தவிட்டதாக யாராவது சொல்கிறார்கள் என எடுத்துக்கொள்வோம்... அதனை என் உள்ளம் ஏற்றுக்கொள்ளுமா?... இல்லை.

முற்றுமுழுதான சிருஷ்டிகர்த்தா அவன் என்றால் எதுவும் அவனைவிட எந்தவகையிலும் அதிகமானதாக இருக்கமுடியாது அல் லது அவன் எதனையும்விடவும் குறைவானவனாக இருக்கமுடியாது. அவனுக்கு வரையறைகள் இருந்தால் முழுமுதலானவன் என்றும் முழுக்காரணகர்த்தா என்றும் தத்துவவியல் குறிப்பிடுபவனுக்கு அது பொருந்திவராது. அவனுடைய சகல பண்புகளினதும் பரிமாணங்களை முடிவில்லாதவை (முடிவிலி) யாகவே குறிப்பிடமுடியும். முடிவிலி என்பதை கணிதரீதியான உண்மையாகக் கணிதசாஸ்திரம் ஏற்றுக் கொள்வதோடு அதற்கு ஒரு குறியீட்டையும் வழங்கியிருக்கிறது. உண்மையில் முடிவிலி என்றால் என்ன என்பதை எம்மால் சரிவரப் புரிந்துகொள்ளமுடியாது. இது இயற்கையானதே. ஏனெனில் நாங்கள் முடிவுள்ளவர்கள். முடிவுள்ளவரால் முடிவில்லாததைப் புரிந்துகொள்ள முடியாது. எனவே இறைவனால் எம்மைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் எமது முடிவுள்ள தன்மை காரணமாக எம்மால் அவனைப் புரிந்துகொள்ள முடியாதிருக்கிறது. அவன் அவனது படைப்புக்களி னூடாக வெளிப்படுத்தியுள்ள அறிகுறிகளைக் கொண்டே நாம் அவனை அறிந்துகொள்கின்றோம். கணித உண்மையின்படி முடிவிலியை ஒன்றாலோ இரண்டாலோ மூன்றாலோ அல்லது அதைவிடக் கூடிய தாலோ பிரிக்கமுடியாது. இதன்படி பார்த்தால் யூதர்களுக்கு ஒருவனும் கிறிஸ்தவர்களுக்கு இன்னொருவனும் முஸ்லிம்களுக்கு வேறொரு வனும், இந்துக்களுக்கு இன்னொருவனும் நாத்திகர்களுக்கு இன் னொருவனுமாக இறைவன் இருக்கமுடியாது. இறைவன் ஒருவனே. இந்த இறைவனின் ஏகத்துவமே இஸ்லாமிய சமயத்தினதும் முஸ் லிம்களின் நம்பிக்கையினதும் மூலவேராக இருக்கின்றது.

இறைவனைக் குறிப்பதற்கு ‘அவன்’ என்ற சொல் பயன் படுத்தப்பட்டாலும் அது ஆண்பாலைக் குறிப்பதல்ல. இறைவன் அப்படிப் பட்ட பாகுபடுத்தல்களுக்கு அப்பாற்பட்டவன். இங்கு பிரச்சினைக் குரியதாக இருப்பது மொழிப் பயன்பாடே. அது மட்டுப்படுத்தப்பட்ட தாகவும் தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்களுக்கு உட்பட்டதாகவும் இருக்கிறது. மொழிகளைப் பற்றிக் குறிப்பிடும் போது கவனிக் கப்படவேண்டிய விடயம் என்னவெனில் ஆங்கிலம் உட்படப் பல மொழிகளிலே ஒருவனான முழுமுதற் சிருஷ்டிக்கர்த்தாவைக் குறிப்பதற்கு ஏற்ற சொல்லொன்று இல்லை. எனவேதான் மனிதனால் உருவாக்கிக்கொள்ளப்பட்ட கடவுள்களிலிருந்து ஏக இறைவனைப் பிரித்துக்காட்டுவதற்காக God என்ற சொல் capital எழுத்துடன் எழுதப் படுகிறது. ஏனைய மொழிகள் அவனுக்கு சிறப்புப் பெயர்களை வழங்கியிருக்கின்றன. அரபு மொழியில் அது ‘அல்லாஹ்’ ஆகும். ஆங்கிலத்தில் God என்றோ பிரெஞ்சு மொழியில் Dieu என்றோ ஹீப்ரூ மொழியில் Adonai என்றோ அல்லது அரபியில் அல்லாஹ் என்றோ வாசிக்கும் ஒருவர் மனக்குழப்பம் அடையவேண்டியதில்லை. எனது சொற்பொழிவுகளின் போது “நீங்கள் இறைவனை வணங்கு வதாகச் சொல்கிறீர்களே அப்படியாயின் அல்லாஹ் யார்?” எனச் சபையினர் கேட்ட சந்தர்ப்பங்கள் பல. சில நேரங்களில் அவர்கள் இவ்வாறு கேட்பது கள்ளமற்ற நெஞ்சத்தோடு அல்ல. “முஸ்லிம்கள் இறைவனை வணங்குவதில்லை. அவர்களுக்கு ‘அல்லாஹ்’ என்ற பெயருடைய வேறு கடவுள் இருக்கிறார்” என விஷயமறிந்த அறி ஞர்கள் கூடப் போதித்துவருகின்றனர்.

# அத்தியாயம் இரண்டு

## அதற்கென்ன?
## இஸ்லாம் என்னும் நம்பிக்கைக் கோட்பாடு

இறைவன் இருக்கிறான்.

சிலர் "அதற்கென்ன?" எனக் கேட்பார்கள். இறைவன் இருக்கிறானா அல்லது இல்லையா என்பது பற்றி உண்மையில் நாம் அலட்டிக்கொள்ள வேண்டுமா? அல்லது அது வெறுமனே இறையியலாளர்களினதும் தத்துவ வித்தகர்களினதும் கவனத்தை ஈர்க்கின்ற ஓர் அறிவுத்துறை சார்ந்த கேள்வி மட்டுமா? மனித சமூகத்தைப் பொறுத்தமட்டில் இறைவன் இருப்பதும் இல்லாமலிருப்பதும் என்ன சம்பந்தத்தைக் கொண்டிருக்கிறது? அவன் இருப்பதன் (அல்லது இல்லாதிருப்பதன்) செயல்முறை சார்ந்த சம்பந்தம் என்ன?

இறைவன் இருக்கிறான் என்றும் அவனே முற்றுமுழுதான சிருஷ்டிகர்த்தா என்றும் எடுத்துக்கொண்டு, அவனுடைய படைப்புக்களைப் பற்றி ஆராய்வோமானால் நாம் அறிந்துவைத்துள்ள மற்றெல்லாப் படைப்புக்களையும்விட மனிதர்களாகிய நாம் தெளிவாக வேறுபட்டு நிற்பதைக் காணலாம். அணுவிலிருந்து வெள்ளுடுத் தொகுதிகள் வரை அனைத்தும் அவற்றை ஆளும் விதிகளுக்குக் கட்டுப்பட்டே இருக்கின்றன. எம்மை ஆக்கியுள்ள அணுக்களும் மூலக் கூறுகளும் இயற்கையில் காணப்படும் அணுக்களையும் மூலக்கூறுகளையும் போன்று அதே விதிகளைப் பின்பற்றுகின்றன. <u>அவை மேலும் சிக்கலாகி நியூக்ளிக் அமி</u>லத்தை[1] உருவாக்கும்

[1]உயிரின் அடிப்படை ஆக்கக்கூறான இது தன்னைத்தானே பிரதிபண்ணிக்கொள்ளக்கூடியது

போது வேதியியல் உயிரியலோடு சங்கமிக்கின்றது. அந்நிலையிலும் அது தனக்கேயுரிய விதிகளுக்கு கட்டுப்பட்டே செயற்படுகிறது. இந்நிலையில் நாம் வியக்கத்தக்க வகையில் உயர்வகை விலங்கு களை ஒத்தவர்களாக இருக்கின்றோம்.

நான் பள்ளிக்கூடத்திற் கற்கும் போது விலங்கு ரகசியத்தின் தலைவன் மனிதனே என எமக்குப் போதிக்கப்பட்டது. இருந்தாலும் நாம் எம்மை ஒரு விலங்காக அங்கீகரிப்பதில்லை. உயிரியல் ரீதியாக சுற்றோட்டம், சுவாசம், சமிபாடு, அனுசேபம், நோய் எதிர்ப்புச்சக்தி, இடப்பெயர்ச்சி, புலனுணர்வு, இனப்பெருக்கம் போன்றவற்றுக்கான தொகுதிகளை விலங்குகளைப் போன்றே நாமும் கொண்டிருந்தாலும் -எம்மை மனிதப் பிறவிகளாக ஆக்கியிருப்பது எமது உயிரியல் மாத்திரமல்ல என்பதை நாம் அறிவோம். நாம் அறிந்துவைத்துள்ள உயிர் இனங்களுள் நாம் மாத்திரமே உயிரியலுக்கு அப்பாலும் சென்றவர்களாக இருக்கிறோம். நாம் உயர் உயிரியற் (supra bio-logic) பிறவிகள். எமது நடத்தைக்கு முற்றுமுழுதாக வழிகாட்டுவது எமது உயிரியல் அல்ல. எம்மிடமும் அதே இயல்பூக்கங்களும் உந்ததல்களும்தான் இருக்கின்றன. எனினும் இவற்றுக்கு விலங்குகள் எளிமையான ஒரு படிமுறையிலேயே எதிர்வினை காட்டுகின்றன. ஆனால் எமது எதிர்வினையோ ஒரு சிக்கலான பொறிமுறையினால் சீர்படுத்தப்படுகிறது. அது உள்ளார்ந்த புரோகிராமிங் பண்ணப்பட்ட நிலைமையைக் கடந்து நிற்கிறது. நாம் எமது உயிரியலை விலங்குகளோடு பகிர்ந்துகொண்டவர்களாக இருக்கலாம். எனினும் நிச்சயமாக நாம் உயிரியலைக் கடந்து பெறுமானங்கள், கோட்பாடுகள், ஆத்மீகம் ஆகியவற்றைக் கொண்ட ஒரு வட்டத்துக்குள் நுழைந் திருக்கிறோம். எனவே நாம் உயிரியல் கொள்கலனிற்குள் (எமது உடல்களில்) அடைக்கப்பட்டுள்ள ஆத்மீகம் சார்ந்த பிறவிகளாக இருக்கிறோம் என்பதே உண்மை. எங்களில், தமது உயிரியற் கூறின் தேவைகளையும் (ஆசைகளையும் கூட) நிறைவேற்றுவதிலேயே கண் ணுங்கருத்துமாக வாழ்ந்து ஆத்மீக அம்சத்தில் குறைவுபட்டு நிற்ப வர்களை வேண்டுமானால் விலங்குகள் என அழைக்கமுடியும்.

மனிதனைப் பற்றி ஆராயும்போது எமது இனத்துக்கு மட்டுமே சிறப்பியல்பான நான்கு முக்கியமான பண்புகளை எமது சிருஷ்டிகர்த்தா மனிதர்களாகிய எமக்கு அருளியிருக்கிறான் என்பதை உணர்ந்து கொள்ளலாம். அறிவு, நன்மை-தீமை பற்றிய விழிப்புணர்வு, தேர்ந் தெடுப்பதற்குரிய சுதந்திரம், பொறுப்புக்கூறுதல் என்பனவே அவை.

**அறிவு**: எமக்கு அறிவின் மீது நாட்டம் இருக்கிறது. அதனை அதிகமதிகம் தேடிக்கொள்ள நாம் முயற்சிக்கிறோம். அவதானிக்கவும், கற்பனைசெய்யவும், பகுத்தறிவுரீதியாக நோக்கவும், பகுத்தாய்ந்து பார்க்கவும், பரிசோதனை செய்து தீர்மானிக்கவும் கூடிய ஆற்றல் எமது மூளைக்கு இருக்கிறது. நாம் நடந்து முடிந்தவற்றையும் நடக் கப்போகும் விடயங்களையும் அறிந்துகொள்ளவும் எம்மைச் சூழவுள்ள இயற்கையின் ரகசியங்களைப் புரிந்துகொள்ளவும் ஆர்வம் காட்டு கிறோம். அத்தோடு எமது அறிவினைப் பல்வேறு வழிகளில் பதிவு செய்யவும் வெளிப்படுத்தவும் செய்கிறோம்.

**நன்மை - தீமை பற்றிய விழிப்புணர்வு**: நல்லது எப்போதும் கவர்ச்சியானதாகவும் தீமை வெறுப்பூட்டுவதாகவும் இருக்கும் என நாம் எதிர்பார்க்கமுடியாது. மனித வாழ்க்கையின் சிக்கலான தன்மை, ஆலோசனைகளுக்கு இணங்கக்கூடிய மனித மனம், பகுத்தறிவுரீதி யாகச் சிந்திக்க நாடும் அதன் இயல்பு என்பவற்றோடு தீமைகளின் மனதைத் தூண்டிவிடும் தன்மையும் நிலைமையை மேலும் சிக்கலாக் குகிறது. எனினும் நன்மை-தீமை பற்றிய விழிப்புணர்வானது எமது வாழ்க்கையின் உள்ளாந்த பகுதியொன்றாக இருக்கிறது.

**தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரம்**: எமது சிருஷ்டிகர்த்தா எமது மனித இனத்தக்கு அருளியுள்ள சுயாதிக்கத்திலிருந்தே தேர்ந் தெடுப்பதற்கான எமது சுதந்திரம் உருவாகியிருக்கிறது. இந்த சுதந்திரம் முற்றுமுழுதானது அல்ல என்பது வெளிப்படை. அது ஒரு மட்டுப்படுத்தப்பட்ட வட்டத்துக்குள்ளேயே விரிந்திருக்கிறது. அதற் கப்பால் அது செயலற்றுப்போய்விடும். எனினும் இந்த வட்டத்திற்குள், சுதந்திரம் என்பது மனித வாழ்க்கையில் அதிமுக்கியத்துவம் பெறு கின்ற ஒரு பிரதான பெறுமானமாக விளங்குகிறது.

**பொறுப்புக் கூறல்**: மனிதனின் பொறுப்புக்கூறலுக்கு முன்னேற் பாடாக அமைந்திருப்பது அவனுக்கிருக்கும் தேர்ந்தெடுப்பதற்கான சுதந்திரமே. எமது தேர்வுகளுக்கு நாமே பொறுப்பு என்பதையும் அவற்றுக்கு நாம் பொறுப்புக்கூறவேண்டும் என்பதையும் நாம் உள்ளூற உணர்கின்றோம். இது சமயத்தின் கண்டுபிடிப்பு அல்ல. ஏனெனில் ஒரு நாத்திக சமூகத்தில்கூட போக்குவரத்து சமிக்ஞை விதிகளை முறித்தால் உங்களுக்கு தண்டம் விதிக்கப்படத்தான் செய்யும். சமயத்தைப் பொறுத்தமட்டில், ஒருவர் சுதந்திரமாக இல்லாதபட்சத்தில் அவர் நியாயத்தீர்ப்பையோ, நியாயத்தீர்ப்பு நாளையோ எதிர்கொள்ளக் கூடாது என்பதையே பொறுப்புக்கூறல் குறிக்கிறது. எனவே, சமய நோக்கிலும் சமயம் சாராத நோக்கிலும் சுதந்திரம் என்பது மனிதப்

பிறவியின் கருவாகவும் சாரமாகவும் இருக்கிறது. தனது நடத்தைக்குத் தானே பொறுப்பேற்கவேண்டிய ஓர் இனத்தை இறைவன் சிருஷ்டித் திருக்கிறான். இந்தவகையில் சுதந்திரத்தைத் தனது தரக்குறியீடாகக் கொண்ட ஓர் இனம் இறைவனால் படைக்கப்பட்டிருக்கிறது. எமது தேர்வுக்கும், நம் செல்வாக்குச் செலுத்தும் வல்லமைக்கும் அப்பாற் பட்ட நிகழ்வுகளே விதி எனப்படுகிறது. எனவே அவற்றுக்கு நாம் பொறுப்புக்கூற வேண்டியவர்களாக இருக்கமாட்டோம்.

இந்தவகையில் நாம் தொடர்ச்சியாக சுயவிவாதத்தில் ஈடுபடுகிற, தொடர்ச்சியாக தீர்மானங்களை மேற்கொள்ளவேண்டியுள்ள வாழ்க்கையொன்றை நடத்திச்செல்லும் பிறவிகளாவோம். அதிகமான நேரங்களில் நாம் நல்லவை என்றும் தீயவை என்றும் அறிந்து கொண்டுள்ளவற்றுக்கு இடையில் உணர்ச்சிரீதியாக ஊசலாடுகிறோம். அவ்வாறான நிலைமைகளில் எமது மனவுறுதியையும் சுயகட்டுப் பாட்டுத் திறனையும் நாடவேண்டி ஏற்படுகிறது. அப்படிச் செய்யத் தவறினால் நாம் தீமையில் வீழ்ந்து எமது செயல்களின் பிரதிபலன் களை அனுபவிக்க நேரிடும். இவ்வாறான தொடர்ச்சியான உளப் போராட்டம் விலங்குகளுக்கு இல்லை. எவ்விதக் குற்ற உணர்வுமின்றி தாம் செய்ய விரும்பும் எதற்கும் எளிதாக எதிர்வினை காட்ட அவற்றால் முடியும். வானவர்கள் நன்மைகளை மட்டுமே செய்வதாக வேத நூல்கள் எமக்குக் கூறுகின்றன. இதற்குக் காரணம் அவர்களால் தீமை செய்ய முடியாமல் இருப்பதே. மற்றவர்கள் புரோக்ராம் பண் ணப்பட்ட விதத்தில் எதிர்வினை காட்டும் அதேவேளை நாமோ எமது தேர்வின்படி எதிர்வினை காட்டுகிறோம். மனித குலத்தின் உண்மை யான மகத்துவம் இதுதான். வேதநூல்கள் கூறுகின்றபடி ஆதமுக்குச் சிரம் பணியுமாறு இறைவன் வானவர்களை ஏவியது இதனால்தான். தாம் பாவம் செய்யாதவர்களாக இருந்து ஆதம் பாவம் செய்யக் கூடியவராக இருந்தும் அந்த வானவர்கள் இறைவனின் கட்டளைக்கு அடிபணிந்தார்கள்.

நாம் இன்னும் சற்றுக் கீழிறங்கி அண்டசராசங்களையும் மனி தனையும் கவனத்தில் எடுப்போம். அண்டத்தைப் பற்றி நாம் விஞ்ஞான ரீதியாக ஆராய்ந்துகொண்டு செல்லும் போது மிகவும் நுணுக்கமாகச் சமப்படுத்தப்பட்ட சமன்பாடுகளைக் கொண்ட ஓர் அண்டத்திலேயே நாம் வாழ்கின்றோம் என்பதும் இந்தச் சமநிலை சிறிதளவு குழம் பினாலும் அண்டப் பேரழிவுக்கு வழிவகுக்கும் என்பதும் நிரூபண மாகின்றன.

அடுத்து நாம் மனித சமூகங்களை எடுத்து நோக்கினால், தம் வாழ்நாள் முழுதும் தவறான, தீமையான அல்லது பாவமான காரியங்

களில் ஈடுபட்டவாறு வாழ்க்கையை முற்றாக அனுபவிப்பவர்கள் இறுதியில் மரணிக்கிறார்கள். மறுதலையாக உண்மைக்காகவும் நியாயத்துக்காகவும் போராடி தங்கள் இலட்சியங்களுக்காக அவதி யுறுபவர்களும் இறுதியில் இறந்துபோகின்றார்கள். இது இவ்வளவோடு முடிவடைகிறதா? இரு வகையான வாழ்க்கைக்கும் மரணம் தான் இறுதி முடிவாக இருக்குமா? எமது உள்ளத்தின் ஆழத்தில் ஏதோ வொன்று இதனை ஒத்துக்கொள்ள மறுக்கிறதே! அப்படியானால் மனிதனின் பொறுப்புக்கூறல் எங்கே? மரணம்தான் இந்தக் கதையின் முடிவாக இருந்தால் முழு அண்டத்திலும் வியாபித்திருக்கும் அந்த நுணுக்கமான சமநிலையோடு மனித வாழ்க்கை முரண்பட்டதாக இருக்குமே. மரணம் இறுதியான முடிவல்ல என்பதே இதிலிருந்து நாம் பெறக்கூடிய ஒரே முடிவாகும். மரணத்துக்குப் பின்னர் எதுவுமே இல்லை என்பது சாத்தியமல்ல. பதிலாக அதன் பின்னர் சமநிலையை மீளப் பேணச்செய்கின்ற, பொறுப்புக்கூறல் நிறைவேற்றப்படுகின்ற இன் னொரு வாழ்க்கை இருக்கவேண்டும். இதுதான் சமயங்கள் எடுத்துக்கூறுகின்ற மறுமை வாழ்க்கை. நியாயத்தீர்ப்பு நாளிலே இறுதி நீதிபதியாகிய இறைவனால் மக்கள் விசாரிக்கப்பட்டுத் தீர்ப்பு வழங் கப்படுவார்கள்.

சுயாதிக்கத்தை எமக்கு வழங்கியுள்ள இறைவன் எம்மை பொறுப்புக்கூற வேண்டியவர்களாகவும் ஆக்கியிருக்கின்றான். நாம் பரிபூரணத்துவம் உள்ள சிருஷ்டிகள் அல்ல; அப்படி எதிர்பார்க்கப் படவுமில்லை. கஷ்டங்களுக்கும் உளத் தூண்டுதல்களுக்கும் மத்தி யில் மிகச் சிறந்த முறையில் செயற்படவேண்டும் என வேண்டப்பட் டுள்ளோம். அந்த மிகச் சிறந்தது என்பதுகூட தவறுகள் உள்ளதாகத் தான் இருக்கும். நாம் முயற்சி செய்கிறோம்; எமது வாழ்க்கை முடிவே யில்லாத போராட்டமாக இருக்கிறது. எனவே இறைவன் எமது முயற் சிகளை ஒப்புக்கொண்டு எமது போராட்டங்களை மெச்சி அவனது உன்னதமான சிருஷ்டிகளாகக் கருதி எம்மீது அன்பு பாராட்டுவது நியாயமானதே. எமது தேர்வுக்குரிய சுதந்திரம் எப்படியிருந்தபோதிலும் பொறுப்புக்கூறும் சோதனையில் நாம் சித்திபெறுவதைக் காணவே அவன் நிச்சயமாக விரும்புகிறான். எமது இறுதி அடைக்கலமும் இரட்சகனும் அவனே என்பதையும், அவன் விளக்கிக்கூறியுள்ளபடி நன்மை தீமைகள் எவை என்பதையும் நாம் பொறுப்புக்கூறவேண்டிய தவிர்க்கமுடியாத நியாயத்தீர்ப்பு நாளைப் பற்றியும் எமக்கு நினை வூட்டிக்கொண்டிருப்பதே இதனைச் செய்வதற்குரிய சிறந்த வழியாகும். இதனை அவன் எப்படிச் செய்திருக்கிறான்? மனித சமுதாயத்தின்

சில உறுப்பினர்களைத் தெரிவுசெய்து தனக்கேயுரிய முறையில் (நேரடி உரையாடல் மூலம், எழுதப்பட்ட களித்தட்டுகள் மூலம், உள் ளுணர்வூட்டல் மூலம் அல்லது ஒரு வானவரினூடாக) அவர்களுடன் தொடர்பு கொண்டு, தமது சக மனிதர்களுக்கு அவனது தூதைக் கொண்டுசெல்லும் பொறுப்பினை ஒப்படைத்தான். ஒரே இறைவனை மட்டுமே வணங்குங்கள்; நன்மையைச் செய்து தீமையைத் தவிர்த் துக்கொள்ளுங்கள்; யாரும் தப்பிக்கொள்ளமுடியாத நியாயத்தீர்ப்பு நாளில் நீங்கள் அவன் முன்னிலையில் பொறுப்புக்கூறுவதைத் தவிர்க்கமுடியாது என்பதை எப்போதும் நினைவில் வைத்திருங்கள் என்பவையே அந்தத் தூதின் அடிப்படை அம்சங்களாக இருந்தன. இதுவே நபித்துவம் என்ற கருத்துப்படிவமாகும். வரலாறுதோறும் பெருந்தொகையான நபிமார்களையும் தூதர்களையும் மனித சமுதாயம் பெற்றுக்கொண்டது. இந்த நீண்ட சங்கிலித் தொடரிலே சிலரைப் பற்றி இறைவன் வேதநூல்களில் பெயர் குறிப்பிட்டுப் பிரஸ்தாபித்திருக் கின்றான். சிலருக்கு அவன் வேதநூல்களைக் கொடுத்தான். இன்னுஞ் சிலருக்கோ குறித்த சில அற்புதங்களை நிகழ்த்துவதற்குரிய ஆற் றலை வழங்கினான். இந்தத் தொடரில் இறுதியாக வந்த மூன்று பிரதான நபிமார்களுமே இப்றாஹிமீய ஏகத்துவச் சமயங்களான யூத சமயம், கிறிஸ்தவம், இஸ்லாம் என்பவற்றின் பிரதான ஆளுமைகளாக இருந்தனர். இம்மூவரும் குலத்தந்தையான இப்றாஹீமின் வழித்தோன்றல்களே. முஹம்மத் இஸ்மாயிலின் சந்ததியிலும் மூஸா ஈஸா ஆகியோர் இஸ்ஹாக்கின் சந்ததியிலும் தோன்றியவர்கள். (இஸ்மாயிலும் இஸ்ஹாக்கும் இப்றாஹிமின் இரண்டு புதல்வர்கள்)

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு விடயத்தைச் சுட்டிக்காட்டுவது பொருத்தமாக இருக்கும். யூதர்களைப் பொறுத்தமட்டில் மூஸாவோடு தீர்க்கதரிசிகளின் வருகை முற்றுப்பெறுகிறது. அவர்கள் ஈஸாவை மஸீஹ் என ஏற்றுக்கொள்வதுமில்லை. அவரது தாயார் மேரி கற்பு தவறாப் பெண் என்பதை ஒப்புக்கொள்வதுமில்லை. மஸீஹின் வரு கைக்காக இப்போதும் காத்துக்கொண்டிருக்கும் அவர்கள் கிறிஸ்தவம் ஒரு தெய்வீக சமயம் என்பதை மறுக்கின்றனர். நபித்துவம் கிறிஸ்த வத்தோடு முடிந்துவிட்டது என நினைக்கும் கிறிஸ்தவர்களோ யூத சமயத்தை தெய்வீக சமயமொன்றாக ஏற்றுக்கொள்கின்றனர். (மறு தலையாக யூதர்கள் அவர்களது சமயத்தை ஏற்றுக்கொள்ளாத போதிலும்) மறுபக்கமாக முஸ்லிம்களோ யூதம், கிறிஸ்தவம் ஆகிய இரண்டையும் இறை வெளிப்பாட்டை அடிப்படையாகக் கொண்ட சமயங்களாக அங்கீகரிக்கின்றனர். ஆனால் யூதர்களோ கிறிஸ்தவர்

களோ இஸ்லாமும் அப்படியானது என்பதை நம்புவதில்லை. அத்தோடு முஹம்மத் இறைவனின் உண்மையான நபியென்பதையோ தூதர் என்பதையோ அவர்கள் விசுவாசிப்பதில்லை. மூஸாவையும் ஈஸாவையும் நம்புவதோடு அவர்களுக்கு இறக்கிவைக்கப்பட்ட வேதங்களையும் நம்புவது ஒரு முஸ்லிமின் (இஸ்லாத்தைப் பின்பற்றுபவரின்) நம்பிக்கையின் ஒரு அம்சமாக இருக்கின்றது. அவர்களுக்கு முன்னர் வந்த நபிமார்களை விசுவாசிப்பதும் இதில் அடங்கும். இறைவனின் வார்த்தைகள் என முஸ்லிம்கள் நம்புகின்ற, இஸ்லாத்தின் வேதநூலான குர்ஆனில் பின்வருமாறு வருகின்றது:

*''நூஹ்வுக்கு எந்த மார்க்கத்தை அவன் உபதேசித்தானோ, அதனையே உங்களுக்கு அவன் மார்க்கமாக்கியிருக்கிறான். ஆகவே நாம் உமக்கு வஹீ மூலம் அறிவித்ததும், இப்றாஹீம், மூஸா, ஈஸா ஆகியோருக்கு நாம் உபதேசித்ததும் (என்ன வென்றால்) ''நீங்கள் மார்க்கத்ததை நிலைநிறுத்துங்கள். நீங்கள் அதில் பிரிந்துவிடாதீர்கள்''(என்பதேயாகும்) (42:13)*

நாம் மேலும் தொடர்வதற்கு முன் குர்ஆனைப் பற்றிச் சுருக்கமாக விளக்குவது உதவியாக இருக்கும். சொல்லுக்குச் சொல் நேரடியான இறைவனின் வார்த்தைகளின் பதிவே குர்ஆன் என்றும் அது அவ்வாறே வானவர் ஜிப்ரீல் என்பவரால் இறைதூதர் முஹம்மத் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது என்றும் முஸ்லிம்கள் நம்புகின்றனர். முழுமையாக நோக்கும்போது அது புதிய ஏற்பாட்டின் பருமனுடைய நூலாக இருக்கிறது. எனினும் அது ஒரேயடியாக இறக்கிவைக்கப்பட்டதல்ல. அது பல்வேறு தலைப்புக்களில் பிரச்சினைகள், சம்பவங்கள் தொடர்பான கருத்துக்களை வழங்கும் வகையில் சிறு சிறு பந்திகளாக வந்திறங்கியது. அதன் வெளிப்பாடு பூர்த்தியடைவதற்கு இருபத்திமூன்று வருடகாலம் பிடித்தது.

இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு குர்ஆனின் பகுதியொன்று அருளப்பட்டபோதெல்லாம் அவர் அதனைத் தன்னைப் பின்பற்றுவோர்க்கு எடுத்துக்கூற நாடிய வேளையில் மேற்கோள் குறிகளுக்குச் சமனாக, ஆரம்பிக்கும்போது இறைவன் கூறுகின்றான் என்றும் முடிவில் இறைவன் உண்மை பேசினான் என்றும் கூறுபவர்களாக இருந்தார்கள். புதிதாக இறங்கிய வசனங்கள் மக்களால் உடனடியாக மனனமிடப்பட்டதோடுஅக்காலத்தில் கிடைக்கக்கூடியதாக இருந்த எழுதுபொருட்களில் எழுதியும் வைக்கப்பட்டன. குர்ஆன் பூரணமாகியதும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அதனை அதன் இறுதி வடிவத்தில் (அவற்றின் கால ஒழுங்கிலன்றி இறை அறிவுறுத்தலுக்கு

ஏற்ப) ஒழுங்குபடுத்தினார்கள். அன்று முதல் இன்றுவரை அது எழுத்துக்கு எழுத்து, சொல்லுக்குச் சொல் ஆரம்ப மொழி வடிவிலேயே பாதுகாக்கப்பட்டு வந்துள்ளது. இந்த வகையில் தனிச் சிறப்பு மிக்க வேதநூலொன்றாக குர்ஆன் விளங்குகிறது. அதன் மொழிபெயர்ப் புக்கள் குர்ஆன் என அழைக்கப்படுவதில்லை. பதிலாக அவை குர் ஆனின் மொழிபெயர்ப்பு என்றோ கருத்து என்றோதான் அழைக்கப் படும். ஏனெனில் எந்த மொழிபெயர்ப்பும் மனிதனால் வழங்கப்பட்ட வடிவமாக இருக்குமேயன்றி அசலான இறை வார்த்தைகளாக இருக்க முடியாது.

குர்ஆனின் மொழி அறபு ஆகும். அறபு மொழியில் அது தன்னிகரற்ற இலக்கிய அற்புதமொன்றாகக் கருதப்படுகின்றது. முடியுமானால் தனக்கு நிகரான ஒன்றைக் கொண்டுவருமாறு அது நபியவர்களின் காலத்து அராபியர்களுக்குச் சவால்விட்டது. தங்கள் இலக்கிய ஆற்றல் பற்றிப் பெருமிதம் கொண்டிருந்தபோதிலும் அவர் களால் அப்படிச்செய்ய முடியாமல் அவர்கள் அதனைப் பெருவியப் போடு நோக்கினர். இஸ்லாத்தின் அக்காலத்தைய கடும் எதிரிகளில் சிலர் குர்ஆனின் பந்திகளுக்குச் செவிமடுத்த மாத்திரத்திலேயே இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டனர்.

# அத்தியாயம் மூன்று

## இஸ்லாமும் மற்றவையும்

குர்ஆனின் கருத்துப்படி ஒவ்வொரு மனிதனும் அவன் மனித னாக இருப்பதனாலேயே கண்ணியப்படுத்தப்படுகின்றான். இந்த விட யத்தில் இனமோ, வம்சாவழியோ, அவனது விசுவாசங்களோ கருத்தில் எடுக்கப்படுவதில்லை. இதனை குர்ஆன் இப்படிக் கூறுகிறது:

*"...ஆதமுடைய மக்களைத் திட்டமாக நாம் கண்ணியப் படுத்தினோம். கரையிலும் கடலிலும் நாம் அவர்களைச் சுமந்துசெல் லும்படி செய்கிறோம். நல்லவற்றிலிருந்து அவர்களுக்கு நாமே உண வளிக்கின்றோம். நாம் படைத்தவற்றில் அனேகவற்றைவிட (தகுதியில்) நாம் அவர்களை மிக மிக மேன்மையாக்கியும் வைத்திருக்கின்றோம்" (17:70)* மனித சமுதாயம் என்பது ஒரே குடும்பமே என இஸ்லாம் வலியுறுத்துகிறது. *"மனிதர்களே! நீங்கள் உங்கள் இரட்சகனுக்குப் பயந்து (நடந்து) கொள்ளுங்கள். அவன் எத்தகையவனென்றால், உங்களை (யாவரையும்) ஒரே ஆத்மாவிலிருந்து படைத்தான். அதி லிருந்து அதற்குரிய ஜோடிகளையும் படைத்தான். இன்னும் அவ்விரு வரிலிருந்து அனேக ஆண்களையும், பெண்களையும் பரவச்செய்தான் ..."(4:1)* மக்கள் அனைவருக்கும் உள்ள அடிப்படை மனித உரிமைகள் சமமானவை. இவற்றுள் எவ்வித வற்புறுத்தலுமின்றித் தன் சமயத்தைச் சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கும் உரிமையும் அடங்கும். ஏனெனில் இஸ்லாத்தில் மற்றவர்களுக்குரிய இடம் நல்லமுறையில் பேணப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுள்ளது. இஸ்லாம் பிரத்தியேகமாக ஒரு சாராருக்கு மட்டுமுரிய மார்க்கமல்ல. எந்த மனிதரும் - அவர் மதக் குறவறாக இருந்தாலும் சரியே - இறைவனின்

கருணைக்கும் மன்னிக்கும் இயல்புக்கும் எல்லை வகுக்கவோ அவன் சார்பாக வெகுமதிகளையோ தண்டனைகளை விதித்துப் பேசவோ அனுமதிக்கப்படவில்லை. இறைவனான அவனே இறுதியான நீதிபதி. *''...(இறந்த) பின்னர் நீங்கள் யாவரும் உங்கள் இரட்சகனிடமே திரும்பிச் செல்லவேண்டியுள்ளது. அப்போது, நீங்கள் எதில் அபிப்பிராய பேதம் கொண்டிருந்தீர்களோ அதுபற்றி அவன் உங்களுக்கு அறிவிப் பான்.'' (6:164)*

## வேதத்தையுடையவர்கள்

(யூதர்களும் கிறிஸ்தவர்களும்)

மனித சமுதாயத்தில் யூதர்களும் கிறிஸ்தவர்களுமே முஸ்லிம் களுக்கு மிக நெருக்கமானவர்கள். அவர்களுக்கே வேதத்தையுடை யவர்கள் என்ற கௌரவப் பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. அவர்கள் முஸ்லிம்களைப் போன்றே ஒரே இறைவனை வணங்குபவர்கள்; அவ னிடமிருந்து வேதம் கிடைத்தவர்கள். அவர்களும் எம்மைப் போன்றே இறை தூதுத்துவத்தின் தொடர் வரிசையில் நம்பிக்கை வைத்தவர்கள். விவிலியத்தில் கூறப்படும் இறைதூதர்கள் இஸ்லாமிய இறைத்தூதர் களாக இருக்கின்றனர் என்பதை அறிந்துகொள்ளும்போது எங்கள் யூத, கிறிஸ்தவ நண்பர்கள் பலர் ஆச்சரியமடைகின்றனர். இந்த மூன்று சமயங்களும் பொதுவான ஒழுக்க நெறிமுறைகளைக் கொண் டுள்ளன. குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது:

> *''நீங்கள் கூறுங்கள்: இறைவனையும், எங்கள்பால் இறக்கப்பட்ட (இவ்வேதத்தை)யும், இப்றாஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஃ கூப், இவர்களுடைய சந்ததிகள் ஆகியோரின்பால் இறக்கப் பட்டதையும் மூஸாவுக்கும் ஈஸாவுக்கும் கொடுக்கப்பட்டிருந் ததையும், மற்றைய நபிமார்களுக்கு அவர்களது இரட்சகனிட மிருந்து கொடுக்கப்பட்டிருந்ததையும் நாங்கள் விசுவாசிக் கிறோம். அவர்களிலிருந்து எவருக்குமிடையில் நாம் வேறுபாடு காட்டமாட்டோம். இன்னும் அவர்களுக்கே நாங்கள் முற்றிலும் கீழ்ப்படிகின்றோம்'' (2:136)*

இஸ்லாம் என்ற சொல்லின் நேரடிக் கருத்து 'இறைவனின் விருப்பத்துக்கு அடிபணிதல்' என்பதே.

வேதத்தையுடையவர்களால் வழங்கப்படும் உணவுகளை உண்பதற்கு முஸ்லிம்கள் அனுமதிக்கப்பட்டுள்ளனர். (மதுபானம், பன்றியிறைச்சி போன்ற திட்டவட்டமாக தடைசெய்யப்பட்டவற்றைத்

தவிர) அதேபோன்று முஸ்லிம்களும் பிரதியாக அவர்களுக்கு உணவு களை வழங்கலாம். *“...வேதம் கொடுக்கப்பட்டார்களே அத் தகையோரின் உணவும் உங்களுக்கு ஆகுமானதாகும்; உங்களுடைய உணவும் அவர்களுக்கு ஆகுமானதாகும்” (5:5)* மேலும் ஒரு முஸ்லிம் ஆண் யூத அல்லது கிறிஸ்தவப் பெண்ணைத் (மிக நெருக்கமான உறவும் புனிதமான பிணைப்புமான) திருமணம் செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது. *“விசுவாசம் கொண்ட பெண் களையும், உங்களுக்கு முன்னர் வேதம் கொடுக்கப்பட்டவர்களிலுள்ள கற்புடைய பெண்களையும், நீங்கள் விபச்சாரம் செய்யாதவர்களாகவும், வைப்பாட்டிகளாக வைத்துக்கொள்ளாதவர்களாகவும் இருக்கும் நிலையில், அவர்களுக்கு கொடுக்கவேண்டிய மஹர்களையும் அவர் களுக்கு நீங்கள் கொடுத்துவிட்டால் (திருமணம் செய்து கொள்வது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது)” (5:5)* அவ்வாறான நிலையில் ஒரு முஸ்லிம் கணவன் தன் மனைவியை இஸ்லாத்தை தழுவுமாறு வற்புறுத்துவது சட்டவிரோதமானது. ஏனெனில் அது *‘மார்க்கத்தில் எத்தகைய நிர்ப்பந்தமுமில்லை’ (2:256)* என்ற குர்ஆனின் கட்டளையை மீறுவதாக இருக்கும். அவளுடைய விசுவாசத்தின்படி அவள் வழிபடு வதற்கு இருக்கும் உரிமையை உறுதிப்படுத்துவது அவனது இஸ் லாமியக் கடமையாக இருக்கும். ஓர் இஸ்லாமிய அரசில் வேதம் கொடுக்கப்பட்டோர் தொடர்பான சட்டரீதியான கருத்து ‘எமக்குரிய உரிமைகள் அவர்களுக்கும் உண்டு. எமக்கு அவர்கள் மீதான கடமையும் உண்டு’ என்பதே. இஸ்லாமிய அரசு வழங்குகின்ற சமூக பாதுகாப்புகளுக்கும் பயன்களுக்கும் அவர்களும் சம உரிமை உடைய வர்களே. வேதம் உடையவர்களுக்கு எதிராக தப்பெண்ணம் அல்லது துவேசம்கொண்ட செயல்களில் ஈடுபடக்கூடாது என முஸ்லிம்கள் எச்சரிக்கப்பட்டனர். இதைத்தான் இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள், ‘எவரொருவர் வேதமுடையவர்களுள் ஒருவரை நோவினை செய்கிறாரோ அவர் என்னையே நோவினை செய்தவர் போலாவார்’ எனக் கூறியுள்ளனர்.

ஆரம்பத்திலிருந்தே இஸ்லாமிய சமூகம் பன்முகத்தன்மை யுடைய சமூகமொன்றாகவே இருந்துள்ளது. முஹம்மத் (ஸல்) மதீனாவுக்கு புலம்பெயர்ந்து சென்று முதலாவது இஸ்லாமிய அரசை உருவாக்கிய போது அங்கு வாழ்ந்த யூத கோத்திரங்கள் உட்பட எல்லாக் கோத்திரங்களுடனும் உடன்படிக்கை ஒன்றைச் செய்து கொண்டார்கள். இதன் மூலம் சமய சுதந்திரமும் சம உரிமைகள், கடமைகள் என்பனவும் நிறுவப்பட்டன.

இஸ்லாம் தனியொரு கூட்டத்துக்குரிய மார்க்கமல்ல. அது முழு அகிலத்துக்கும் உரிய ஓர் அழைப்பாகும். (பலர் எடுத்துக்காட்ட முனைவதுபோல் அது அராபியர்களினதோ அல்லது கீழைத்தேசத் தினரதோ மார்க்கம் அல்ல) வேதத்தை உடையவர்கள் உட்பட அனைத்து மக்களுக்கும் அது அழைப்பு விடுத்தபோதிலும் அவர்கள் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதற்காக அவர்களை எதிரி களாகவோ நிராகரிப்பவர்களாகவோ (infidel) கருதுவது நியாயமல்ல. உண்மையில் infidel என்ற ஆங்கிலச்சொல் ஐரோப்பியர்களாலேயே உருவாக்கப்பட்டது. சிலுவை யுத்தக் காலத்தில் முஸ்லிம்களை குறிப்பதற்கு அவர்கள் இதனைப் பயன்படுத்தினர்.

நன்மையானது எங்கிருப்பினும் இஸ்லாம் அதனை அங்கீ கரிக்கின்றது. *''அவர்கள் (அனைவரும்) சமமானவர்களல்லர். வேதத் தையுடையவர்களில் (நேர்வழியில்) நிற்கும் ஒரு கூட்டத்தினர் இருக் கின்றனர்; அவர்கள் இரவுக் காலங்களில் சிரம் பணிந்தவர்களாக இறைவனுடைய வசனங்களை ஓதுகின்றனர்.''(3:113)* எந்தவொரு தனிநபராலும் அல்லது கூட்டத்தாலும் இறைவனின் கருணைக்குத் தனியுரிமை கோருவதற்கோ அதனை மற்றவர்களுக்கு மறுப்பதற்கோ முடியாது. *''நிச்சயமாக, விசுவாசங்கொண்டவர்களே அவர்களும், யூதர்களாக இருந்தார்களே அவர்களும் கிறிஸ்தவர்களும், ஸாபியீன் களும் (அவர்களில்) எவர்கள் இறைவனையும் இறுதிநாளையும் விசு வாசித்து, நற்கருமங்களையும் செய்தார்களோ அத்தகையவர்களுக்கு அவர்களுடைய கூலி அவர்களுடைய இரட்சகனிடத்தில் உண்டு. மேலும் அவர்களுக்கு எவ்வித பயமுமில்லை. அவர்கள் கவலையும் அடையமாட்டார்கள்.'' (2:62)*

## கோட்பாட்டு ரீதியான வேறுபாடுகள்

யூத சமயத்துடனும் கிறிஸ்தவத்துடனும் இஸ்லாம் பகிர்ந்து கொண்டுள்ள பொதுத்தன்மைகள் எண்ணற்றவை. மேற்குலக மக்களில் பெரும்பான்மையினர் மனதில் வைத்துள்ள இஸ்லாம் பற்றிய மனப் பதிவிலிருந்து அவை உண்மையில் பெருமளவு வேறுபடுகின்றன. மெய்யாகவே கிறிஸ்தவமும் யூத சமயமும் தமக்கிடையில் கொண் டுள்ள நெருக்கத்தைவிடக் கூடிய நெருக்கத்தை இஸ்லாம் அவை இரண்டுடனும் கொண்டுள்ளது. ஏனெனில் அவ்விரு சமயங்களும் இறைவனால் அருளப்பட்டவை என இஸ்லாம் அங்கீகரிக்கிறது. அதே வேளை யூத சமயமோ இஸ்லாத்தையும் கிறிஸ்தவத்தையும் அவ்வாறு கருதுவதில்லை. இந்த அடிப்படையில் பார்த்தால் 'யூத-கிறிஸ்தவ'

என்ற சொற்றொடர் பொருத்தமற்றதாக இருக்கிறது. முஸ்லிம்களை உள்ளடக்காமல் இருக்கும் நோக்குடன் அரசியல் ரீதியில் உருவாக் கப்பட்ட சொற்றொடரே அது என்பது எனது அபிப்பிராயம். எமது நடைமுறை நாகரிகத்தை 'யூத-கிறிஸ்தவ-இஸ்லாமிய' என்று குறிப்பதே மிகப் பொருத்தமானது. ஏனெனில் இம்மூன்று சமயங்களும் ஆப்ரஹாமிய பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அத்தோடு இன்றைய நாகரிகத்துக்கு அடித்தளமிட்டது இஸ்லாமிய ஆட்சிக்காலத்து நாகரிகமே. அது முஸ்லிம்களும் யூதர்களும், கிறிஸ் தவர்களும் ஏனையோரும் சகிப்புத்தன்மை, கூட்டுறவு என்பவற்றின் அடிப்படையிலான ஓர் ஆட்சி முறையில் பாதுகாப்புடனும் நீதியுடனும் வாழ்ந்த ஒரு நாகரிகமாகும்.

பொதுத்தன்மைகள் நிறைய இருந்தபோதிலும் இஸ்லாத்துக்கும் ஏனைய ஆப்ரஹாமிய சமயங்களைச் சார்ந்த சமூகங்களுக்கும் இடை யேயுள்ள கோட்பாட்டு வித்தியாசங்களை அறிந்திருப்பது பயனளிக்கும். முரண்படும் நோக்கமோ ஏனைய சமயங்களைத் தாக்கும் நோக்கமோ இன்றிப் பொதுவான விவரணமொன்றை இங்கே தருகின்றேன். தற் போது காணப்படும் குரோதத்துக்கும் துவேசத்துக்கும் அடிப்படையாக அமைந்துள்ள அறியாமையையும் புரிந்துணர்வின்மையையும் நீக்கி யூத, கிறிஸ்தவ வாசகர்கள் இஸ்லாம் தொடர்பாகக் கொண்டுள்ள நிலைமையை மறுபரிசீலனை செய்து தெளிவு பெறச் செய்வதே இதன் நோக்கம்.

இந்த வேறுபாடுகளில் மிக முக்கியமானது முஸ்லிம்கள் எவ் வாறு இறைவனை விளங்கிக்கொண்டு அவனிடம் தம்மை வெளிப் படுத்துகிறார்கள் என்பதே. இறைவன் என்றும் நிலைத்திருப்பவன், முடிவே இல்லாதவன், தன்னுடைய பண்புகளிலே தனித்துவமானவன். அவனுக்கு ஓர் உருவத்தை கற்பனை பண்ணவோ ஏதேனுமொரு விதத்தில் அவனது முடிவில்லாத் தன்மையை மட்டுப்படுத்தி அல்லது குறைத்துச் சித்தரித்துக் காட்டவோ எமது ஆற்றல் இடமளிக்காது. இறைவனைப் பிரஸ்தாபிக்கும் போது மிக உன்னதமான வார்த் தைகளே பயன்படுத்தப்படுகின்றன. எனவே பைபிளில் சொல்லப் படுவதுபோல் இறைவன் சொர்க்கத்தில் நடந்தான் என்றோ, அல்லது அவன் வானவர்களை ஒன்றுகூட்டி ஆதமைக் குறித்து ''பாருங்கள், மனிதன் எங்களுள் ஒருவனாக ஆகிவிட்டான்'' எனக் கூறினான் என் றோ, அல்லது தான் செய்ததைப் பற்றி (பிரளயத்தின் போது) மனம் வருந்தி ''நான் அவ்வாறு செய்திருக்கக்கூடாதே'' எனக் கூறினான் என்றோ அல்லது இறைவன் ஆறு நாட்கள் வேலை செய்துவிட்டு

ஏழாம் நாள் ஓய்வுகொண்டான் என்றோ, யாரேனும் இறைவனுடன் மல்லாடி அவனைத் தோல்வியுறச் செய்ய எத்தனித்தான் என்றோ வாசிக்கும்போது முஸ்லிம்களின் உள்ளத்துக்கு அது அந்நியமாகத் தோன்றுகிறது.

இன்னோர் அம்சம் இறைவனால் நிச்சயிக்கப்பட்ட நபிமார்கள் மற்றும் தூதர்கள் தொடர்பானது. இறைவனின் தூதை எத்தி வைப்பதற்காகவும் தத்தமது சமுதாயங்களுக்கு முன்மாதிரிகளாகவும் இவர்கள் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டதாக முஸ்லிம்கள் நம்பு கின்றனர். சமூகங்கள் மீண்டும் சறுக்கி சிலை வணக்கத்தில் வீழ்ந்த போது அல்லது இறைவனுடன் பங்காளர்களை இணைத்துக் கொண்டபோது அல்லது அவனால் விதிக்கப்பட்ட ஒழுக்கமுறைகளி லிருந்து விலகிச்சென்றபோது அவர்களுக்கு நினைவூட்டி, சரியான வழியில் செலுத்துவதற்காக நபிமார்களும் இறைத்தூதர்களும் அனுப் பப்பட்டார்கள். மனிதத்தன்மையின் பரிபூரணத்துவத்தில் உச்சமட்டத்தை எய்தியவர்களாக அவர்கள் விளங்கினர். எனவே இறைவனின் தூதர் கள் பாரதூரமான முறையில் இறை சட்டங்களை மீறி ஏமாற்று வேலை களையும் சிற்றின்பப் பாவங்களையும் செய்தார்கள் என (யாகூப் தனது சகோதரனைக் காட்டிக்கொடுத்தார், லூத் மதுவெறியில் தனது புதல்வியருடன் உடலுறவு கொண்டார் என்பன போன்று) பைபிளில் கூறப்படுவது இஸ்லாமிய போதனைகளுடன் முற்றாக முரண் படுகின்றது. வேதநூல்களில் மனிதர்கள் செய்த இடைச்செறுகல்கள் காரணமாகவே இவ்வாறு இறைத்தூதர்கள் சித்தரிக்கப்பட்டிருக் கிறார்கள் என்பதே இது தொடர்பாக முஸ்லிம்கள் எடுக்கக்கூடிய ஒரே முடிவாக இருக்கிறது.

## யூதர்கள்

முஸ்லிம்கள் யூதர்களைத் தமது ஒன்றுவிட்ட சகோதரர்கள் எனக் குறிப்பிடுவது வழக்கம். ஏனெனில் இஸ்மாயிலின் வழியாக முஹம்மத் (ஸல்) அவர்களினதும் இஸ்ஹாக்கின் வழியாக இஸ்ரா யிலினதும் (யாக்கூபினதும்) அவரது பிள்ளைகளினதும் பொதுப் பாட்டனாராக ஆபிரஹாம் (இப்றாஹீம்) இருக்கிறார். இப்றாஹீம் விவாகம் செய்துகொண்ட ஸாராவுக்கு முதுமைக் காலம் வரை பிள்ளைப்பேறு கிடைக்கவில்லை என்பது யாவரும் அறிந்த விடயமே. ஸாராவின் புதல்வரான இஸ்ஹாக் பிறப்பதற்கு முன்பே இப்றாஹீம் விவாகம் செய்திருந்த ஹாஜரா இஸ்மாயிலைப் பெற்றெடுத்தார். குர்ஆனின் கூற்றுப்படி இப்றாஹீமுக்கு ஒரு சோதனையாகவும் இறை திட்டத்தை நிறைவுசெய்யும் வகையிலும் தனது ஒரேயொரு மகனை

அழைத்துக்கொண்டு, தற்போது மக்கா நகர் அமைந்துள்ள பகுதிக்குச் செல்லுமாறு இறைவன் அவருக்குக் கட்டளையிட்டான். இந்த மக்கா நகரில்தான் பிற்காலத்தில் இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) பிறந்தார். தாம் கொண்டுவந்திருந்த உணவும் நீரும் முடிவுற்ற பின்னர் தனது மகனுக்காக ஹாஜரா நீர் தேடி அலைந்து துன்பப்பட்டதும் எதிர்பாராத விதத்தில் ஸம்ஸம் எனும் நீரூற்று வெளிப்பட்டதும் இன்றுகூட வருடந்தோறும் முஸ்லிம்களால் நினைவுகூரப்படுகிறது. ஒரே இறைவனை வணங்குவதற்காக இப்றாஹீமும் இஸ்மாயீலும் கட்டி யெழுப்பிய முதலாவது பள்ளிவாயலான க.்.பாவை தரிசிக்கும் ஹஜ் யாத்திரையின் போதே இது இடம்பெறுகிறது. இறைவனின் நாட்டப்படி முதுமையடைந்திருந்த ஸாராவும் இஸ்ஹாக் என்ற மகனைப் பெற் றெடுத்தார். இந்த இஸ்ஹாக்கின் மகன்தான் பின்னர் இஸ்ராயீல் எனப் பெயர்மாற்றம் பெற்ற ய.்.கூப். இவரது பிள்ளைகளே இஸ்ரா யிலின் 12 பிள்ளைகள் என அழைக்கப்படுகின்றனர்.

யூதர்களிலும் கிறிஸ்தவர்களிலும் பெரும் பகுதியினர் இஸ்மா யீலை இப்றாஹீமின் சட்டரீதியான பிள்ளையெனக் கருதாததையிட்டு முஸ்லிம்கள் ஓரளவு விசனப்படுகின்றனர். ஹாஜராவை இப்றாஹீமின் மனைவியாகவும் அதேவேளை ஸாராவின் பணிப்பெண்ணாகவும் பைபிள் குறிப்பிடுகிறது. (ஆதியாகமம் 16:3) என்னிடமிருக்கும் பைபிள் பிரதியில் (King James Version) இஸ்மாயிலின் பெயர் சொல்லகரா தியில் முற்றாகவே காணப்படவில்லை. இப்றாஹீமின் பெயரை வைத்தே நான் அவரது வரலாற்றை தேடிப் பிடித்தேன். ஆதியாகமம் திருப்பித் திருப்பி (16:16; 17:23, 25, 26; 21:11) இஸ்மாயீலை ''அவரது (ஆப்ரஹாமின்) புதல்வன்'' என்றே குறிப்பிடுகிறது. எனவே அவர் இப்றாஹீமின் மகன் என்பதை மறுக்கமுடியாதுள்ளது. மேலும், இஸ்ர வேலின் பிள்ளைகளது தாய் வழியைத் தேடிப்பார்க்கும் போது, இஸ்ரவேல் தனது மாமன் மகள்களான ரசேல், லீயா ஆகியோரையும் அவர்களது பணிப்பெண்களான ஸில்பாஹ் பில்ஹா ஆகியோரையும் மணந்திருந்தார். இந்த நான்கு பெண்களினதும் பிள்ளைகளே இஸ்ர வேலின் பிள்ளைகள் என அழைக்கப்படுகின்றனர். எனினும் அப்பிள் ளைகளில் சிலரது தாய்மார் பணிப்பெண்களாக இருந்தவர்கள் என்பதற்காக எவரும் அப்பிள்ளைகளில் எவரையும் இஸ்ரவேலின் பிள்ளைகள் அல்ல எனக்கூறவில்லை. அப்படியாயின் இஸ்மாயீலுக்கு எதிராக மாத்திரம் ஓர் இரட்டை நியமம் உருவாக்கப்பட்டுள்ளதா? ஆதியாகமத்தின் 22:2 வசனத்தில் இறைவன் ஆப்ரஹாமை நோக்கி, *''இப்போது உமது மகனை - நீர் அன்பு வைத்துள்ள உமது ஒரே*

*யொரு மகன் ஐசாக்கை எடுத்துக்கொண்டு மொரியாஹ் எனும் பிரதேசத்துக்குச் செல்வீராக. அங்கே நான் உமக்கு அறிவித்துத் தரும் மலையின் மீது அவரைப் பலி இடுவீராக''* எனக் கூறியதாகச் சொல்லப்படுகிறது. இங்கே ஐசாக்கின் பெயர் வேண்டுமென்றே திணிக்கப்பட்டுள்ளது என்றே முஸ்லிம்கள் கருதுகின்றனர். ஏனெனில் ஆப்ரஹாமின் ஒரேயொரு மகனாக ஐசாக் ஒருபோதும் இருந்ததில்லை. ஆதியாகமத்தின்படி (17:24-26) இஸ்மாயிலைவிட ஐசாக் 13 வருடங்களால் இளையவர். அத்தோடு தந்தையார் மரணிக்கும் போது இரு புதல்வர்களும் உயிரோடிருந்துள்ளனர்.

இப்றாஹீமுக்கு விதிக்கப்பட்ட இந்த கடும் சோதனையும், அவர் இறைக்கட்டளைக்கு அடிபணிந்து தனது ஒரே மகனை (இஸ்மாயிலை) பலியிட முன்வந்ததையும் முஸ்லிம்கள் வருடந்தோறும் ஹஜ் யாத்திரையின் ஓர் அம்சமாக நினைவுகூர்கின்றனர். முஸ்லிம்களைப் பொறுத்தமட்டில் இஸ்மாயில், இஸ்ஹாக் ஆகிய இருவருமே சமமாக இறையருள் பெற்ற அன்புக்குரிய இறைத்தூதர்களாவர்.

யூதர்களை அல்லது இஸ்ராயீலின் மக்களைப் பற்றி குர்ஆன் சுமார் ஐம்பது இடங்களில் குறிப்பிடுகிறது. இது தவிர மூஸாவைப் பற்றி 137 தடவைகளும் தவ்ராத் வேதம் பற்றி 18 தடவைகளும் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்கள் மீது தாராளமாகப் பாராட்டுக்கள் குவிக்கப்பட்டுள்ளது போலவே குற்றச்சாட்டுக்களும் கண்டனங்களும் தெரிவிக்கப்பட்டுள்ளன. சில உதாரணங்கள் இதோ:

*''இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்களித்திருந்த என்னுடைய அருட்கொடையையும், அகிலத்தாரைவிட உங்களை நிச்சயமாக நான் மேன்மையாக்கி வைத்திருந்ததையும் நினைவுகூருங்கள். மேலும் நீங்கள் ஒரு நாளைப் பயந்துகொள்ளுங்கள். எந்தவோர் ஆத்மாவும் மற்றோர் ஆத்மாவுக்கு எவ்வித பயனுமளிக்காது. அதனிடமிருந்து பரிந்துரையும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. அதனிடமிருந்து யாதொரு ஈட்டையும் எடுத்துக்கொள்ளப்படவுமாட்டாது. அவர்கள் உதவியும் செய்யப்படமாட்டார்கள். இன்னும் பிர்அவ்னுடைய கூட்டத்தாரிலிருந்து நாம் உங்களைக் காப்பாற்றிய சமயத்தை (நினைவுகூருங்கள்) அவர்கள், தீயவேதனையை உங்களுக்குச் சுவைக்கச் செய்துகொண்டிருந்தார்கள். அவர்கள் உங்கள் ஆண்மக்களை அறுத்துக் கொலை செய்தார்கள். உங்கள் பெண்களை உயிருடன் வாழவிட்டு வந்தார்கள். அதில் உங்களுக்கு உங்கள் இரட்சகனின் மகத்தான சோதனையும் இருந்தது!*

*மேலும் நாம் உங்களுக்காகக் கடலைப் பிளந்து, பின்னர் நாம் உங்களைக் காப்பாற்றி, நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே பிர்அவ்னுடைய கூட்டத்தாரை மூழ்கடித்தோம் என் பதையும் (நினைவுகூருங்கள்)*

*இன்னும் மூஸாவுக்கு நாம் நாற்பது இரவுகளை வாக்களித் திருந்தோம். பின்னர் (அவர் திரும்பிவர முன்) ஒரு காளைக் கன்றை (வணக்கத்திற்குரியதாக) நீங்கள் அவருக்குப் பின் எடுத்துக்கொண்டீர்கள் என்பதையும் (நினைவுகூருங்கள்) நீங்களே அநியாயக்காரர்கள்.*

*பின்னர் நீங்கள் நன்றி செலுத்துவதற்காக அதற்குப் பின்ன ரும் நாம் உங்களை மன்னித்தோம்'' (2:47-52)*

*நிச்சயமாக நாம் இஸ்ராயீலின் மக்களுக்குமிக்க விருப்பமான இடத்தில் குடியேறச் செய்து, நல்லவற்றிலிருந்து அவர்களுக்கு உணவளித்தும் வந்தோம். எனவே அறிவு அவர்களிடம் வரும் வரையில், அவர்கள் மாறுபடவில்லை. எதுவிடயத்தில் அவர்கள் மாறுபட்டிருந்தார்களோ அதில் அவர்களுக்கிடையே நிச்சயமாக உமதிரட்சகன் மறுமைநாளில் தீர்ப்பு வழங்குவான் (10:93)*

யூதர்கள் தமது மார்க்கத்திற்கு முரணாண வகையில் ஏதேனு மொன்றினைச் செய்தார்கள் எனக் கருதப்படும் சந்தர்ப்பங்களிலேயே குர்ஆன் யூதர்களைக் கண்டித்திருக்கிறது என்பது கவனிக்கத்தக்கது. பைபிள்கூட இறைவனுக்குக் கீழ்ப்படிய மறுத்தமைக்காக யூதர்கள் மீது பல இடங்களில் குற்றஞ் சுமத்தியுள்ளது. (பார்க்க: உதாரணம் 2Kings 17:7-23). ஒருசமூகம் என்றவகையில் யூதர்களைக் குர்ஆன் கண்டனம் செய்வதில்லை. அதேவேளை எந்தவொரு மக்கள் குழுவை யோ இனத்தையோ அது தூற்றவுமில்லை; உயர்த்திப் போற்றவு மில்லை. சிலை வணக்கமும் வேறு வழிபாடுகளும் பரவியிருந்த உலகில் நீண்டகாலமாக ஓரிறைக் கோட்பாட்டைத் தூக்கிப்பிடித்து நின்றவர்கள் என்ற வகையில் யூதர்களுக்கு குர்ஆன் உரிய அங்கீ காரத்தை வழங்கியிருக்கிறது. எனினும் கிறிஸ்தவத்தினதும் இஸ் லாத்தினதும் வருகையின் பின்னரும் தாம் மாத்திரம்தான் ஓரிறைக் கோட்பாடுடையவர்கள் என்ற யூதர்களின் உரிமைகோரல் ஏற்றுக் கொள்ளப்படமுடியாதது. அதனோடு இணைந்து, தாம்தான் இறை வனால் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என இன்றுவரை அவர்கள் தொங்கிக்கொண்டிருக்கும் கருத்துப்படிவமும் அர்த்தமற்றதாகிறது. இன்று கிறிஸ்தவர்களும் முஸ்லிம்களும் இப்படித்தான் நினைக் கிறார்கள்.

தேர்ந்தெடுக்கப்பட்ட இனம் என்ற கருத்துப்படிவத்தை இஸ்லாம் ஏற்றுக்கொள்வதில்லை. குர்ஆனிலே இறைவன் இப்படிக் கூறுகிறான்:

*''மனிதர்களே! நிச்சயமாக நாம் உங்களை ஓர் ஆண் மற்றும் ஒரு பெண்ணிலிருந்து படைத்தோம்; இன்னும், ஒருவருக் கொருவர் நீங்கள் அறிமுகமாகிக்கொள்வதற்காக உங்களைக் கிளைகளாகவும், கோத்திரங்களாகவும் ஆக்கினோம். நிச்சய மாக அல்லாஹ்விடத்தில் உங்களில் மிக்க கண்ணியமானவர் உங்களில் மிகவும் பயபக்தியுடையவர்தான்; நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தவன்; நன்கு உணர்பவன்.'' (49:13)*

மனிதர்கள் நல்லவர்களாகவோ தீயவர்களாகவோ ஆவது அவர் களது நல்லியல்புகளின் அடிப்படையிலேயே அன்றி அவர்களது வம்சாவழியின் அடிப்படையில் அல்ல. இப்றாஹீமுக்கு இறைவன் வழங்கிய வாக்குறுதியைக் குர்ஆன் கூறும்போது இதனைத் தெளிவாகச் சித்தரிக்கிறது:

*''இன்னும் இப்றாஹீமை அவருடைய இரட்சகன் பல கட்டளைகளைக் கொண்டு சோதித்த சமயத்தில், அவற்றை அவர் நிறைவு செய்தார். (என்பதை நினைவுகூருங்கள்) ''நிச்சயமாக மனிதர்களுக்கு நான் உம்மைத் தலைவராக ஆக்குகிறேன்'' என (அல்லாஹ்வாகிய) அவன் கூறினான். அதற்கு அவர் ''என்னுடைய சந்ததியினரிலிருந்தும் (தலை வர்களை ஆக்குவாயாக) எனக் கேட்டார். ''(அவர்களிலுள்ள) அநியாயக்காரர்களை என்னுடைய வாக்குறுதி சாராது'' எனக் கூறினான்'' (2:124)*

இறைவனால் ஆபிரஹாமுக்குக் கொடுக்கப்பட்ட வாக்குறுதி பற்றிய பைபிளின் கூற்றுத் தொடர்பாக வழங்கப்படுகின்ற குறுகிய நோக்குக்கொண்ட அழுத்தம் காரணமாகவே இன்று அராபியருக்கும் யூதர்களுக்கும் இடையில் காணப்படும் முரண்பாடு தோன்றியுள்ளது. *நான் உமக்கும் உமக்குப் பின்னால் வரும் உமது வித்துக்கும், இப்போது அந்நியமாக இருக்கின்ற இந்த பிரதேசத்தை - கனான் நாட்டையும் முடிவற்ற உடமையாக்கித் தருவேன் (ஆதியாகமம் 17:8)* என்று பைபிள் கூறுகிறது. ஆபிரஹாமுடைய வித்து என்பது யூதர்களை மட்டுமே உள்ளடக்குகிறது என்ற யூதர்களுடைய நம்பிக்கையே பலஸ்தீனியப் பிரச்சினையைச் சிக்கலானதாக ஆக்கியிருக்கிறது. இதன்படி, ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் பெரும்பான்மையினரான பலஸ்தீன் முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் சிறுதொகையினரான யூதர்களுடன் சமாதானமாகச் சேர்ந்து வாழ்ந்து வந்த இந்தப்

பிரதேசத்தில் வாழும் உரிமை யூதர்களுக்கு மாத்திரமே இருக்கிறது என்று இன்றைய யூத சமயம் நம்புகிறது. பிற்காலத்தில் இன்றைய இஸ்ரவேல் நாட்டை உருவாக்கிய சியோனிஸ்டுகளால் பெரும்பான்மையான பலஸ்தீனியர்கள் தமது வீடுகளிலிருந்தும் நிலங்களிலிருந்தும் பலவந்தமாக வெளியேற்றப்பட்டார்கள். அதுமட்டுமன்றி இஸ்ராயீலின் சந்ததியினரில் கிறிஸ்தவத்தை அல்லது இஸ்லாத்தை தழுவியவர்கள் - சட்டப்படி இஸ்ராயீலின் சந்ததியினராக இருந்தபோதிலும் (இப்றாஹீமின் மகன் இஸ்ஹாக்கின் மகனான ய.்.கூப் நபியினதும் இப்றாஹீமின் மூத்த மகன் இஸ்மாயிலினதும் சந்ததியினர்) இன்றைய இஸ்ரவேலிய மீளத் திரும்பும் சட்டத்துக்குள் அடக்கப்படுவதில்லை. இவர்களும் - பலஸ்தீனிய முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் - தம்மை, நாட்டை விட்டு வெளியேறவேண்டிய அல்லது இரண்டாந்தரப் பிரஜைகளாக வாழவேண்டிய அந்நியர்களாகக் கருதத் தயாராக இல்லை. ஏனெனில் அவர்கள் இந்த நாட்டில் ஆயிரக்கணக்கான வருடங்கள் வாழ்ந்திருக்கின்றனர். இஸ்ரவேலின் முன்னாள் பிரதமர் கோல்டா மேயரின் ‘‘பலஸ்தீனியர் என்று எவருமில்லை’’ என்ற கூற்றையோ யூத தேசிய நிதியத்தின் முன்னாள் தலைவர் ஜோஸப் வைட்ஸின் ‘‘இந்த நாட்டில் இரு மக்கள் கூட்டத்தினரும் ஒன்றாக வாழ்வதற்கு இடமளிக்கமுடியாது’’ என்ற கூற்றையோ இந்த மக்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர்.

முஸ்லிம்கள் பலஸ்தீனியப் பிரச்சினையை இரண்டு சமயங்களுக்கிடையிலான பிரச்சினையாகக் கருதுவதில்லை. மாறாக, வித்தியாசமான கோட்பாட்டு விளக்கங்களையும் நோக்கங்களையும் கொண்ட இரு மக்கள் கூட்டத்தினருக்கிடையிலான ஒரு பிணக்காகவே அதனைக் கருதுகின்றனர். மூன்று ஆப்ரஹாமிய சமயங்களின்படியும் இப்பிணக்கு சமாதானமான முறையிலேயே தீர்க்கப்படவேண்டும். ஒரு தீர்வு நிலைத்து நிற்க வேண்டுமாயின் அது நீதி, நியாய அடிப்படையில் அமைதல் வேண்டும். சமாதானத் தீர்வு என்பது பலம் மிக்கவர்களுக்கும் பலம் குறைந்தவர்களுக்குமிடையில் பேச்சுவார்த்தை மூலம் பெறப்படக்கூடியதல்ல. பேச்சுவார்த்தைகளில் வேர்ஸை (Versailles) மனப்பாங்கு ஆதிக்கம் செலுத்தக்கூடாது. இதனை உணர்ந்து கொள்வதற்கு தூரநோக்குள்ள ராஜதந்திரம் தேவை.

மூன்று ஆபிரஹாமிய சமயங்களும் ஒன்று குவியும் தளமாகவே உலகின் இப்பகுதி திகழவேண்டும்; பிரிந்து செல்லும் தளமாக அமையக் கூடாது என்பதே எமது நம்பிக்கை. சகிப்புத்தன்மையையும் இறையுணர்வையும் பிரதிபலிப்பதோடு இச்சமயங்களின் பல்வகைமையைச் சூழ்ந்திருக்கும் ஐக்கியத் தன்மையைப் போற்றிக் கொண்டாடும் தள

மாக அது திகழவேண்டும். நல்லறிவும் சமயங்களும் இத்திசையைத் தான் சுட்டிக்காட்டுகின்றன. எல்லாத் தரப்பினரும் தமது செவிகளையும் இதயங்களையும் இறைவனது குரலுக்குத் திறந்துவிட்டால் தான் இது சாத்தியமாகும்.

வரலாற்று ரீதியாக முஸ்லிம்களுக்கும் யூதர்களுக்கும் இடையிலான உறவு ஏற்ற இறக்கங்களைக் கண்டிருக்கிறது. ஆனால் இதற்குக் காரணம் இஸ்லாம் யூத சமயத்துக்கு எதிராகப் பகைமை கொண்டமையல்ல. சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்பவும் நியாயமான காரணங்களின் அடிப்படையிலுமே பிணக்குகள் ஏற்பட்டுள்ளன. அதே வேளை முஸ்லிம்களின் வரலாறு, இஸ்லாமியப் போதனைகளை எப்போதும் உண்மையான முறையில் பிரதிநிதித்துவம் செய்ததாகவும் நாம் கூற முனையவில்லை. குறிப்பாக, சர்வாதிகார ஆட்சிகளின் கீழ் யூதர்களும் கிறிஸ்தவர்களும் மோசமாக நடத்தப்பட்டிருக்கிறார்கள். இதற்கு முஸ்லிம் பிரஜைகள் விதிவிலக்காக இருக்கவுமில்லை. ஏனெனில் அவர்கள்தான் மிக அதிகமாகப் பாதிக்கப்பட்டார்கள். பல நூற்றாண்டுகளாக கிறிஸ்தவ ஐரோப்பாவில் நடத்தப்பட்டது போன்ற அட்டூழியங்கள் எதனையும் முஸ்லிம் உலகில் வாழ்ந்த யூதர்கள் ஒருபோதும் அனுபவித்ததில்லை. இந்த நூற்றாண்டில் இடம்பெற்ற Holocaust என்னும் பேரழிவும் இதில் அடங்கும். கிறிஸ்தவ உலகம் தான் யூதர்களை கர்த்தரைக் கொலை செய்தவர்கள் எனப் பெயரிட்டு அவர்களுக்கெதிராக இனப்படுகொலைகளை நடத்தினர். உண்மையான எதிரிகள் முஸ்லிம்களாக இருந்த நிலையிலும் யூதர்கள் மீது ஐரோப்பா தாக்குதல்களை மேற்கொண்டது. ஐரோப்பாவில் வாழ்ந்த ஆயிரக்கணக்கான யூதர்களைப் படுகொலை செய்வதன் மூலமே முதலாவது சிலுவை யுத்தம் ஆரம்பிக்கப்பட்டது. ‘‘கிழக்கேயுள்ள கர்த்தரின் எதிரிகளோடு போராடுவதற்காக நாம் நீண்டதூரப் படையெடுப்பொன்றை ஆரம்பித்துள்ளோம். ஆனால் அவரது மிக மோசமான எதிரிகளான யூதர்கள் எம் கண்ணெதிரிலேயே இருக்கிறார்கள். எனவே முதலில் அவர்களை கவனிக்கவேண்டும்’’ என்ற குறும்புத்தனமான விளக்கமே இதற்காக முன்வைக்கப்பட்டது.

1942இல் பெர்டினாண்டும் இஸபெல்லாவும் முஸ்லிம்களை வெற்றிகொண்டதன் விளைவாக ஸ்பெயினிலிருந்து யூதர்கள் வெளியேற்றப்பட்டனர். முன்னர் வழங்கப்பட்ட வாக்குறுதிகளுக்கு மாறாக முஸ்லிம்களும் யூதர்களும் தமது சமயங்களை அனுஷ்டிப்பது சட்ட விரோதமாக்கப்பட்டது. அவர்கள் கத்தோலிக்க சமயத்தைத் தழுவத் தவறினால் மரண தண்டனை விதிக்கப்பட்டார்கள் அல்லது நாடு

கடத்தப்பட்டார்கள். பெருந்தொகையான யூதர்கள் அன்றைய இஸ்லாமியக் கிலாபத்தின் தலைமைப் பீடமான துருக்கியில் தஞ்சம் புகுந்தனர். அங்கு அவர்கள் தாராளமாக வரவேற்கப்பட்டார்கள். பெர்டினாண்டும் இஸபெல்லாவும் யூதர்களை வெளியேற்றியதைக் கேலி செய்யும் நோக்கில் "அவர்கள் தமது இராட்சியத்தின் செல்வத்தை இழந்து எனது இராட்சியத்தை செழிப்படையச் செய்தார்கள்" என துருக்கி சுல்தான் கூறினார். ஸ்பெயினில் முஸ்லிம் ஆட்சிக் காலத்தில்தான் நாகரீகத்துக்கான யூதர்களின் பங்களிப்பு செழித்தோங்கியது. கீர்த்தி மிக்க Maimoinides என்பவரை இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூறலாம். இவர் கோர்டோபாவில் இருந்த இப்ன் ருஷ்த் என்ற இஸ்லாமிய தத்துவஞானியின் மாணவர். பிற்காலத்தில் எகிப்துக்கு இடம்பெயர்ந்த இவர் சிலுவை யுத்தத்தில் புகழ் பெற்ற ஸலாஹுத்தீனின் பிரத்தியேக வைத்தியராக இருந்தார்.

இஸ்ரவேலிய அறிஞரும், வரலாற்றாசிரியரும், முன்னைநாள் வெளியுறவுச் செயலாளருமான Abba Eban என்பவர் 'My People' என்ற தனது நூலில் 'யூதர்கள் தமது வரலாற்றில் இரண்டு கட்டங்களில்தான் நியாயமாக நடத்தப்பட்டுள்ளனர். முதலாவது முஸ்லிம் ஸ்பெயினிலும் இரண்டாவதாக தற்கால ஐக்கிய அமெரிக்காவிலும்' எனக் குறிப்பிட்டுள்ளார். பல நூற்றாண்டுகளாக யூதப் பிரஜைகள் இஸ்லாமிய நாடுகளில் பாதுகாப்பையும் சுபீட்சத்தையும் அனுபவித்திருக்கிறார்கள். இன்னும் பல முஸ்லிம் நாடுகளில் குறிப்பிடத்தக்க அளவு யூத சமுதாயங்கள் வாழ்ந்துவருகின்றன. பலஸ்தீனியப் பிரச்சினையில் வேதனைக்குரிய பிரதிவிளைவுகள் இருந்தபோதிலும் சக முஸ்லிம் மற்றும் கிறிஸ்தவ மக்களின் நிலமைகளைவிட அவர்களது நிலைமை மோசமாக இல்லை.

## கிறிஸ்தவர்கள்

"*இவ்வேதத்தில் மர்யமைப் பற்றியும் நினைவுகூர்வீராக! அவர் தன் குடும்பத்தினரை விட்டு கிழக்குப் பக்கமுள்ள இடத்தில் தனித்தபோது, அவர் (தம்மை) அவர்களிடமிருந்து (மறைத்துக்கொள்வதற்காக) ஒரு திரையை ஆக்கிக்கொண்டார். அப்பொழுது நம்முடைய வானவரை அவரிடம் நாம் அனுப்பி வைத்தோம். அவர் சரியான ஒரு மனிதருடைய உருவத்தில் அவருக்கு முன் தோற்றமளித்தார். (மர்யம் வானவரைக் கண்டதும்) "நிச்சயமாக நான் உம்மைவிட்டும் கருணையாளனான இறைவனிடம் பாதுகாவல் தேடுகிறேன். நீர் பயபக்தி உடை*

*யவராக இருந்தால் (என்னிடம் நெருங்காதீர்)'' என்று கூறினார். (அதற்கு) அவர் ''பரிசுத்தமான ஒரு மகனை நன்கொடை யளிப்பதற்காக நிச்சயமாக நான் உமதிரட்சகனின் (வான வராகிய) ஒரு தூதன்தான்'' என்று கூறினார். (அதற்கு) அவர் ''எனக்கு எவ்வாறு புதல்வன் உண்டாக முடியும்? எந்த ஆடவரும் என்னைத் தீண்டியதில்லையே. நான் நடத்தை கெட்டவளும் அல்லவே'' என்று கூறினார். அதற்கவர், அவ்வாறே ''அது எனக்கு எளிது; அவரை மனிதர்களுக்கு ஓர் அத்தாட்சியாகவும், நம்மிடமிருந்து ஓர் அருளாகவும் நாம் ஆக்குவதற்காக (அவரை உண்டாக்கினோம்) என்றும், இது விதிக்கப்பட்டுவிட்ட ஒரு விஷயம் என்றும் உமது இரட்சகனே கூறுகின்றான்'' என்று கூறினார்.*

*பின்னர் அவர் (ஈஸாவாகிய) அவரைக் கருவுற்றார். பின்னர் அக்கர்ப்பத்துடன் தூரமான ஒரு இடத்துக்கு ஒதுங்கிச் சென் றடைந்தார். பின்பு (அவருக்கு ஏற்பட்ட) பிரசவ வேதனை, ஒரு பேரீச்சமரத்தின் அடிப்பாகத்தின்பால் அவரைக் கொண்டு வந்து சேர்த்தது. ''இதற்கு முன்னதாகவே நான் இறந்து முற் றிலும் மறக்கடிக்கப்பட்டவளாக நான் ஆகியிருக்கவேண்டுமே'' என்று (மர்யம்) கூறினார். அப்போது அவருக்கு கீழ்புறமிருந்து (வானவராகிய) அவர் சப்தமிட்டு அவரை அழைத்து ''நீர் கவலைப்படாதீர்! உமக்குக் கீழாக உமதிரட்சகன் ஓர் ஊற்றை திட்டமாக உருவாக்கியிருக்கிறான்'' என்றும் ''இப்பேரீச்ச மரத் தின் அடிப்பாகத்தை நீர் உம் பக்கம் (இழுத்துக்) குலுக்குவீராக! அது பழுத்த பழங்களை உம்மீது சொறியும்'' என்றும் ''அப்போது (அப்பழங்களை) நீர் உண்பீராக இன்னும், (ஊற்றின் நீரைக்) குடித்துக்கொள்வீராக! (இக்குழந்தையினால் உம்) கண் குளிர்ந்தும் இருப்பீராக! பின்னர், மனிதர்களில் எவரை யேனும் நீர் கண்டால், நான் அருளாளனான இறைவனுக்கு நோன்பை நேர்ச்சை செய்திருக்கிறேன். ஆகவே இன்றைய தினம் எந்த மனிதருடனும் நான் பேசவே மாட்டேன் என்று கூறுவீராக!'' (என்றும் கூறினார்)*

*பின்னர் அவர் தம் குழந்தையைச் சுமந்துகொண்டு தன் சமூகத்தாரிடம் வந்தார். அவர்கள் ''மர்யமே! நிச்சயமாக மறுக்கப்பட்ட (இழிவான) காரியத்தை நீர் கொண்டுவந்துவிட்டீர்'' என்று கூறினார்கள். ''ஹாரூனுடைய சகோதரியே! உன் தந்தை கெட்ட மனிதராக இருக்கவில்லை உன் தாயும் நடத்தை*

*கெட்டவராக இருக்கவில்லை'' என்று (நிந்தித்துக்) கூறினார்கள். (தன் குழந்தையிடமே கேட்குமாறு) அவர் அதன் பக்கம் சுட்டிக் காண்பித்தார். அதற்கு அவர்கள் ''மடியில் குழந்தையாக இருப் பவரிடம் நாங்கள் எவ்வாறு பேசுவோம்?'' என்று கூறினார்கள். ''நிச்சயமாக நான் இறைவனுடைய அடியான். அவன் எனக்கு ஒரு வேதத்தைக் கொடுத்து என்னை ஓர் இறைத்தூதராகவும் ஆக்கியிருக்கிறான்'' எனக் குழந்தை கூறியது. ''நான் எங்கிருந்த போதிலும் அவன் என்னை அருள்பெற்றவனாகவும் ஆக்கியிருக் கிறான். நான் உயிரோடிருக்கும் காலமெல்லாம் தொழுகை யைக் கொண்டும் ஸகாத் என்னும் தான தர்மத்தைக் கொண் டும் அவன் எனக்கு உபதேசம் செய்திருக்கிறான். இன்னும், என்னுடைய தாயாருக்கு நான் நன்றி செய்பவனாகவும் ஆக்கப் பட்டுள்ளேன். பெருமைக்காரனாகவோ துர்ப்பாக்கியமுள்ளவனா கவோ அவன் என்னை ஆக்கவில்லை. நான் பிறந்த நாளிலும் நான் இறக்கும் நாளிலும் நான் உயிர்ப்பெற்றவனாக எழுப்பப்படும் நாளிலும் என்மீது (இறைவனின்) சாந்தி உண்டாவதாக!''(19:16-33)*

யேசுநாதரின் வரலாறு இப்படித்தான் குர்ஆனில் கூறப்பட் டிருக்கிறது. குர்ஆன் அவரை 'ஈஸா' என இருபத்தைந்து இடங் களிலும் 'மஸீஹ்' எனப் பதினோர் இடங்களிலும் 'மர்யத்தின் குமாரன்' என இரண்டு இடங்களிலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மர்யம் அவரது பெயரால் முப்பது தடவைகளும் 'தனது கற்பைக் காத்துக்கொண்டவர்' என இரு தடவைகளும் குறிப்பிடப்பட்டிருக்கிறார். எனவே குறிப்பிடத் தக்க அறிஞர்களும், நிபுணர்களும் யாவருக்கும் மேலாக வேத னை தரும் வகையில் மதகுருமார்களும், இஸ்லாத்தையும் முஸ் லிம்களையும் கிறிஸ்துநாதரின் விரோதிகளாக சித்தரித்துக்காட்டுவதை வாசிக்க நேரிடும்போது முஸ்லிம்கள் விசனப்பட்டு வாயடைத்துப் போகிறார்கள். மறுதலையாக கோட்பாட்டு ரீதியான வேறுபாடுகள் எமக்கு இருப்பினும் இயேசு மீதும் மர்யம் மீதும் நாம் கொண்டுள்ள மரியாதையையும் அன்பையும் பற்றி நாம் கூறுவதைக் கேட்டு தக வலறியாத அல்லது தவறான தகவலைப் பெற்றுள்ள கிறிஸ்தவர்கள் பலர் வியப்படைகின்றனர். இஸ்லாத்தில் இயேசுவுக்கும் மர்யத்திற்கும் வழங்கப்பட்டுள்ள உயர்தரமான கண்ணியத்தை வெளிப்படுத்துவதற்கு குர்ஆனின் ஒரு சில கூற்றுக்கள் போதுமானவை:

*(மேலும் மர்யமிடம்) மலக்குகள், ''மர்யமே! நிச்சயமாக இறைவன் தன்னிடமிருந்து (ஆகுக என்ற) ஒரு வார்த்தையைக்*

*கொண்டு உனக்கு (ஒரு மகனை வழங்க) நன்மாராயம் கூறு கின்றான். அவரின் பெயர் மஸீஹ் - மர்யமுடைய மகன் ஈஸா என்பதாகும்; அவர் இம்மையிலும் மறுமையிலும் மிக்க அந்தஸ் தையுடையவராகவும் (இறைவனுக்கு) மிக நெருங்கியவர்களில் ஒருவராகவும் இருப்பார்'' என்று கூறினர். (3:45)*

*''...நிச்சயமாக மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹ் இறை வனுடைய ஒரு தூதரும் அவனுடைய வாக்கும் ஆவார். இறை வன் மர்யமின்பால் அந்த (வாக்கை) போட்டான். (மற்ற ஆன் மாக்களைப் போன்று அவரும்,) அவனிடமிருந்து (படைக்கப்பட்ட) ஓர் ஆன்மாவே...'' (4:171)*

*''தன் கற்பைக் காத்துக்கொண்ட (மர்யம் என்ப)வரையும் (நீர் நினைவுகூர்வீராக!) நம் ஆன்மாவிலிருந்து அவரில் நாம் ஊதினோம். அவரையும் அவருடைய மகனையும் அகிலத் தார்க்கு ஓர் அத்தாட்சியாகவும் நாம் ஆக்கினோம்'' (21:91)*

யூதர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இடையிலான முக்கிய மானதும் வெளிப்படையானதுமான வித்தியாசம் யேசுநாதரைப் பற்றிய அவர்களது நிலைப்பாட்டிலேயே காணப்படுகிறது. யேசுநாதர் தமது சக யூதர்களுக்கு அனுப்பப்பட்ட இறைவனின் தூதரே என முஸ் லிம்கள் நம்புகின்றனர். குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது:

*''விசுவாசம் கொண்டோரே! மர்யமின் புதல்வர் ஈஸா தன் சீடர்களிடம் 'இறைவனின்பால் (அவனது மார்க்கத்திற்காக) எனக்கு உதவிசெய்வோர் யார்?' எனக் கேட்க அச்சீடர்கள் 'நாங்கள் இறைவனின் உதவியாளர்கள்' எனக் கூறியது போன்று இறைவனின் உதவியாளர்களாக நீங்கள் ஆகிவிடுங் கள். (பின்னர்) இஸ்ராயீலில் மக்களில் ஒரு கூட்டம் விசுவாசம் கொண்டது. மற்றொரு கூட்டமோ நிராகரித்தது...'' (61:14)*

யேசுநாதரை நிராகரித்து அவரது தாயார் மீது கற்பில்லாதவள் எனக் குற்றஞ்சுமத்தியவர்களை குர்ஆன் பல இடங்களில் கண் டிக்கிறது.

*''இன்னும் அவர்கள் நிராகரிப்பின் காரணமாகவும், மர்யமின் மீது மாபெரும் அவதூறை அவர்கள் கூறியதாலும் இன்னும் ''இறைவனுடைய தூதர் மர்யமுடைய மகன் ஈஸா மஸீஹை நிச்சயமாக நாங்கள் கொலை செய்துவிட்டோம்'' என்று அவர் கள் கூறியதன் காரணமாகவும் (இறைவன் அவர்களை சபித்து விட்டான்) அவரை அவர்கள் கொல்லவுமில்லை; அவர்கள்*

*அவரை சிலுவையில் அறையவுமில்லை. எனினும் அவர்களுக்கு ஒருவரை ஒப்பாக்(கிக் காண்பிக்)கப்பட்டது. இன்னும் நிச்சயமாக இதில் கருத்துவேறுபாடு கொண்டிருக்கிறார்களே அத்தகையோர் அதுபற்றி சந்தேகத்திலேயே உள்ளனர். வெறும் யூகத்தைப் பின்பற்றுவதைத் தவிர, அதில் அவர்களுக்கு உண்மையான அறிவு கிடையாது. மேலும், உறுதியாக அவர்கள் அவரைக் கொலை செய்யவே இல்லை. மாறாக இறைவன் அவரைத் தன் அளவில் உயர்த்திக்கொண்டான். இன்னும் இறைவன் (யாவரையும்) மிகைத்தவனாக, தீர்க்கமான அறிவுடையவனாக இருக்கின்றான்''. (4:156-158)*

எனவே கிறிஸ்துநாதரின் கொலைக் குற்றத்திலிருந்து யூதர்களை இஸ்லாம் முற்றாக விடுவித்திருக்கிறது. யேசுநாதர் அல்லாத வேறொருவரே (அவர் யூடாஸ் இஸ்காரியட் ஆக இருக்கலாம்) கைது செய்யப்பட்டு சிலுவையில் அறையப்பட்டார் என்ற நம்பிக்கை சில கிறிஸ்தவப் பிரிவினரிடையேயும் காணப்படுகிறது. யேசுநாதரை ஏற்றுக் கொள்ள மறுத்ததற்காக யூதர்களை குர்ஆன் பின்வருமாறு கண் டிக்கிறது:

*''மேலும் நாம் மூஸாவுக்கு திட்டமாக வேதத்தைக் கொடுத் தோம். அவருக்குப் பின் தூதர்களைத் தொடர்ச்சியாக நாம் அனுப்பியும் வைத்தோம். மர்யமின் குமாரர் ஈஸாவுக்குத் தெளி வான அத்தாட்சிகளை வழங்கி பரிசுத்த ஆத்மாவைக் கொண்டு நாம் அவரைப் பலப்படுத்தியும் வைத்தோம். உங்களுடைய மனம் விரும்பாததை எந்தத் தூதரும் உங்களிடம் கொண்டுவந்த போதெல்லாம் (அதை ஏற்காது புறக்கணித்துப்) பெருமையடித் துக்கொள்கிறீர்களா? ஆகவே (அத்தூதர்களில்) ஒரு சாராரை நீங்கள் பொய்யாக்கினீர்கள்; ஒரு சாராரைக் கொலையும் செய் தீர்கள்''. (2:87)*

இறைவனின் அனுமதியோடு இயேசுநாதர் நிகழ்த்தியதாகக் குர்ஆன் கூறும் அற்புதச் செயல்களை முஸ்லிம்கள் நம்புகின்றனர்.

*''மர்யமுடைய மகன் ஈஸாவே! உம்மீதும் உம் தாயார் மீதும் புரியப்பட்டுள்ள என்னுடைய அருளை நீர் நினைவு கூர்வீராக! பரிசுத்த ஆன்மாவைக் கொண்டு, உம்மை நான் பலப்படுத்தியபோது, நீர் தொட்டிலிலும் பக்குவ வயதிலும் (மனிதர்களிடத்தில்) நீர் பேசினீர் என்பதையும், மேலும் வேதத் தையும் ஞானத்தையும் தவ்றாத்தையும் இன்ஜீலையும் நாம்*

*உமக்குக் கற்றுக்கொடுத்ததையும், இன்னும் நீர் என் உத்தரவைக் கொண்டு களிமண்ணால் பறவையின் உருவத்தைப்போல் செய்து, அதில் நீர் ஊதிய சமயத்தில் அது என் உத்தரவு கொண்டு பறவையானதையும், பிறவிக் குருடனையும், வெண் குஷ்ட நோயாளியையும் என் உத்தரவைக் கொண்டு சுகப்படுத்தியதையும், நீர் என் உத்தரவைக் கொண்டு இறந்தோரை (உயிர்ப்பித்துக் கல்லறையிலிருந்து) நீர் வெளியேற்றியதையும் (நினைகூர்வீராக!) இன்னும் இஸ்ராயீலின் மக்களிடம் நீர் தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டுவந்தபோது அவர்களில் நிராகரித்தவர்கள் 'நிச்சயமாக இது தெளிவான சூனியத்தைத் தவிர வேறில்லை' என்று கூறிய சமயத்தில், அவர்களிடமிருந்து நான் உம்மைத் தடுத்துக்கொண்டதையும் நினைவுகூர்வீராக! என்று இறைவன் கூறியதை (நபியே) நீர் நினைவுகூர்வீராக!'' (5:110)*

இவ்வாறான போற்றுதல் மேலும் விரிவுற்று, ஆரம்ப காலத்திலும் நபி முஹம்மத் (ஸல்) அவர்களது காலத்திலும் வாழ்ந்த - உண்மையாக யேசுவைப் பின்பற்றிய கிறிஸ்தவர்களையும் உள்ளடக்கி நிற்கிறது.

*''(அவர்களுக்குப்) பின்னர், அவர்களுடைய அடிச்சுவடுகளின் மீது (ஏனைய) தூதர்களை ஒருவர் பின் ஒருவராக நாம் தொடரச் செய்தோம். அவ்வாறே மர்யமுடைய மகன் ஈஸாவையும் நாம் தொடரச் செய்தோம். அவருக்கு இன்ஜீலையும் (வேதமாகக்) கொடுத்தோம். இவரைப் பின்பற்றி இருந்தவர்களுடைய இதயங்களில், இரக்கத்தையும் கருணையையும் நாம் ஆக்கினோம் ...'' (57:27)*

*''...மேலும் அவர்களில் ''நிச்சயமாக நாங்கள் கிறிஸ்தவர்கள்'' என்று கூறுகின்றனரே அத்தகையோரை விசுவாசங் கொண்டிருந்தோருக்கு அன்பால் மிக்க நெருக்கமானவர்களாக நீர் காண்பீர்; அது (ஏனெனில்) அவர்களில் (கற்றறிந்த) குருக்களும் துறவிகளும் இருக்கின்றனர்; மேலும் நிச்சயமாக அவர்கள் பெருமையடிக்கமாட்டார்கள் என்பதினாலாகும்'' (5:82)*

அடுத்து, முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இடையில் காணப்படும் சில வேறுபாடுகளைக் கவனிப்போம். எல்லாவற்றுக்கும் மேலாக கன்னி மர்யமின் கற்பின் தூய்மையை நம்புகின்ற முஸ்லிம்கள், இறைவன் யேசுவைத் தந்தையின்றிப் படைத்தான் என்கின்றனர். அவரை இறைவன் பெற்றெடுத்தாகக் கூறுவதில்லை. முஸ்லிம்

களைப் பொறுத்தவரையில் இறைவன் அவ்வாறான உயிரியல் பண்பு களுக்கு அப்பாற்பட்டவன். ஏனெனில் குர்ஆனில் கூறப்படுவதுபோல அவன் முடிவற்றவன், தனித்துவமானவன்:

*''நீர் கூறுவீராக: அவன் - இறைவன் ஒருவனே. இறைவன் தேவையற்றவன். அவன் (எவரையும்) பெறவில்லை; அவன் பெறப்படவுமில்லை. மேலும் அவனுக்கு நிகராக எவருமில்லை'' - (112:1-4)*

யேசு இறைவனின் மகன் என்ற நம்பிக்கை இஸ்லாமிய அடிப் படைக்கு முரணானது. அதேபோன்று மர்யம் இறைவனைப் பெற் றெடுத்த அன்னை என்ற கோட்பாடும் ஏற்றுக்கொள்ளப்படமுடியாது. மர்யமும் யேசுவும் இஸ்லாத்தினால் உயர்வாக மதிக்கப்படுகின்ற மனிதப் பிறவிகளே. யேசு தந்தையின்றி பிறந்தார் என்பதற்காக அவர் ''இறைவன் பெற்றெடுத்த ஒரு மகன்'' ஆகிவிடமாட்டார் என்பதே இஸ்லாமிய கோட்பாடு. குர்ஆன் இதனை இப்படிக் கூறுகின்றது:

*''நிச்சயமாக, இறைவனிடம் ஈஸாவுக்கு உதாரணம் ஆத முடைய உதாரணத்தைப் போன்றதே! அவன் அவரை மண் ணால் படைத்துப் பின் அதற்கு 'ஆகுக' என்று கூறினான்; அவர் (அவ்வாறு) ஆகிவிட்டார்''. (3:59)*

யேசுநாதர் தனக்கோ தம் தாயாருக்கோ தெய்வீகத் தன்மை யைக் கோரவில்லை:

*''அன்றியும் இறைவன் (ஈஸாவிடம்) ''மர்யமுடைய மகன் ஈஸாவே! இறைவனைத் தவிர என்னையும் எனது தாயையும் இரண்டு வணக்கத்திற்குரியவர்களாக எடுத்துக்கொள்ளுங்கள் என்று மனிதர்களுக்கு நீர் கூறினீரா?'' என்று கேட்பான். (அதற்கு) ''நீ மிகப் பரிசுத்தமானவன்; எனக்கு ஒரு சிறிதும் உரிமை இல்லாததை நான் (ஒருபோதும்) கூறுவதற்கு எனக்குத் தகுதி இல்லை; அவ்வாறு நான் கூறியிருந்தால், நிச்சயமாக நீ அதனை அறிந்திருப்பாய். என் உள்ளத்தில் உள்ளதை நீ நன்கறிவாய்; உன் உள்ளத்தில் உள்ளதை நான் அறியமாட்டேன். நிச்சயமாக நீதான் மறைவானவற்றை நன்கு அறிந்தவன்'' என்று கூறுவார்.*

*''என்னுடைய இரட்சகனும், உங்களுடைய இரட்சகனுமான இறைவனை வணங்குங்கள்'' (என்று மக்களுக்கு நான் கூற வேண்டும்) என நீ எதை எனக்குக் கட்டளையிட்டாயோ, அதைத் தவிர (வேறு) எதையும் நான் அவர்களுக்குக் கூற*

*வில்லை; நான் அவர்களுடன் இருந்தவரையில் அவர்களின் செயலைத் தெரிந்துகொண்டிருந்தேன்; பின்னர் நீ என்னைக் கைப்பற்றிய பொழுது, நீதான் அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய்; நீயே ஒவ்வொரு பொருளின் மீது சாட்சியாளன்'' (என்றும்)*

*(இரட்சகா) ''அவர்களை நீ வேதனை செய்தால், நிச்சயமாக அவர்கள் உன்னுடைய அடியார்களே! அன்றியும் அவர்களை நீ மன்னித்துவிட்டால் நிச்சயமாக நீதான் (யாவரையும்) மிகைத்தவன்; தீர்க்கமான அறிவுடையவன்'' (என்றும் கூறுவார்) (5:116-118)*

எனவே, யேசுநாதர் கூறியதாக புதிய ஏற்பாட்டில் வருகின்ற பின்வருவது போன்ற கூற்றுக்களை முஸ்லிம்கள் அங்கீகரிக்கின்றனர்:

''என்னை ஏன் இறைவன் என்று அழைக்கிறீர்கள்? ஒருவனைத் தவிர சிறந்தவன் வேறெவரும் இல்லை. அவனே இறைவன்'' (மார்க் 10:18)

யேசுநாதர் சிலுவையின் மீது இருந்தபோது ''எலீ, எலீ, லாமா ஸபச்தானி?'' எனச் சப்தமிட்டதாக புதிய ஏற்பாடு கூறுகிறது. இதன் கருத்து ''என் இறைவா, என் இறைவா, நீ ஏன் என்னைக் கைவிட்டு விட்டாய்?'' (மார்க் 15:34) என்பதே. எனவே அவர் தன்னையன்றி வேறொருவருடன் தான் பேசியிருக்கவேண்டும் என்பது வெளிப்படை. இறைவனின் திரித்துவம் என்ற கருத்துப்படிவத்துக்கு இஸ்லாத்தில் இடமேயில்லை.

*''...மூன்று என்று கூறாதீர்கள். அதைவிட்டு விலகிவிடுங்கள். அது உங்களுக்கு மிக நன்றாக இருக்கும். நிச்சயமாக இறைவன் ஒரே நாயன் தான். அவனுக்கு மக்கள் இருப்பதைவிட்டும் அவன் மிகப் பரிசுத்தமானவன். வானங்களில் உள்ளவை மற்றும் பூமியில் உள்ளவை அவனுக்கே உரியன...'' (4:171)*

முடிவிலியான இறைவன் மூன்றாகப் பிரிக்கப்பட முடியும் என்பதையோ, ஈஸாவுக்கு அல்லது பரிசுத்த ஆத்மாவுக்கு தெய்வீகத் தன்மை வழங்கப்படுவதையோ முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்வதில்லை. தனி இறைவனில் மூன்று தெய்வீக ஆளுமைகள் பற்றி யேசுநாதர் எதுவும் கூறவில்லை என்பதே முஸ்லிம்களின் நிலைப்பாடு. இறைவனின் ஏகத்துவம் தொடர்பாக (திரித்துவம் பற்றியல்ல) முன்சென்ற இறைதூதர்கள் போதித்த கருத்துகளுக்கு மாற்றமான கருத்துப்படிவம் எதனையும் அவர் கொண்டிருக்கவில்லை. மேலும் திரித்துவம் பற்றிய கருத்துப்படிவத்தை ஆரம்பகால கிறிஸ்தவர்கள் அறிந்திருக்கவில்லை.

வரலாற்றின்படி கி.வ. 325 இல் நிகழ்ந்த Nicaea காங்கிரஸில் தான் அது ரோமப் பேரரசின் சமயக் கோட்பாடாகப் பிரகடனப்படுத்தப்பட்டது. சக்கரவர்த்தி கொன்ஸ்டன்டைனின் கீழ் பேரரசின் முழு அதிகாரத்தையும் பயன் படுத்தி அது பலவந்தமாக அமுல்படுத்தப்பட்டது. ''மூன்று ஆளுமை களில் ஒரே இறைவன்' என்ற கருத்து 4ம் நூற்றாண்டுக்கு முன்னர் கிறிஸ்தவ வாழ்க்கையிலோ அச்சமயத்தின் பின்பற்றலிலோ திடமாக வேரூன்றியிருக்கவில்லை' எனப் புதிய கத்தோலிக்க கலைக் களஞ் சியம் கூறுகின்றது.

ஆரம்ப பாவம் (Original Sin) என்ற கருத்துப்படிவமும் முரண் பாட்டுக்குரியது. பைபிளின்படி தடுக்கப்பட்ட மரத்திலிருந்து புசிக்குமாறு சாத்தான் ஏவாளைத் (ஹவ்வா) தூண்டிவிட அவர் அதைச் செய்யுமாறு ஆதமைத் தூண்டிவிட்டார். இதன் மூலம் அவர்கள் பாவம் செய்தார் கள். பின்னர் அவர்களிருவரும் அவமானப்பட்டு தண்டனையாகப் பூமிக்கு அனுப்பப்பட்டார்கள். இது தொடர்பான கூடுதலான பழி ஏவாள் மீது சுமத்தப்பட்டது. ''அந்தப் பெண்ணை நோக்கி அவர் சொன்னார்: உனது துக்கத்தையும் கருவுறுதலையும் நான் பெருகச் செய்வேன். துக்கத்துடனேயே நீ பிள்ளைகளைப் பெறுவாய். உனது ஆசை உன் கணவன் மீதே இருக்கும். அவர் உன்மீது ஆட்சி செய்வார்'' (ஆதியா கமம் 3:16) எல்லா மனிதர்களும் அந்த பாவத்தை வாரிசுரிமையாகப் பெறுவார்கள். ஒவ்வொரு குழந்தையும் பாவியாகவே பிறக்கின்றது என்பதே பொதுவான கிறிஸ்தவப் போதனையாக இருக்கின்றது.

இந்த நிகழ்வைப் பற்றி குர்ஆன் கூறும் முறையின்படி சாத்தான் ஆதம், ஹவ்வா ஆகிய இருவரையும் பாவம் செய்யத் தூண்டினான். அவர்களிருவரும் பாவம் செய்தனர். அவர்கள் இருவரும் பாவ மன்னிப்புத் தேடினார்கள். அவர்கள் இருவரும் மன்னிக்கப்பட்டார்கள். ஆரம்ப பாவம் அத்தோடு முடிவடைந்துவிடுகிறது:

*''பின்னர், அவ்விருவருக்கும் மறைக்கப்பட்டிருந்த அவ்விரு வருடைய வெட்கத் தலங்களை அவ்விருவருக்கும் வெளிப்படுத் துவதற்காக சைத்தான் (அவர்களிடம் இரகசியமாகப் பேசி) ஊசாட்டத்தை அவ்விருவருக்கும் உண்டாக்கினான். மேலும் (அதன் கனியைப் புசித்தால்) நீங்கள் இருவரும் வானவர் களாகுவீர்கள் அல்லது நிரந்தரமாக இருப்பவர்களில் நீங்கள் இருவரும் ஆகிவிடுவீர்கள் என்பதற்காகவே தவிர (வேறெதற் காகவும்) உங்கள் இரட்சகன் அம்மரத்தை விட்டும் உங்களிரு வரையும் தடுக்கவில்லை'' என்று கூறினான். ''நிச்சயமாக நான் உங்களிருவருக்கும் உபதேசம் செய்பவர்களில் (ஒருவ*

*னாக) இருக்கிறேன்'' என்று அவ்விருவரிடமும் (சாத்தான்) சத்தியமும் செய்தான் (7:20-21) அவர்களது பாவமன்னிப்புக் கோரலின் பின்னர் ''ஆதம், சில வாக்கியங்களைத் தன் இரட்ச கனிடம் பெற்றுக்கொண்டார். அதனால் (இறைவன்) அவரின் பாவமீட்சியை அங்கீகரித்தான்; நிச்சயமாக அவனே பாவ மன்னிப்புக்கோரலை மிகுதியாக ஏற்பவன்; மிகக் கிருபை யுடையவன்'' (2:37)*

பின்னர் ஆதம் இறைதூதராக உயர்த்தப்பட்டு மனித சமு தாயத்தினர் பூமியில் இறைவனின் பிரதிநிதிகளாக ஆக்கப்பட்டனர். மனிதர்களைப் பின்தொடர்ந்து சென்று வழிகெடுத்தப்போவதாக சைத்தான் சூளுரைத்தான். எனினும் சைத்தானின் சூழ்ச்சிகளில் இருந்து தம்மைக் காத்துக்கொள்ளத் தேவையான வழிகாட்டல்களை மனிதர்களுக்கு வழங்குவதாக இறைவன் வாக்களித்தான். இறை வழிகாட்டலைப் புறக்கணிக்கத் துணிந்தவர்கள் மட்டுமே சைத்தானின் வலையில் சிக்குவார்கள். எனவே ஒவ்வொரு மனிதனும் தூய் மையானவனாகவே பிறக்கின்றான். அதன் பின்புதான் எமது தெரிவு கள் எம்மைக் கறைபடுத்திப் பாவிகளாக மாற்றுகின்றன. பாவம் என்பது பிள்ளைகள் தம் பெற்றோரிடமிருந்து வாரிசாகப் பெற்றுக் கொள்கின்ற ஒன்றல்ல என்பதே இஸ்லாத்தின் கருத்தாகும்.

இதனடிப்படையில், ஒவ்வொருவரும் தனிப்பட்ட முறையில் பொறுப்புக்கூறவேண்டும் என்றே இஸ்லாம் வலியுறுத்துகிறது.

*''எவர் நேர்வழியில் செல்கின்றாரோ, அவர் நேர்வழியில் செல்வதெல்லாம் தனக்காகவேதான்; எவர் வழிகேட்டில் செல் கின்றாரோ அவர் வழிகெடுவதெல்லாம் தனக்கேதான். இன்னும் (பாவத்தைச்) சுமக்கக்கூடிய ஓர் ஆத்மா மற்றொன்றின் (பாவச்) சுமையைச் சுமக்காது...'' (17:15)*

எனவே பிறர் பொருட்டு பலிபீடம் ஏறுவது பற்றிய கருத்து இஸ்லாத்துக்கு ஒவ்வாதது. மனிதர்களுடைய பாவத்துக்கு பிராயச் சித்தமாக யேசுநாதரோ வேறொருவரோ பலியிடப்படவேண்டி இருந்தது என்ற கூற்றும் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. இஸ்லாத்தில் நற் காரியங்களைப் புரிந்து உளத்தூய்மையோடு பாவமன்னிப்புக் கோருவதன் மூலமே இறை மன்னிப்புக் கிடைக்கமுடியும் - இரத்தம் சிந்துவதால் அல்ல.

*''...அவர்கள் எத்தகையோரென்றால், யாதொரு மானக் கேடான செயலை அவர்கள் செய்துவிட்டால், அல்லது (பாவம்*

*செய்து) தமக்குத் தாமே அநியாயம் செய்துகொண்டால் (உடனே) இறைவனை நினைவுகூர்வார்கள். இன்னும் (அவனிடமே) தங்கள் பாவங்களுக்காக மன்னிக்கத் தேடுவார்கள். இறைவனைத் தவிர (இவர்களின்) குற்றங்களை மன்னிப்பவன் யார்? அவர்கள் செய்த செயலை (தவறென்று) அவர்கள் அறிந்துகொண்டே (அதில்) நிலைத்திருக்கவும் மாட்டார்கள்...'' (3:135)*

எந்தப் பாவமும் இறைவனால் மன்னிக்க முடியாத அளவுக்குப் பெரியதாக இருக்காது.

*''தங்கள் மீது (தாங்களே) வரம்பு மீறிவிட்டோராகிய அடியார்களே! இறைவனின் அருளிலிருந்து நிராசைகொண்டோராக நீங்கள் ஆகிவிடவேண்டாம். நிச்சயமாக இறைவன் (உங்கள்) பாவங்கள் யாவையும் மன்னித்துவிடுவான். நிச்சயமாக அவன்தான் மிக்க மன்னிக்கிறவன்; மிக்க கிருபையுடையவன்'' என்று நபியே நீர் கூறுவீராக! (39:53)*

இறைவன் பின்வருமாறு கூறுவதாக இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளார்கள்: ''ஆதமின் மகனே! நீ பூமியளவிலான பாவத்துடன் என்னை நெருங்கி பாவ மன்னிப்புக் கேட்டு எனக்கு எதனையும் இணையாக்காமல் என்னை வணங்கி வழிபட்டால் பூமியளவிலான பாவமன்னிப்புடன் நான் உன்னை நெருங்குவேன்''.

யேசுநாதரின் இரத்தத்தின் மூலம் பாவப் பிராயச்சித்தம் தேடுவதையோ, இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட (இறைவனிடம் விசேட சலுகைகளை அனுபவிக்கின்ற) மக்கள் கூட்டம் என்ற கருத்தையோ ஏற்றுக்கொள்ளாத முஸ்லிம்கள் தாங்கள் மன்னிப்பவர்களாக இருப்பதன் மூலம் இறைவனின் மன்னிப்பில் தமக்குள்ள பெரு நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றனர். தனிமனிதர்களுக்கிடையிலோ, கோத்திரங்கள், தேசங்கள் முதலியவற்றுக்கு இடையிலோ மன்னிக்கும் மனப்பான்மையைப் பிரயோகிப்பதே இஸ்லாத்தின் சாராம்சமாக இருக்கின்றது. புரியப்பட்ட அக்கிரமத்துக்கு ஏற்ப தண்டனை வழங்குவதற்குச் சட்டம் முனைகின்ற வேளையிலும் குற்றமிழைக்கப்பட்ட சார்பினர் மன்னிப்பு வழங்குவதற்கே தூண்டப்படுகின்றனர். *''தீமைக்கு கூலி அதேபோன்ற தீமையேயாகும். ஆனால், எவரேனும் (பிறரின் அக்கிரமத்தை) மன்னித்து சமாதானம் செய்துகொண்டால்*

*அவருடைய கூலி இறைவனின் மீது (கடமையாக) இருக்கின்றது. நிச்சயமாக அவன் அநியாயம் செய்வோர்களை நேசிக்கமாட்டான்'' (42:40) ''....அவர்களை மன்னித்துவிடவும் (பழைய வருத்தத்தைப்) பொருட்படுத்தாதுவிடவும். இறைவன் உங்களுக்கு மன்னிப்பளிப்பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா?...'' (24:22)*

ஒருவர் எப்போதும் எந்த இடத்திலும் இறைவனிடம் நேரடியாக பாவமன்னிப்புக் கோரலாம். இதற்காக அவருக்கு இடைத்தரகர் ஒருவரோ சிபாரிசு செய்யும் ஒருவரோ தேவையில்லை. எந்தவொரு ஆணோ பெண்ணோ தன்னைப் படைத்தவனுடன் நேரடி தொடர்பு கொள்ள முடியும். அவர்கள் அவனது கருணையையோ பாவமன் னிப்பையோ வேண்டி அழும் போதெல்லாம் அவன் செவிமடுக்கவும் மன்னிக்கவும் செய்கின்றான். தனது பாவச்செயலை ஒப்புக்கொள் வதற்காகத் தன்னையொத்த மனிதப் பிறவியிடம் செல்வதற்கும் அப் படிச் சென்றவரிடம் ''போ பிள்ளாய், நீ மன்னிக்கப்பட்டுவிட்டாய்'' என்பது போன்று அவர் கூறுவதற்கும் இஸ்லாத்தில் இடமில்லை. மன்னிப்பு வழங்குவது இறைவனின் அதிகாரத்துக்கு உட்பட்டது. அவனுடைய அப்பணியை வேறு எவரும் செய்யமுடியாது. உண் மையில் இஸ்லாத்தில் சமயக் குருமாரின் அமைப்பொன்று இல்லை. மார்க்க அறிஞர்கள் இருக்கின்றார்களேயொழிய மதகுருமார் இல்லை. இறைவனின் கருணை எல்லையற்றது. எனவே அவனே எமக்கு நியாயம் வழங்குவான் அல்லது கருணை காட்டுவான் (அவனே முற்றிலும் நியாயம் வழங்குபவன்; முற்றிலும் கருணையாளன்) அவன் தனது நியாயத்தைவிடக் கருணையையே வழங்க வேண்டும் என நாம் வாழ்நாள் முழுதும் பிரார்த்திக்கிறோம். எமது பாவமன்னிப்புக் கோரிக்கையானது உண்மையானதாக, இதயச்சுத்தி கொண்டதாக இருக்கவேண்டும். அது எமது உள்ளத்தில் பதிந்திருப்பின் எமது செயற்பாடுகளில் பிரதிபலிக்கவேண்டும். என்னுடைய பணப்பையைத் திருடிவிட்ட ஒருவர் அதனைத் திருப்பித்தர மறுத்துவிட்டு 'இறைவா என்னை மன்னித்துவிடு' என மில்லியன் தடவைகள் வேண்டினாலும் அது முரண்பாட்டுக்குரியதே. மூன்றாவது தரப்பினர் சம்பந்தப்பட்டிருப் பின் நியாயம் வழங்குவதற்கே முதலிடம் கொடுக்கப்படவேண்டும்.

இந்தக் கோட்பாட்டு வித்தியாசங்கள் அற்புதமானவையுமல்ல; புறக்கணிக்கப்படக்கூடியவையுமல்ல. எனினும் இவற்றுக்காக ஒருவரை யொருவர் வெறுப்பதும் தம்மிடையே சண்டையிடுவதும் முட்டாள் தனமானது; தீய பயன்தரக்கூடியது. நம்பிக்கைகள் தொடர்பான விவாதங்கள், நாகரீகமான விவாத முறைக்குரிய உயர் ஒழுங்கு

முறைகளுக்கேற்ப அமைதல் வேண்டும். *''நீங்கள் வேதத்தையுடை யோர்களுடன் எது மிக அழகானதோ அதைக் கொண்டல்லாது தர்க்கிக்க வேண்டாம். (ஆயினும்) அவர்களில் அநியாயம் செய்தோர் தவிர ''எங்களுக்கு இறக்கப்பட்டதையும் உங்களுக்கு இறக்கப் பட்டதையும் நாங்கள் விசுவாசிக்கின்றோம். எங்கள் வணக்கத் திற்குரியவனும் உங்கள் வணக்கத்திற்குரியவனும் ஒருவனே. நாங்கள் அவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடக்கின்றவர்கள்'' என்று கூறுங்கள். (29:46)*

கிறிஸ்தவர்களினதும் முஸ்லிம்களினதும் கண்ணோட்டங்களுக் கிடையில் பாரதூரமான வேறுபாடுகள் இருந்தபோதிலும், பொதுமைப் பாட்டுக்குரிய விடயங்களை விவரித்துக்காட்டி அவற்றின் விசாலத்தை அனுபவிப்பதில் இஸ்லாம் ஆர்வம் காட்டுகின்றது. *''நீர் கூறுவீராக! ''வேதத்தையுடையவர்களே! எங்களுக்கும் இன்னும் உங்களுக் குமிடையே, நாம் இறைவனைத் தவிர வேறொன்றையும் வணங் கக்கூடாது; நாம் அவனுக்கு யாதொன்றையும் இணையாக்கவும் கூடாது. நம்மில் சிலர், சிலரை இறைவனையன்றி தெய்வங்களாக எடுத்துக்கொள்ளவும் கூடாது என்ற சமனானதொரு வார்த்தை யின்பால் வாருங்கள்; (இதை ஏற்காது) அவர்கள் புறக்கணித்தால், (அவர்களிடம்) ''நிச்சயமாக நாங்கள் (அவன் ஒருவனுக்கே முற்றிலும் கீழ்ப்படிந்த) முஸ்லிம்கள் என நீங்கள் சாட்சியம் கூறுவீர்களாக!'' என்று நீங்கள் கூறிவிடுங்கள். (3:64)* அதற்கு அப்பால் உறவுகள் சமாதானத்திற்குரியனவாகவும் நட்புரீதியாகவும் அமைதல் வேண்டும்.

சமயக் கோட்பாடுகள் தொடர்பான விடயங்களை மேற்கூறிய வாறு அலசிய பின்னர் முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவ ராஜ்யத்துக்கும் இடையிலான புவியியல் - அரசியல் சார்ந்த வரலாற்றினைச் சுருக் கமாக இங்கே ஆராய்வது பொருத்தமற்றதாக இருக்காது. இஸ் லாத்தின் இறுதி தூதரின் காலத்தில் கிழக்கே பாரசீகப் பேரரசும் மேற்கிலே ரோமப் பேரரசுமாக இருபெரும் அதிகார பீடங்களின் கீழ் உலகம் இருந்தது. பாரசீகர்கள் நெருப்பை வணங்குகிறவர்களாகவும் ரோமர்கள் கிறிஸ்தவர்களாகவும் இருந்ததனால் முஸ்லிம்கள் இயல் பாகக் கிறிஸ்தவர்கள் மீதே அனுதாபம் கொண்டனர். அவ்விரு பேரரசுகளுக்குமிடையில் நீண்டகாலமாக இராணுவப் போராட்டம் நிகழ்ந்துவந்ததோடு இஸ்லாத்தின் ஆரம்ப கட்டத்தில் கிறிஸ்தவர்கள் தோல்வியுறலாயினர். இந்தப் போக்கு மாறும் என குர்ஆன் தீர்க்க தரிசனம் கூறியது. *''(அது உண்மையாகிற்று) ரோமபுரி (பாரசீகர்களால்) வெற்றிகொள்ளப்பட்டுவிட்டது. சமீபத்திலுள்ள நிலப் பகுதியில் அவர்*

*களின் தோல்விக்குப் பிறகு அவர்கள் சில வருடங்களில் வெற்றி யடைவார்கள். முற்காலத்திலும் பின்வரும் காலத்திலும் அதிகாரம் இறைவனுக்கே உரியது. (அவர்கள்) இறைவனின் உதவிகொண்டு வெற்றியடையும் அந்நாளில் விசுவாசிகள் மகிழ்ச்சியடைவார்கள். அவன் தான் நாடியவர்களுக்கு உதவி புரிகிறான்; அவன் (யாவரையும்) மிகைத்தவன்; பெருங்கிருபையுடையவன்.'' (30:2-5)*

பல வருடங்களின் பின்னர், அராபிய தீபகற்பத்திலே இஸ்லாம் நிலைபெற்றதோடு இரு பேரரசுகளினதும் மருங்குகளிலே அது ஓர் அரசாகவும் எழுச்சிபெறுகின்ற ஓர் அரசியல் சக்தியாகவும் தன்னை உறுதிப்படுத்திக்கொண்டது. இதனைப் பாரதூரமான அச்சுறுத்தலாகக் கண்ட பேரரசுகள் இரண்டும் இஸ்லாமிய அரசுக்கு எதிரான எதிர்ப்பு நடவடிக்கைகளைத் தூண்டிவிட்டன. இதற்காகத் தமக்கு விசுவாசமான அராபியக் கோத்திரங்களைப் பயன்படுத்திய அவை பின்னர் தமது மாபெரும் படையணிகளைப் பிரயோகித்தன. எதிரிகளின் வலிமை யோடு ஒப்பிடுகையில் இஸ்லாமியப் படையினர் எண்ணிக்கையிலும் யுத்தத்தளபாடங்களிலும் நலிவுற்றுக் காணப்பட்ட போதிலும் மேற் குறித்த இராணுவ மோதல்களின் விளைவுகள் வியப்புத்தருவனவாக அமைந்தன.

கிழக்கிலே பாரசீக அரச வம்சம் முடிவுக்கு வந்ததோடு அவர் களது ஆட்சியின் கீழிருந்த மக்கள் முழுமையாகவே இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டனர். மேற்கிலே ரோமப் பேரரசின் அதிகாரம் பின் னோக்கித் தள்ளப்பட்டது. ஒரு நூற்றாண்டுக்குக் குறைந்த காலப் பகுதியில் அன்று அறியப்பட்டிருந்த உலகின் அரைவாசியைவிடக் கூடுதலான பகுதி பல்வகைமை கொண்ட இஸ்லாமிய பேரரசின் கீழ் வந்திருந்தது. கிறிஸ்தவத் திருச்சபையின் கையில் அழிவுறாமல் கிரேக்க அறிவுப் பாரம்பரியத்தைப் பாதுகாத்த இஸ்லாமிய நாகரி கத்தின் இருப்பிடமாக இது அமைந்தது. இதன் விளைவாக மருத் துவம், வேதியல், இயற்பியல், கணிதம் (அல்ஜிப்ரா என்பது ஓர் அராபியச் சொல். அந்த அறிவுத்துறை முஸ்லிம்களாலேயே கண்டு பிடிக்கப்பட்டது), இசை, தத்துவம் போன்ற அறிவுத்துறைகளில் துரித மான முன்னேற்றம் ஏற்படலாயிற்று. இவை தவிர சமயத்துறை அறி வியல், அராபிய இலக்கியம் மற்றும் மொழிப்பணி என்பனவும் வளர்ச்சி கண்டன. இந்த நாகரிகத்தின் விருத்திக்குப் பல இனங்களையும் சமயங்களையும் சேர்ந்த மக்கள் பங்களிப்புச் செய்தனர்.

மனித உள்ளத்துக்கு சமயரீதியான அல்லது வேறுவகையான தணிக்கைகள் ஏதுமற்ற இந்த நாகரிகத்தைக் கண்ணுற்ற ஐரோப்பா

தனது இருண்ட யுகத்திலிருந்து மீள்வதற்குரிய முதலாவது தூண்டுதலைப் பெற்றது. அறபு மொழியே அறிவியலின் மொழியாக இருந்தது. ஆரம்பகால ஐரோப்பிய பல்கலைக்கழகங்கள் முஸ்லிம் பேராசிரியர்களை வேலைக்கமர்த்தியதோடு முஸ்லிம்கள் எழுதிய நூல்களையே பல நூற்றாண்டுகளாகப் பயன்படுத்திவந்தன. கிரேக்க தத்துவஞானிகளின் ஆக்கங்களைப் பற்றி ஐரோப்பா அறிந்து கொண்டது, அறபு மொழியிலிருந்து அவற்றை மொழிபெயர்ப்பதன் மூலமே. அச்சடிக்கும் முறை கண்டுபிடிக்கப்பட்டதன் பின்னர் அறபு மூலங்களின் மொழிபெயர்ப்புக்களே மெருமளவில் அச்சுப்பதிக் கப்பட்டன.

முஸ்லிம் பேரரசு நலிவடையத் தொடங்கியதும் ஐரோப்பா எதிர் தாக்குதல் நடத்தியது. வரலாற்று ரீதியாக ஏற்பட்ட முக்கிய நிகழ்வுகளில் கிழக்கிலே நடந்த சிலுவைப் போர்களும், மேற்கிலே இஸ்லாமிய ஸ்பெயினை பெர்டினாண்டும் இஸபெல்லாவும் வெற்றி கொண்டமையும் குறிப்பிடத்தக்கவை. பின்னையதன் விளைவாக Inquisition என்னும் சமய விசாரணையும் ஸ்பெயின் சமயச் சுத்திகரிப்பும் நிகழ்ந்தன. முஸ்லிம்களும் யூதர்களும் இச்சமயச் சுத்திகரிப்புக்குப் பலியாயினர். அத்தோடு புதிய உலகின் கண்டுபிடிப்புக்கும் வழி கோலப்பட்டது. தொடர்ந்து conquistadorsகளின் ஆட்சியும், அரசின் அனுசரணையுடனான அடிமை வியாபாரமும் உருவாகின.

முஸ்லிம் உலகின் பிரதான பகுதிகளை நேரடியாக ஆக்கிர மிக்கும் ஒரு முயற்சியாகவே சிலுவைப் போர்கள் அமைந்தன. ஜெரு ஸலத்தில் இருந்த கிறிஸ்தவ புனிதத் தலங்களை முஸ்லிம்களிட மிருந்து விடுவிப்பது என்பது அப்போது இம்முயற்சிக்கான நியாயமாக முன்வைக்கப்பட்டது. இரண்டு நூற்றாண்டுகளாக சிலுவைப் போர்கள் தூண்டிவிட்ட சமயவெறி இன்றும் மேற்கத்திய உள்ளங்களில் தேங்கிக் கிடப்பதோடு சிலவழிகளில் மேற்கத்திய கலாசாரத்தையும் வடி வமைத்திருக்கிறது. சமகால பிரதான கிறிஸ்தவ சமயக்குழுக்கள் சிலுவைப் போர்களைக் கண்டித்து, அவை கிறிஸ்தவத்தின் பெயரில் நாடுபிடிக்கும் ஆசைகொண்டவர்களால் அக்கிரமங்கள் பல புரிந்து நடாத்தப்பட்ட போர்கள் என விவரித்துள்ள நிலைமையிலும் மேற் சொன்ன மனப்பாங்கு தொடர்வதைக் காணலாம்.

ஆங்கிலத்தில் சிலுவைப் போரைக் குறிக்கும் ‘Crusade’ என்ற பதம் (வினையாகவும் பெயராகவும்) மொழிவழக்கில் ஆழமான உணர் வுகளை வெளிப்படுத்தும் உன்னதச் சொல்லாக நிலைபெற்றுள்ளது.

சுயஆய்வும் சுயமதிப்பீடும் செய்யப்படும் விதத்தில் சிலுவைப் போர்கள் பற்றிக் கிறிஸ்தவ சமுதாயம் மீளக்கற்பிக்கப்படவேண்டும் என மத குருமாரும் பொதுமக்களும் உட்படப் பல கிறிஸ்தவர்கள் நினைப்பது போன்றே நாமும் நினைக்கின்றோம். ஸ்பானிய மதவிசாரணை (Inquisition) மற்றும் ஜெர்மனிய இனப்படுகொலை (Holocaust) என்பன தொடர்பாக இவ்வணுகுமுறை ஏற்கனவே வெற்றியளித்திருக்கின்றது. சிலுவைப் போர்களின் உண்மையான தன்மையை ஒப்புக்கொள்வதற் கான திட முயற்சி, புது உலக அமைப்பொன்றைத் தயார்படுத்துவதற்கு அவசியம் தேவைப்படுகிறது. ஒவ்வொன்றும் ஒரு பில்லியனுக்கு மேற்பட்ட மக்கள் தொகையைக் கொண்டுள்ள மனித சமுதாயத்தின் இரு தரப்பினர்களுக்கிடையில் நல்லிணக்கத்துக்கான வாயில்களைத் திறந்துவிட இது வழிகோலும். போலித்தனமான சமயப் பற்று என்ற போர்வையினுள் பொஸ்னியாவிலும் உலகின் இன்னோரன்ன பகுதிகளிலும் நிகழ்த்தப்படும் இதுபோன்ற அட்டூழியங்களைத் தவிர்ப்பதற்கும் இது உதவும்.

சிலுவைப் போர்களைப் பற்றி மேலும் விவரிப்பது எனது நோக் கமல்ல. எனினும் கிறிஸ்தவர்களால் எழுதப்பட்ட சில கூற்றுக்களை மாத்திரம் இங்கு முன்வைக்கிறேன். 1099 ஜுலை 15ஆம் திகதி - முதலாவது சிலுவைப் போரின் போது ஜெரூஸலம் கைப்பற்றப்பட்டது பற்றிய சிலுவைப் போராளி ஒருவரின் அறிக்கை பின்வருமாறு: ‘‘வாள்களை உருவிய வண்ணம் எம்மவர்கள் நகரின் ஊடாக ஓடி னார்கள். அவர்கள் யாரையும் விட்டுவைக்கவில்லை - கருணை கோரிக் கெஞ்சியவர்களைக் கூட. நீங்கள் அங்கிருந்திருந்தால் உங் கள் பாதங்களில் கணுக்கால் வரையிலும் இரத்தம் தோய்ந்திருக்கும். நான் வேறு என்ன சொல்ல? அவர்களில் எவரும் உயிரோடிருக்க அனுமதிக்கப்படவில்லை. பெண்களையும் சிறுவர்களையும்கூட விட்டு வைக்கவில்லை. குதிரைகள் தம் முழங்கால் வரை இரத்த வெள் ளத்தில் நகர்ந்தன - இல்லை இல்லை கடிவாளம் வரை - இரத்த வெள் ளத்தில் நகர்ந்தன. அது இறைவனின் நியாயமானதும் அற்புத மானதுமான ஒரு தீர்ப்பே’’.

1202இல் நான்காவது சிலுவைப் போர் வெனிஸிலிருந்து தொடுக்கப்பட்டது. படையினர் போகும் வழியில் கிறிஸ்தவ கொன்ஸ்தாண்டிநோபல் நகரைக் கடந்துசென்றன. அங்கே அந் நகரைச் சூறையாடி பெரும் அக்கிரமங்களை நிகழ்த்தின. இதனால் போப் ஆண்டவரே தமது சிலுவைப் படையினரைக் கண்டனம் செய்ய வேண்டியதாயிற்று. அவர் அனுப்பிய செய்தியில் ‘‘நீங்கள் உங்கள்

வாள்களை சமய மறுப்பாளர்களுக்கு எதிராகவன்றி கிறிஸ்தவர் களுக்கு எதிராகவே உருவியிருக்கிறீர்கள். ஜெருஸலத்திற்குப் பதி லாக நீங்கள் கொன்ஸ்தாண்டிநோபிலையே கைப்பற்றியிருக்கிறீர்கள். தெய்வீக செல்வங்களுக்குப் பதிலாக நீங்கள் லௌகீகப் பொருட்கள் மீதே உங்கள் கவனத்தை செலுத்தியிருக்கிறீர்கள். உங்களுக்கு எதுவுமே புனிதமானதாகத் தெரியவில்லை. மணமுடித்த பெண் களையும், விதவைகளையும் கன்னியாஸ்திரிகளையும்கூட நீங்கள் வல்லுறவுக்கு உட்படுத்தியிருக்கிறீர்கள். இறை ஆலயத்தின் சரணா லயங்களையே மாசுபடுத்தியிருக்கிறீர்கள்; பலிபீடங்களின் மீதிருந்த புனிதப் பொருட்களைத் திருடியிருக்கிறீர்கள். புனிதர்களின் உருவங்கள், நினைவுப் பொருட்கள் போன்ற எண்ணிறந்தவற்றைச் சூறையாடியிருக்கிறீர்கள். கிரேக்க திருச்சபையினர் உங்களில் சாத் தானின் செய்கையைக் காண்பதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்று மில்லை.'' கிறிஸ்தவர்களின் கொன்ஸ்தாண்டிநோபலுக்கு இப்படி யெல்லாம் செய்த சிலுவைப் படையினர் தம் சமயத்தை மறுக்கும் முஸ்லிம்களுக்கு என்ன செய்திருப்பார்கள் என்பதை எவரும் கற்பனை செய்துபார்க்கமுடியும்.

முஸ்லிம்கள் பற்றிய வத்திக்கானின் கண்ணோட்டத்தில் தீவிர மாற்றமொன்று ஏற்பட்டிருப்பது நவீன காலத்தின் முக்கிய மைல் கல்லொன்றாக இருக்கிறது. இது, முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவர் களுக்கும் இடையில் சிறந்த புரிந்துணர்வை ஏற்படுத்தக்கூடிய ஒரு தூண்டியாக அமையும் என நம்பலாம். முதன் முதலாகச் சிலுவைப் போர்களைத் தூண்டிவிட்ட போப் ஆண்டவர் இரண்டாவது அர்பன் (Urban II) என்பவர் 1905இல், முஸ்லிம்களை ``கடவுளற்றவர்கள், சிலை வணங்கிகள், யேசுவின் எதிரிகள், நாய்கள், முடிவில்லா நரக நெருப்புக்குரிய அற்பப் பதர்கள்'' என்றெல்லாம் வர்ணித்திருந் தார். எனினும் 1965இல் ஆறாவது பால் (Paul VI) என்ற போப் ஆண்டவரின் கீழ் வெளியிடப்பட்ட சுற்றுநிருபம் முஸ்லிம்களை முற் றிலும் வித்தியாசமான ஒளியிலே நோக்குகின்றது.

``முஸ்லிம்களையும் திருச்சபை கண்ணியத்துடன் நோக்கு கின்றது எனக் கூறும் இந்த ஆவணம் முஸ்லிம்கள் ஆபிரஹாமின் இறைவனான ஒரே இறைவனை வணங்குகிறார்கள்; இஸ்லாமிய சமயம் ஆபிரஹாமுடன் தன்னை மகிழ்ச்சியோடு இணைத்துக்கொள் கிறது. இவர்கள் வணக்கத்தில் ஈடுபடுவதோடு தானதர்மம் செய் கிறார்கள்; யேசுநாதரையும் அவரது தாயார் கன்னி மரியாளையும் மதித்துப் போற்றுகிறார்கள்; யேசுநாதரை இறைவனின் தூதர் என்று

கருதுகிறார்கள்'' என விளக்கமளிக்கிறது.

சிலுவைப் போர்களுக்கு பின்பு ஐரோப்பாவுக்கும் முஸ்லிம் உலகுக்கும் இடையிலான உறவுகள் ஐரோப்பிய நாடுகளின் காலனித் துவப் போக்கினால் திரிபுபடுத்தப்பட்டுள்ளன. முதலாம் உலகப் போரின் பின்பு இஸ்லாமிய நாடுகள் அனைத்தும் ஐரோப்பியக் காலனித்துவப் பிடியில் சிக்கியிருந்தன. நீண்ட போராட்டத்தின் பின்னரே அரசியல் சுதந்திரம் பெற்றுக்கொள்ளப்பட்டது. எனினும் காலனித்துவ மானது ஐக்கிய அமெரிக்காவின் தலைமையில் நவீன காலனித்துவ மாக உருமாற்றம் அடைந்திருக்கிறது. அது நாடுபிடிக்கும் இராணு வங்களுக்குப் பதிலாகப் பொருளாதாரப் பலத்தை பிரயோகித்து வருகிறது.

# அத்தியாயம் நான்கு

## இஸ்லாத்தின் உள்கட்டமைப்பு

தனிப்பட்ட முறையிலும் சமூகரீதியாகவும் வாழ்க்கையின் சகல அம்சங்களிலும் செல்வாக்குச் செலுத்துகின்ற முற்றுமுழுதான வாழ்க்கை முறையாக இஸ்லாம் இருக்கிறது. எனவே 'சமயம்' என்ற சொல்லின் மேற்கத்தியப் பயன்பாடு இஸ்லாத்தின் முழுமையை விளக்கக்கூடியதாக இல்லை. தன்னைப் பின்பற்றுவோருக்கு இஸ்லாம் விதிக்கும் வழிகாட்டல் ஷரீ'ஆ எனப்படும். வழிபாடு, ஒழுக்கக் கோட்பாடு, சட்ட முறைமை என ஷரீ'ஆவை மூன்று பிரிவுகளாக வகுப்பது எதேச்சையானது. ஏனெனில் அவை ஒன்றோடொன்று தொடர்புற்று ஒருங்கிணைந்து காணப்படுகின்றன. தனியாருக்குரிய ஒழுக்கநெறியே சமுதாயத்துக்குரிய ஒழுக்க முறையாக அமைகிறது. இந்த ஒழுக்க முறைகள் சட்டத்தினால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன. ஒருவருடைய அகமும் (மனச்சாட்சியும் நோக்கங்களும்) புறமும் (செயல்களும் அவதானிக்கப்படக்கூடிய நடத்தைகளும்) முரண்பாடுகளின்றி ஒருமைப்பாடு கொண்டனவாக இருத்தல் வேண்டும். வழிபாட்டு முறைகள் இஸ்லாத்தின் மேற்சொன்ன யதார்த்த நிலையை அடைவதற்கு மனிதனைத் தயார் செய்கின்றன. அவற்றில் குறைபாடு இருப்பின் அது ஏமாற்று வேலையாகவும் போலித்தனமாகவுமே இருக்கமுடியும்.

### ஷரீ'ஆ பற்றிய பொதுவான சுருக்க விளக்கம்

### ஷரீ'ஆவின் மூலாதாரங்கள்

ஷரீ'ஆவின் பிரதான மூலாதாரம் இறைவனின் வார்த்தைகளைக் கொண்ட குர்ஆனே. நம்பிக்கையை நிலைநிறுத்துவது முதல் தனித்துவமான ஒழுக்க நியமங்களின் வரையறைகள், அனுமதிக்கப்பட்ட

மற்றும் தடுக்கப்பட்ட நடத்தைகள் பற்றிய விதிமுறைகள் வரை பல தரப்பட்ட விடயங்களும் குர்ஆனில் அடங்கியுள்ளன. வணக்க முறைகள் பற்றிய கோட்பாடுகளை விவரிப்பதோடு குடும்பச் சட்டங்கள், பொருளாதார விதிகள், குற்றவியல் சட்ட விதிகள், சமூக நடத்தை, உடன்படிக்கைகள், போர் மற்றும் சமாதான கால ஒழுக்கமுறைகள், அரசாங்க வடிவமைப்பு, மனித உரிமைகள், ஏனைய தேசங்கள் மற்றும் சமயங்களுடனான உறவுகள், வாரிசுரிமை, வரி அறவிடுதல் (ஸகாத்) முதலிய பல்வேறு அம்சங்களை உள்ளடக்கிய விரிவான நீதி முறைமையொன்றுக்கான அடித்தளமொன்றையும் அது வழங்கியிருக்கிறது. குர்ஆனில் ஏதேனுமொரு வகையில் குறிப்பிடப்படாத வாழ்க்கை தொடர்பான விவகாரம் எதுவுமில்லை என்றுகூடச் சொல்ல முடியும்.

நம்பிக்கை (அகீதா) மற்றும் வழிபாடு (இபாதத்) தொடர்பான மாற்றமுடியாத அடிப்படைக் கட்டமைப்பொன்றை குர்ஆன் வகுத்திருக்கிறது. அதேவேளை மனித உறவாடல்களை ((முஅம்மலாத்) நெறிப்படுத்தும் சட்டங்களைப் பொறுத்தளவில் குறிப்பிட்ட சில விதிவிலக்குகளைத் தவிர ஏனைய விடயங்களில் நெகிழ்வான பொது வழிகாட்டல்களைத் தந்திருக்கிறது. எனவே முஆம்மலாத் தொடர்பான ஷரி’ஆவின் மாறாத் தன்மை மட்டுப்படுத்தப்பட்டதாகவே உள்ளது. இஸ்லாமிய சட்டவாக்கத்துறையின் வளர்ச்சிக்கும் பரிணாமத்துக்கும் இது பெருமளவில் பங்களிபபுச் செய்துள்ளது. பல்வேறு கால, இட வேறுபாடுகளுக்குப் பொருந்தும் வகையிலான அபிப்பிராயங்கள் பல நூற்றாண்டுகளாக ஒன்றுதிரண்டு, பல்வேறு சிந்தனைப் போக்குகள் இதன் விளைவாக உள்ளடக்கப்பட்டுள்ளன. ஷரீ’ஆ என்பது மாறக் கூடியது என்பதையும் முடிவற்றது என்பதையும் இது நிரூபிக்கிறது.

ஷரீ’ஆவின் இரண்டாவது மூலாதாரம் இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் ஸுன்னாஹ் (வழிமுறை) ஆகும். இறைத்தூதர் என்ற வகையில் அவர் பணித்த, தடை செய்த, செய்துகாட்டிய அல்லது அங்கீகரித்த அனைத்தும் இதிலடங்கும். ஸுன்னாஹ் சில வேளைகளில் குர்ஆனுக்கு விளக்கமளிப்பதாகவும் அதற்கு உதாரணம் காட்டி விளக்குவதாகவும், அதன் பொது நிலைகளை விபரிப்பதாகவும் சில துறைகளில் அதனை நிறைவுசெய்வதாகவும் அமைந்துள்ளது. ஸுன்னாஹ் பற்றிய அறிவியல் துறையானது- குறிப்பாக இறைத்தூதரின் கூற்றுக்களின் மூலாதாரம் சரியானதா என்பதை ஆராயும் செயல்முறையானது- வரலாற்று அறிவியற் துறையின் மிகத் திருத்தமான பிரிவொன்றாகத் திகழ்கிறது. ஸுன்னாஹ்வின் அறி

விப்பாளர் வரிசையையும் சாட்சிகளையும் தேடுவதில் அதனைத் தொகுத்தவர்கள் கடைபிடித்த கண்டிப்பான நெறிமுறைகளும், அனைத்துக்கும் மேலாக அறிவிக்கப்பட்ட ஒரு ஸுன்னாஹ் நேரடி யாகவோ மறைமுகமாகவோ குர்ஆனுடனோ அல்லது நிறுவப்பட்ட உண்மைகளுடனோ, பொதுவான அறிவுடனோ முரண்படவில்லை என்பதை நிர்ணயிப்பதில் அவர்கள் மேற்கொண்ட ஆர்வமிக்க முயற்சிகளும் ஸுன்னாஹ்வைத் திருத்தமான ஓர் அறிவியல் துறை யாக அமையச் செய்துள்ளன.

ஒரு குறிப்பிட்ட பிரச்சினை குர்ஆன் அல்லது ஸுன்னாஹ் வினால் குறிப்பாக தீர்க்கப்படமுடியாத நிலையில்தான் ஷரீ'ஆவின் மூன்றாவது மூலாதாரம் செயற்படுகின்றது. இந்நிலையில், ஏற்கனவே குர்ஆனினால் அல்லது ஸுன்னாஹ்வினால் தீர்ப்பு வழங்கப்பட்டுள்ள பிரச்சினையொன்றுடன் புதியதை உய்த்தறியும் முறையில் ஒப்பு நோக் குவது பயன்படுத்தப்படுகிறது. ஏற்கனவே இருக்கின்ற (சமய, அறி வியல், புள்ளிவிபரவியல் மற்றும் சமூகவியல் ரீதியான) சான்றுகளைப் பயன்படுத்தி, கடைபிடிக்கப்படவேண்டிய சரியான வழிமுறையைத் தீர்மானிக்கும் இச்செயற்பாடு இஜ்திஹாத் எனப்படும். எனினும் இவ் வழிமுறை குர்ஆன் அல்லது ஸுன்னாஹ்வுடன் முரண்படாததாகவும் ஷரீ'ஆவின் இலக்குகளுக்கு இணக்கமானவையாகவும் இருத்தல் வேண்டும். எனவே ஷரீ'ஆ என்பது எல்லாக் காலத்திலும் எல்லா இடத்திலும் ஒரேவிதமாகப் பிரயோகிக்கப்படவேண்டிய விறைப்புத் தன்மையுள்ள சட்டங்களின் தொகுப்பொன்றல்ல. முன்னேற்றமான சட்டவாக்கத்தின் ஊடாக, மாறும் நிலைமைகளுக்கு முகங்கொடுக் கக்கூடிய மனித விவேகத்துக்கு அது இடமளிக்கிறது. சட்டக்கலையின் பரிணாமத்தின் போது, புதிய நிலைமைகளில் புதிய தீர்ப்புக்களை வழங்குவது தொடர்பாக இறைத்தூதரினதும் குர்ஆனினதும் வழிகாட் டல்களிலிருந்து பெறப்பட்ட இஸ்லாமிய கோட்பாடுகளைப் பிரயோ கிப்பதன் மூலம், சட்டவாக்கம் பற்றிய விதிகள் உருவாக்கப்பட்டன. ''அத்தியவசியத் தேவைகள், தடைகளை மேவி நிற்கும்'' என்ற கோட்பாடு இதற்கோர் எடுத்துக்காட்டாகும். உதாரணமாக பன்றியின் மாமிசத்தை உண்பது தடுக்கப்பட்டுள்ளது. எனினும் பாலைவனத்தில் வழிதவறிப்போன ஒருவருக்கு அது மட்டும்தான் கிடைக்கக்கூடியதாக இருப்பின், உயிர் பிழைப்பதற்குப் போதுமான அளவில் - சட்டபூர்வமான உணவு கிடைக்கும் வரையில் அதனைச் சாப்பிட அனுமதியுண்டு. 'தவிர்க்கமுடியாத இரண்டு வகையான தீமைகளைப் பொறுத்தமட்டில் இரண்டிலும் அளவில் குறைந்ததைத் தெரிவு செய்தல்', 'தனியான

நலனைவிட பொதுமக்களின் நலனுக்கு முன்னுரிமை அளித்தல்', 'தீங்கு அகற்றப்பட வேண்டும்' போன்றன இவ்வகையான விதி களுக்குச் சில உதாரணங்களாகும். குர்ஆனுடனும் ஸுன்னாஹ் வுடனும் முரண்பாடில்லாத நிலையில் 'நன்மை எங்கு நிகழ்கிறதோ அங்கு இறைவனின் நெறிமுறை இருக்கும்' என்பதே ஒட்டு மொத்தமான சட்டவிதி.

## ஷரீ'ஆவின் இலக்குகள்

இவ்வுலகிலும் மறுமையிலும் மக்களின் நலனைப் பேணுவதே ஷரீ'ஆவின் உன்னதமான இலக்காகும். பரந்தளவில் நோக்கும் போது சமுதாயத்தின் தேவைகளை, அத்தியாவசியத் தேவைகள், சாதாரணத் தேவைகள், நிறைவுசெய்யும் தேவைகள் (வாழ்க்கையை மேலும் களிப்புடையதாக்கக்கூடியவை) என முக்கியத்துவத்தின் ஒழுங் கின்படி பாகுபடுத்தலாம். இந்த வரிசையில் முதலிடம் வகிக்கும் முதலாம் வகையில் 'ஷரீ'ஆவின் ஐந்து நோக்கங்கள்' எனப் பரவலாக அழைக்கப்படும் பின்வருவனவற்றின் பேணலும் பாதுகாப்பும் அடங்கும்: (1) உயிர் (2) உள்ளம் (3) சமயம் (4) உடைமைகளும் சொத்துக்களும் (5) இனம். இவை ஒவ்வொன்றும் மேலும் பல பிரிவுகளாகவும் உப பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டு மிக நுண்ணிய விவரங் களைக்கூட உள்ளடக்கியிருக்கும். அவை ஒவ்வொன்றையும் நெறிப்படுத்தும் ஒழுக்க மற்றும் சட்ட விதிகளும் உள்ளன. இந்த பெரும் பாடப்பரப்பில் ஆழத்திற்குச் செல்லத்தூண்டும் ஆவலைத் தவிர்த்து, ஒவ்வொரு வகையையும் விளக்கும் வகையில் அத்தியாவசியக் கருத்துக்களை மாத்திரம் நோக்குவோம்.

**உயிரைப் பேணலும் பாதுகாத்தலும்:** உயிர் வாழ்வதற்குரிய உரிமையும் உயிரைக் காக்கவேண்டிய கடமையும் இதில் அடங்கும். கொலையைத் தடை செய்வதோடு நியாயமான யுத்தம் அல்லது சட்டரீதியான தண்டனை முதலிய விதிவிலக்கான நிலைமைகளில் அது அனுமதிக்கப்பட்டுள்ள முறையை வரையறுக்கின்றது. நோயின் போது சிகிச்சை பெறுவதும் உடல் நலத்தைப் பாதிக்கக்கூடிய எத னையும் தவிர்த்துக்கொள்வதும் இஸ்லாமியக் கடமைகளாக உள்ளன. இதற்காகத்தான் உணவுமுறை விதிகள், உடலைத் திடமாகப் பேணு வதற்கான தூண்டுதல், தனியாள், வீடு, பாதை, சுற்றுச் சூழல் என்ப வற்றின் சுத்தத்தைப் பேணுதல் என்பன வலியுறுத்தப்படுகின்றன. முஹம்மத் (ஸல்) அவர்களின் போதனைகளுள் ஒன்றான "ஒவ்வொரு வகை நோய்க்கும் இறைவன் ஒரு சிகிச்சையைப் படைக்கத் தவறவில்லை. அவற்றுள் சில ஏற்கனவே அறியப்பட்டுள்ளன. சில

அறியப்படவில்லை'' என்பது வியந்து நோக்கதக்கது. இது ஆராய்ச் சிக்குத் தூண்டுகோலாக இருக்கிறது. நோய் பரவாமல் ஆட்களைத் தடுத்துவைக்கும் முறையை ஏற்படுத்திய முஹம்மத் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள். ''ஒரு நகரில் கொள்ளை நோய் இருந்தால் வெளியே இருப்பவர்கள் உள்ளே நுழையாதீர்கள். உள்ளே இருப்ப வர்கள் வெளியே வராதீர்கள்.''

விவசாயத்தை ஊக்குவிப்பது போற்றத்தக்கதாக இருக்கிறது. முஹம்மத் (ஸல்) அவர்களின் போதனைகளில் பின்வருவன அடங்கி யிருந்தன. (1) மறுமைநாள் நெருங்கும் வேளையில் உங்கள் கரங் களிலே நடுவதற்கான ஒரு தண்டு இருந்தால் விரைந்து அதனை நட முயற்சியுங்கள். (2) எவரொருவர் ஒரு நிலத்தில் பயிர் செய்கிறா ரோ, அதன் அறுவடையிலிருந்து சாப்பிட்டுக்கொள்ளும் ஒவ்வொரு ஆத்மாவுக்காகவும் - அது பறவைகளாகவோ, மிருகங்களாகவோ அல்லது அங்கிருந்து திருடிச் சாப்பிட்ட திருடனாகவோ இருப்பினும் சரியே - அவருக்கு சன்மானம் வழங்கப்படும். (3) யுத்த நடைமுறை யாக எந்தவொரு மரமும் வெட்டப்படவோ எரிக்கப்படவோ கூடாது. சூழல் பற்றிய விழிப்புணர்வும் சுற்றுச் சூழலை மதிப்பதும் கட்டாயப் படுத்தப்பட்டுள்ளன. நீர்வட்டம் பற்றிக் குர்ஆன் விவரித்துள்ளதோடு அதனைப் பேணிக்காத்தல், மாசுபடுத்தாமலிருத்தல் என்பன தொடர் பாக முஹம்மத் (ஸல்) வலியுறுத்தியுள்ளார்கள். ''உணவுக்காகவன்றி எந்தப் பறவையோ மிருகமோ கொல்லப்படக்கூடாது'' என்பதும் அன் னாரின் அறிவுறுத்தலே. விலங்குகள் மீது கருணை காட்டுவதும் அவற்றின் மீது அளவுக்குமீறிய சுமைகளை ஏற்றுவதைத் தவிர்த்தலும் இவ்வாறே வலியுறுத்தப்பட்டுள்ளன.

**உள்ளத்தைப் பேணுதலும் பாதுகாத்தலும்:** மனிதப் பிறவி யின் தரக்குறியீடாக உள்ளமே திகழ்கிறது. நாம் நன்மை, தீமைகளை அறிந்துகொள்ளவும் இறைவனின் படைப்புக்கள் மற்றும் எமக்கு உள் ளேயும் வெளியேயும் இருக்கின்ற சூழல் என்பன பற்றி ஆராயவும் அது கருவியாக அமைகின்றது. ஆழ்ந்து சிந்திப்பது சமயக் கடமை களுள் ஒன்று. உள்ளங்கள் வழங்கப்பட்டிருந்தும் அவற்றைப் பயன் படுத்தாதோரை குர்ஆன் கண்டனம் செய்கிறது. சிந்தனை மற்றும் கருத்து வெளிப்பாட்டுக்கான சுதந்திரங்கள் அடிப்படை மனித உரிமை களாகக் கருதப்பட்டுள்ளன.

இஸ்லாத்தில் அறிவைத் தேடுவது ஓர் உரிமை மாத்திரமின்றிக் கடமையுமாகும். முதலில் இறக்கப்பட்ட குர்ஆன் வார்த்தை 'ஓது வீராக' (வாசிப்பீராக!) என்பதே. குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது:

*''அறிவுடையோரும் அறிவில்லாதவரும் சமமாக மாட்டார்கள் - ஒளியும் இருளும் சமமாகதது போல்.''* மேலும் *''அவனுடைய அடியார்களுள் கற்றவர்களே அவன் மீது அதிகமாகக் கவனம் செலுத்துவார்கள்''* என்றும் அது கூறுகிறது. சட்டத்துறை மொழியில் கூறுவதாயின் அறிவியல் ஆராய்ச்சி என்பது, இறைவனுடைய படைப்பில் அவனுடைய வழிமுறையை வெளிப்படுத்துவதாகும். எனவே அதனை மேற்கொள்ள ஆற்றல் உள்ளவர்கள் மீது அது கடமையாகிவிடுகிறது. உள்ளத்தைத் தணிக்கை செய்வது நிராகரிக்கப்பட்டுள்ளது. இந்த விடயத்தில் எந்த மனிதனுக்கும் இன்னொருவர் மீது ஆதிக்கம் செலுத்தும் உரிமை கிடையாது. தணிக்கையிலிருந்து உள்ளம் பாதுகாக்கப்படவேண்டிய தோடு அது அடக்குமுறை, அச்சம், பீதி, அழுத்தம் என்பவற்றிலிருந்தும் பாதுகாக்கப்படவேண்டும். உள்ளத்தை மரத்துப் போகச் செய்கின்ற அல்லது சாகடிக்கின்ற எதுவும் வெறுப்புக்குரியதே. எனவேதான், மது அருந்துதலும் போதைப்பொருள் உபயோகமும் இஸ்லாத்தில் முற்றாகத் தடைசெய்யப்பட்டிருக்கின்றன.

**சமய சுதந்திரம்:** இஸ்லாமிய அறிஞர்கள் பலர் சமய சுதந்திரத்துக்கு முதலிடம் கொடுக்கின்றனர். எனினும் வாழ்க்கையும் உள்ளமும் ஒருங்கிணையாத நிலையில் சமயக் கடமைகளை நிறைவேற்றமுடியாது என்பது வெளிப்படையானது. சமய மற்றும் வழிபாட்டுச் சுதந்திரம் அடிப்படை மனித உரிமையாகும் - இது முஸ்லிம்களுக்கு மட்டுமானதல்ல. இஸ்லாத்தைத் தழுவுமாறு ஒருவரை வற்புறுத்துவது இஸ்லாத்துக்கே முரணானது. *''சன்மார்க்கத்தில் எத்தகைய நிர்ப்பந்தமுமில்லை'' (2:256)* என குர்ஆன் கூறுகின்றது. வழிபாட்டுக்குரிய இல்லங்கள் நிர்மானிக்கப்படவேண்டும். அவற்றுக்கெதிராக நிகழ்த்தப்படும் அத்துமீறல்கள் பூமியில் குழப்பத்தைப் பரப்புவதாகவே இருக்கும். முஸ்லிம்கள் அவர்களுடைய சமயத்தின் காரணமாகத் தாக்கப்பட்டால் தற்பாதுகாப்புக்குரிய உரிமையும் கடமையும் அவர்களுக்கு உண்டு.

**தனியாள் உரிமைகளைப் பாதுகாத்தல்:** சொத்துக்களை உடைமையாக வைத்திருப்பதற்குரிய உரிமை மீறப்படமுடியாதது. செல்வம் சேகரிப்பதற்கு எதிர்ப்போ வரையறையோ கிடையாது. ஆனால் அது சட்டபூர்வமான முறையில் பெறப்பட்டதாக இருக்க வேண்டும். செல்வம் சேகரிப்பதற்குரிய சட்டவிரோதமான முறைகளை இஸ்லாம் விவரித்துள்ளது. வட்டி, ஏமாற்றுதல், ஊழல், திருடுதல், ஏகபோக உரிமை முதலியன இவற்றுள் அடங்கும். வர்த்தக நடவடிக்கைகள், கொடுக்கல்-வாங்கல் முதலியவற்றுக்கான சட்டவிதிகள்

நிர்ணயிக்கப்பட்டுள்ளன. மூலதனத்துக்குரிய உரிமைகளோடு அதன் கடமைகளான வரி செலுத்துதல், சமூகத்தின் தேவைகளுக்குப் பொருத்தமான முறையிலான பங்களிப்பு முதலியன இணைக்கப்பட் டுள்ளன. ஸக்காத் வரி கட்டாயமானது. அது ஒரு வருடகாலப் பகுதியில் வைத்திருந்த தொகையின் 2.5%க்குச் சமனாகும். விவ சாயம், விலங்கு வளர்ப்பு, நிலபுலன்கள், கைத்தொழில் என்பவற் றினூடாகக் கிடைக்கும் வருமானத்திற்கு வேறு கணிப்பு முறைகள் உண்டு. ஒவ்வொரு தனிமனிதனதும் சேமநலன் முழுச் சமுதாயத் தினதும் கூட்டுப்பொறுப்பாகும். எவரும் தனித்து நிற்கும் தீவு போலச் செயற்படமுடியாது.

**இனப்பெருக்கமும் இனம் அழியாமல் காத்தலும்:** சரியான முறையில் ஆவணப்படுத்தி சமயரீதியாக நடாத்தப்பட்ட திருமண உடன்படிக்கையொன்றின் ஊடாக மாத்திரமே ஒரு சோடி ஒன்றிணைந்து குடும்பத்தை உருவாக்கவும் குழந்தைகள் பெறவும் முடியும். (குடும்ப உறவின்படி யார் யாருக்கிடையில் திருமணம் அனுமதிக்கப்படாது என்பதை ஷரீ'ஆ விவரித்திருக்கிறது) சந்ததியின் தூய்மை (அடையா ளம் தெரிந்த பெற்றோரின் மூலம் சட்டரீதியான பிறப்புகள்) ஒருவரு டைய பெற்றாரையும், ஒருவருடைய பிள்ளைகளையும் திட்டவட்டமாகத் தெரிந்துகொள்ளும் உரிமை என்பன கட்டாயமானவை. சுமார் இரண்டு வருடங்களுக்குத் தாய்ப்பால் ஊட்டுவது ஊக்குவிக்கப்படுகிறது.

திருமணத்திற்குப் புறம்பான பாலுறவு (திருமணத்துக்கு முந்திய பாலுறவு உட்பட) பாவமானது; நம்பகமான நான்கு சாட்சிகள் இருப்பின் சட்டரீதியாக தண்டனை வழங்கப்படக்கூடிய குற்றமாக அது அமையும். குடும்பக் கட்டுப்பாடு (இயற்கையான அல்லது செயற்கையான வழி களில்) அனுமதிக்கப்பட்டுள்ளது. எனினும் அது ஓர் உயிரைக் கொல் வதாக அமையக்கூடாது. (அதாவது கருக்கலைப்பு: கருவிலுள்ள குழந்தைக்கு உயிர்வாழ்வதற்கும், வாரிசுரிமை பெறுவதற்கும் உரிமை உண்டு) கருவளத்தை நாடுவதும் மலட்டுத் தன்மைக்குச் சிகிச்சை பெறுவதும் அனுமதிக்கப்பட்டுள்ளன - ஆனால் ஷரீ'ஆவினால் அங்கீ கரிக்கக்கூடிய முறையிலேயே அது நிகழவேண்டும்.

பிள்ளைகளைத் தத்தெடுக்கும் மேற்கத்திய முறை அனுமதிக்கப் படவில்லை. எனினும் வளர்ப்புப் பெற்றோராக இருப்பதும் வசதி குறைந்த பிள்ளைகளுக்கு அனுசரணை வழங்குவதும் தர்மமாக ஊக்குவிக்கப்படுகின்றது. ஆனால் இவ்வாறான நடைமுறைகளில் அசலான குடும்ப உறவுகளுக்கு உரிமைகோரும் போலித்தன்மை இருக்காது. அப்படியான உறவொன்று உண்மையில் இருக்கமுடியாது.

பிள்ளைகளுக்கு அவர்களது ஆரம்பம் எது என்ற உண்மை தெரிய வேண்டும். பருவ வயதை அடைந்த பின் ஒரு குடும்பத்திலுள்ள வளர்ப்புப் பிள்ளை அக்குடும்பத்தின் சொந்த உயிரியல் ரீதியான பிள்ளையொன்றை மணம் செய்ய நாடினால் அவர்கள் சகோதர சகோதரிகள் எனக் காரணம் காட்டி மறுப்புத் தெரிவிக்க முடியாது. ஏனெனில் அவர்களுடைய உறவு அப்படியானதல்ல.

கணவன் - மனைவி, பெற்றார் - பிள்ளை ஆகியோரின் பரஸ்பர உரிமைகள் கடமைகள் என்பன விவரிக்கப்பட்டுள்ளன. குடும்ப நடத்தை, வாரிசுரிமை விதிகள் என்பன தெளிவாகக் குறிப்பிடப்பட் டுள்ளன. குடும்பத்தைப் பொறுப்பேற்று நடத்துவது கணவனின் கடமை. மனைவி விரும்பினால் நிதிரீதியாக பங்களிப்புச் செய்யலாம். தொழில் செய்யும் உரிமை பெண்களுக்கு உண்டு. (ஆனால் அது குடும்பத்தின் ஒருமைப்பாட்டுக்கு இணக்கமானதாக இருக்கவேண்டும்) அதேபோன்று சுயாதீனமாகச் சொத்துக்களை வைத்திருத்தல், வாரிசுரிமை, கல்வி என்பதற்கான தனித்துவ உரிமைகளும் அவர்களுக்கு உண்டு. மனி தப் பிறவிகள் என்ற வகையிலும் ஆத்மீக ரீதியிலும் ஆண்களும் பெண்களும் சமபெறுமானம் கொண்டவர்கள். இஸ்லாத்தின் ஏவல் களும் விலக்கல்களும் இருசாரார் மீதும் சமமாகவே பிரயோகிக்கப் படுகின்றன.

## திருச்சபையும் அரசும்

திருச்சபையையும் அரசையும் வேறாகப் பிரித்து வைப்பதற்கு ஐரோப்பா எடுத்த தீர்மானம் விவேகத்துக்குரியதே. ஆரம்பகாலத் திருச்சபையானது வாழ்க்கையின் எல்லா அம்சங்களின் மீதும் கொண் டிருந்த தனியுரிமைப் போக்கானது யேசுநாதரின் போதனைகளுக்கு முரணானது. சிந்தனைச் சுதந்திரத்திற்கும் அறிவியல் முன்னேற்றத் திற்கும் தடைபோடுவதற்குரிய அதன் அதிகாரத்தை, யாவரும் அறிந்த பல வரலாற்று நிகழ்வுகள் பிரதிபலிக்கின்றன. பிற்காலத்தில் இதே போன்ற காரணத்திற்காக அமெரிக்காவும் இதனைப் பின்பற்றியது. பல்வகைப்பட்ட சமூகத்தில் ஒரு சமயம் மற்ற சமயங்களின் மீது ஆதிக்கம் செலுத்துவதைத் தடுப்பதற்கு எத்தனிப்பதன் மூலம் அது சமய சுதந்திரத்திலும் தலையீடு செய்தது. ஆரம்பகாலத்தில் அமெரிக்காவுக்குக் குடிபெயர்ந்தவர்களில் பெரும்பாலானோர் ஐரோப் பிய கிறிஸ்தவ சமூகத்தில் காணப்பட்ட சகிப்புத் தன்மைக் குறைபாடு, கொடுமைப்படுத்தல் என்பவற்றிலிருந்து தப்புவதற்காகவே அங்கு சென்றார்கள்.

திருச்சபையையும் அரசையும் பிரித்துவைப்பது கிறிஸ்தவத்தின் முக்கிய இலக்குகளுக்கு இணக்கமுடையது என்றே நான் கருது கின்றேன். ஏனெனில் அதன் பிரதான நோக்கம் மனித ஆன்மாவைத் தூய்மைப்படுத்தி மனிதப் பண்புகளை உன்னதமாக்குவதேயன்றி அர சினை ஒழுங்குபடுத்த முயல்வதல்ல. புதிய ஏற்பாட்டின்படி யேசுவின் ராஜ்யம் இந்த உலகுக்குரியதல்ல. ரோமபுரியின் சீஸர் ஆட்சியாள ருக்குக் காணிக்கை செலுத்துவது சட்டபூர்வமானதா என அவரிடம் வினவப்பட்டபோது, ஒரு நாணயத்திலிருந்த சீஸரின் உருவப்பதிவை உற்றுநோக்கிய அவர், ‘‘சீஸருக்குரியதை சீஸருக்குக் கொடுங்கள் இறைவனுக்குரியதை இறைவனுக்குக் கொடுங்கள்!’’ எனக் கூறியதாக புதிய ஏற்பாடு குறிப்பிடுகின்றது. மாற்றுக் கொள்கையாளர் பற்றிய வெறுப்போ, துன்புறுத்தலோ இன்றி யாவருக்கும் சமய சுதந்திரத்தை உறுதி செய்கின்ற பன்மைத்துவச் சிந்தனையை, நியாயப்போக்குள்ள ஏனையவர்களைப் போன்றே ஐக்கிய அமெரிக்காவிலுள்ள முஸ்லிம் களும் வரவேற்றுப் போற்றுகின்றனர். இது இஸ்லாமியப் போதனை களுடன் ஒன்றிணைந்து போவதாக விளங்குகிறது.

அமெரிக்காவிலும் மேற்குலகிலும் வாழ்கின்ற முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், யூதர்கள் ஆகியோரிடம் காணப்படுகின்ற மனக்குறை யொன்றையும் இங்கே குறிப்பிடுவது காலப் பொருத்தமுடையது. மக்களின் அன்றாட வாழ்கையில் இறைவனையும் அவனிடமிருந்து கிடைத்த ஒழுக்கசீலம், பண்பாடு போன்ற பொது விழுமியங்களையும் புறந்தள்ளும் வகையில், திருச்சபையையும் அரசையும் பிரித்துவைக் கும் இந்த கோட்பாடு துஷ்பிரயோகம் செய்து திரிபுபடுத்தப்பட் டிருக்கிறது. இறைவன் இல்லாதொழிந்து விட்டானா என்ற விவாதம் கடந்த நான்கு தசாப்தங்களாக அமெரிக்கத் தொடர்பு ஊடகங்களில் முனைப்பாகி வந்துள்ளது. இறைவன் இருக்கின்றான் என்று நம்புகின்ற பெருந்தொகையானவர்களின் கண்ணோட்டத்திலும் இது செல்வாக்குச் செலுத்தி வருகிறது. தனிப்பட்ட முறையிலும் தேசம் என்ற வகையிலும் எமது வாழ்க்கையை எப்படி நடாத்தவேண்டும் என்பதைச் சொல்லித் தருவதற்கு இறைவனுக்குள்ள அதிகாரத்தையும் இவர்கள் ஒப்புக் கொள்ள மறுக்கிறார்கள். ஒழுக்கமான நடத்தைக்கு ஆதரவாகவும் ஆபாசப் படங்களுக்கும் இலக்கியங்களுக்கும், காமவிகாரம் போன்ற ஏனைய சமூக சீரழிவுகளுக்கு எதிராகவும் குரல் கொடுத்தால் அது திருச்சபையையும் அரசையும் பிரித்துவைக்கும் கோட்பாட்டை மீறுவதாகக் குற்றஞ்சுமத்தப் படுகின்றது. ‘இறைவனின் நிழலில் ஒரே தேசம்’, ‘இறைவனிலேயே நம்பிக்கை வைத்திருக்கிறோம்’ ஆகிய

சுலோகங்கள் நாளுக்கு நாள் கருத்திழந்து போகின்றன. நிலைமை இவ்வாறே தொடர்ந்தால் இச்சுலோகங்களை நீக்கிவிடுவதற்காக அரசியல் யாப்பில் திருத்தம் கொண்டுவர அதிக காலம் பிடிக்காது.

இஸ்லாமிய நாடுகளில் வாழும் முஸ்லிம்கள் இஸ்லாமிய சட்டங்களின்படி வாழவே விரும்புகிறார்கள் என்பதை மேற்குலகில் வாழும் ஒருவர் கேள்வியுற்றால் அவர் அதனை அங்கீகரிக்க மறுப்பதும் பீதியுற்றுத் திகைப்படைவதும் பொதுவான நிகழ்வாக இருக்கிறது. திருச்சபையையும் அரசையும் பிரிப்பதற்கு வழிவகுத்த ஐரோப்பாவின் துர்ப்பாக்கியமான வரலாற்றினால் அவர்களது உள்ளங்கள் பாதிப்புற்றிருப்பதனால் இவ்வாறான கருத்துக்களை அவர்கள் தன்னிச்சையாகவே வெறுப்பதோடு, திருச்சபையின் அடக்குமுறையின் கீழ் ஐரோப்பியர் அவதிப்பட்ட அந்த இருண்ட யுகத்தை நோக்கிப் பின்செல்லுவதாகவே இதனைக் கருதுகின்றனர். இந்த முடிவு தவறானது. ஏனெனில் இரண்டு நிலைமைகளும் சமமானவையல்ல.

இஸ்லாம் தொடர்பாக ஆராயும் போது திருச்சபையையும் அரசையும் பிரிக்கும் கோட்பாட்டை இங்கு பிரயோகிக்க முடியாது என்பது தெளிவாகின்றது. கிறிஸ்தவத்தில் அரசு இல்லை; இஸ்லாத்தில் திருச்சபை இல்லை. எனவே ஒன்றின் நிலைமையை மற்றையதற்குப் பிரயோகிக்க முடியாது. இஸ்லாத்தில் சமய அறிஞர்கள் இருந்தாலும் மதகுருமார் இல்லை; மதகுருக்களின் பீடமொன்றும் இல்லை. சில இஸ்லாமிய நாடுகளில் இஸ்லாமிய அறிவுத்துறையில் பட்டம்பெற்ற சிலர் விசேட ஆடைகளை அணிந்தாலும் அதற்குச் சமயரீதியான முக்கியத்துவம் எதுவுமில்லை. அத்தோடு அவ்வுடை அவர்களை மதக்குருக்களாக ஆக்குவதுமில்லை. அவர்களை ஏனைய முஸ்லிம்களைவிட தரமுயர்த்திக் காட்டுவதுமில்லை. இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் அவ்வாறான உடைகள் அணியப்படவில்லை. இவை வெவ்வேறு குழுவினரை அங்கீகரிப்பதற்காக சமூகத்தில் பிற்காலத்தில் ஏற்பட்ட விருத்திகளே. இராணுவத்தினரும் காவல்துறையினரும் அணியும் சீருடைகள், வைத்தியர்கள் அணியும் வெள்ளைக் கோட் போன்றவற்றுக்கு ஒப்பானவை. சமய அறிவும் கற்கையும் யாவருக்கும் திறந்துவிடப்படுகின்றன. வேத வியாக்கியானம் ஒரு குறிப்பிட்ட உயர் வகுப்பினருக்குரிய தனியுரிமையோ வரப்பிரசாதமோ அல்ல. சமய அறிவில் விசேட புலமை உள்ளவர்கள் போற்றப்படுகிறார்கள்; மதிக்கப்படுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு எவ்விதப் புனிதத்துவமும் கிடையாது. சமய அறிஞர்கள் மட்டும்தான் அரசாங்கத்தை நடாத்த வேண்டும் என்பது இஸ்லாத்தில் உள்ளது அல்ல. ஏனெனில் நிறை

வேற்று அதிகாரத்தின் பல்வேறு துறைகளில் அவர்களுக்கு தொழில் நுட்ப வல்லமை இல்லாதிருக்கலாம். தனிப்பட்ட தகைமைகளின் அடிப்படையில்தான் பதவிகள் வகிக்கப்படவேண்டும். பதவிகளை முஸ் லிம்களும் முஸ்லிம் அல்லாதவர்களும் வகிக்கமுடியும்.

மேலே கூறப்பட்ட ஷரீ'ஆவின் இலக்குகளை நோட்டமிடும்போது அதன் விதிகள் தனிமனித நடத்தையோடு நின்றுவிடாமல் அரசாங்கத் துறை வரையும் விரிந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. ஷரீ'ஆ என்னும் யாப்பே சட்டவாக்கத்தின் மூலாதாரமாகவும் சட்டங்கள் உரு வாக்கப்படுவதற்குரிய அடிப்படையாகவும் விளங்குகிறது. கிறிஸ்தவ சமூகங்களில் காணப்படும் சமயச் சார்பின்மை கிறிஸ்தவத்தோடு ஒத்துப்போனாலும் இஸ்லாத்தைப் பொறுத்தவரையில் அவ்வாறில்லை. ஏனெனில் அவ்வாறு செய்வதானது குர்ஆனினதும் ஸுன்னாஹ்வினதும் கட்டளைகளைப் புறக்கணிப்பதாக, செயலிழக்கச் செய்வதாக அல்லது மாற்றீடு செய்வதாகவே அமையும். இது அடிப்படை இஸ்லாமிய நம் பிக்கைக்கு முரணானது. இந்த உண்மைகளை ஏற்றுக்கொண்டால், இரு சமூகங்களும் சமய சுதந்திரத்தையும் சுயாட்சி உரிமையையும் ஊக்குவிக்கின்ற போதிலும் கிறிஸ்தவ சமயத்துக்கு ஒத்துப்போகும் விடயங்கள் முஸ்லிம் சமூகத்துக்கு ஒத்துவராது என்ற உண்மையை விளங்கிக்கொள்ளலாம்.

இஸ்லாமிய நாடுகளோ கிறிஸ்தவ நாடுகளோ தத்தமது கண் ணோட்டங்களை அடுத்தவர் மீது திணிக்கக்கூடாது. ஆனால் மேற் குலகைப் பொறுத்தமட்டில் உண்மைநிலை இதற்கு மாற்றமாகவே இருக்கிறது. முஸ்லிம்கள் தமது சமயத்திற்கு ஏற்றவகையில் சுயாட்சி பெறுவதைத் தடுப்பதிலேயே அது ஒருதலைப்பட்சமாக முனைந்து நிற்கிறது. சமயச் சார்பற்ற சர்வாதிகார ஆட்சிகளுக்கும் தம்மை இஸ்லாமியர் எனப் பொய்யாக அடையாளப்படுத்திக்கொள்ளும் சர்வா திகார ஆட்சிகளுக்கும் அது ஆதரவு வழங்குகின்றது. இந்தப் போலி இஸ்லாமிய ஆட்சிகள் மனித உரிமைகளையும், ஆண்-பெண் இரு பாலாரினதும் அடிப்படை உரிமைகளையும் காக்கும் விடயத்தில் கீழ்த்தரமாக நடந்துகொள்வதோடு, மக்களுக்காக மக்கள் நடாத்தும் ஆட்சி என்ற இஸ்லாமிய ஆட்சியின் அடையாளத்தை சிதைத்து நிற் கின்றன. உண்மையில் இன்று மெய்யான இஸ்லாமிய அரசு என்று கூறக்கூடிய எந்த நாடும் இல்லை. சரியான ஜனநாயகச் செயன்முறை யின் மூலம் இஸ்லாமியக் கட்சியொன்று வெற்றிபெறப்போகும் சந் தர்ப்பங்களில் பிரதான ஜனநாயக நாடுகளும் ஆட்சியிலுள்ள சர்வாதிகாரிகளும் முரண்பாடானதும் சங்கடமிக்கதுமான முறையில்

கூட்டுச்சேர்ந்து அம்முயற்சியைக் கருவறுத்துவிடுகின்றன. தாம் சரியா தவறா என்று நிரூபிப்பதற்குக்கூட அம்முயற்சிகளுக்கு இடமளிக்கப் படுவதில்லை. உலகின் ஜனநாயக நாடுகள் ஜனநாயகத்தைப் பேணு வதைவிட தற்போதைய நிலைமையைப் பேணுவதிலேயே அக்கறை யாக இருக்கின்றன. இது கவலைக்குரியதே.

இஸ்லாமிய சட்டங்களினால் ஆளப்படவேண்டும் எனக்கோரும் இஸ்லாமிய நாடுகளுக்கு எதிராகச் சுமத்தப்படும் குற்றச்சாட்டுகளில் ஒன்று அந்நாடுகளில் வாழ்கின்ற கிறிஸ்தவ, யூத சிறுபான்மையினரின் அந்தஸ்து தொடர்பானது. இந்த ஆட்சேபனை தொடர்பு ஊடகங்களா லும் அரசியல்வாதிகளாலும் பூதாகாரமாகப் பெருப்பித்துக் காட்டப் பட்டபோதிலும் உண்மையில் அதற்கு அர்த்தமேயில்லை. இஸ்லாமிய ஆட்சி முறையானது கிறிஸ்தவ, யூத சமுதாயங்கள் தத்தமது சமயங் கள் குறிப்பிட்டுள்ள வழிகாட்டலின்படி தமது சட்டம் சார்ந்த விவகா ரங்களைத் தாமே தீர்த்துக்கொள்ள தனித்துவமான முறையில் இட மளித்திருக்கிறது என்ற உண்மை பலருக்குத் தெரியாமல் இருக்கிறது. எனினும் அத்தகைய விவகாரங்கள் குடும்பப் பிரச்சினைகள் (விவாகம், விவாக விடுதலை, வாரிசுரிமை போன்றன) தொடர்பான சில மாத் திரமே. ஏனைய விடயங்களில் தங்கள் வேதநூல்களுக்கு முரண்படத் தேவையில்லாதவர்களாக, சிறுபான்மையினர் சட்டத்தின் முன்னிலை யில் பெரும்பான்மையினருக்குச் சமமானவர்களாகக் கருதப்படுவர். அவர்களுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்கப்படமாட்டாது. பெரும் பான்மையினர் (தமது சமய நம்பிக்கை காரணமாக) உரிமைகோரும் இச்சட்டங்கள் உறுதியான ஜனநாயகக் கோட்பாடுகளுக்கு இணக்க முடையனவாகவே இருக்கும்.

எனினும் ஷரீ’ஆவை நடைமுறைப்படுத்துவது தொடர்பான அச் சட்டங்கள் பற்றி சில குறிப்புக்களை இங்கு கூறாமல்விட்டால் நாம் முற்றிலும் நேர்மையுடையவர்களாக இருக்கமுடியாது. பல்வேறான சந்தர்ப்பங்களில் அது கோஷமிடல், உணர்ச்சிவயப்படல் ஆகிய நிலைமைகளுக்குப் பின்தள்ளப்பட்டிருக்கிறது. அளவுகடந்து ஆர்வம் கொண்ட சில இளைஞர்கள் அதனை ஏனைய சமயத்தவருடனான மோதலாக உருமாற்றியிருக்கின்றனர். எனினும் இதற்கு முற்றிலும் வித்தியாசமான முறையிலேயே அவர்கள் நடந்துகொள்ள வேண்டும் என்பதே ஷரீ’ஆவின் எதிர்பார்ப்பு. பயத்தை நீக்கி, அச்ச உணர்வுகளை ஒழித்து நடைமுறைரீதியில் நல்ல பிரஜைக்குரிய ஒழுக்கமுறைகளை வெளிக்காட்டுவதே அதன் நோக்கம். முஸ்லிம்களில் பெரும்பான் மையினரும் இஸ்லாமிய இயக்கங்களில் பெரும்பான்மையானவையும்

இவ்வழிமுறையையே பின்பற்றுகின்றன. எனினும் இதுபற்றி தொடர்பூட கங்களோ, மேற்குலகின் உயர்மட்ட அரசியல் வட்டாரங்களோ கவனத் திற்கொள்வதில்லை.

ஜனநாயக வழியில் செல்லத் தீர்மானிக்கும் இஸ்லாமிய அர சியல் கட்சிகளுக்கும் இங்கே சில புத்திமதிகளைச் சொல்ல வேண் டியிருக்கிறது. கவர்ச்சிகரமான இஸ்லாமிய கோஷங்களின் கீழ் அவர்கள் தமது தேர்தல் போராட்டங்களை நடத்தினாலும், ஷரீ’ஆவின் இலக்குகளை அடைவதற்காகத் தம்மால் தயாரிக்கப்பட்ட விவரமான நிகழ்ச்சித் திட்டமொன்றையும் அவர்கள் தம் வாக்காளர்களுக்குச் சமர்ப்பிக்கவேண்டும். அவர்களின் நாடுகளைப் பீடித்துள்ள சிக்கலான பொருளாதார, சமூக, அரசியல் பிரச்சினைகளைத் தீர்த்துவைக்கும் மந்திர வார்த்தையல்ல இஸ்லாம். உரிய தீர்வுகளை அடைவதற்கு, ஷரீ’ஆவுக்குட்பட்ட முறையில் செயற்படக்கூடிய தொழிநுட்ப ரீதி யானதும் விசேடமானதுமான ஆய்வுகள் வடிவமைக்கப்படவேண்டும்.

ஜனநாயகத்தை நாடுபவர்கள் தங்கள் பிரகடனங்களில் நேர் மையாக இருக்கவேண்டும் என இஸ்லாம் கோருகிறது. அதிகாரத் துக்கு வரும்வரை ஜனநாயகக் கோஷங்களை போலியாகப் பயன் படுத்திக்கொண்டு பின்னர் அவற்றைக் காற்றில் பறக்கவிடுகின்ற துரோகச் செயலில் அவர்கள் ஈடுபடக்கூடாது. மிக மோசமான நிலை என்னவெனில் இஸ்லாமியக் கட்சியொன்று ஜனநாயக அலையில் ஆட்சிக்கு வந்து, பின்னர் தமது வாக்குறுதிகளை நிறைவேற்றத் தவறும் போது, தமது தோல்வி இஸ்லாத்தின் தோல்வியாகக் கருதப் படுமே எனத் தவறாக நினைத்துத் தமது இயலாமையை ஒப்புக் கொள்ள மறுப்பதோடு, அடுத்து வரும் தேர்தலில் ஊழல் செய்தோ அல்லது அத்தேர்தலையே ரத்துச் செய்தோ தம்மைப் பதவியிறக்கச் செய்வதற்கான நாட்டு மக்களின் உரிமையை மறுத்து, இறுதியில் இன்னொரு சர்வாதிகார ஆட்சியாக மாறிவிடுவதாகும். இந்த விடயத்தில் இஸ்லாமியக் கட்சிகள் இன்னும் சரிவரச் சோதிக்கப்படாத காரணத்தால் அவை பற்றி முன்கூட்டியே கருத்துத் தெரிவிப்பது நியாயமற்றதே.

தமது நாட்டு மக்களின் விருப்பத்துக்கு மாறாக அதிகாரத்தைப் பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கும், இஸ்லாமிய கட்சிகளுக்கு எதிரான வர்கள் கையாலாகாதவர்கள் என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. எனவே உலகின் பிரதான ஜனநாயக நாடுகள் அவ்வாறான கட்சிகளுக்கு தார்மீக ஆதரவு உட்பட எந்த ஆதரவையும் வழங்க மறுக்கவேண்டும். இஸ்லாமியக் கட்சிகள் எப்போதாவது பதவிக்கு வந்தால், அவர்கள்

இவ்வாறு நடந்துகொள்ளக்கூடாது. தேவையானவை இஸ்லாமிய சட்டங்கள் மட்டுமல்ல; இஸ்லாமிய பண்பாடுகளும் நேர்மையும் கட்டாயம் தேவை. தாம் ஷரீ'ஆவின்படி ஆட்சிபுரிவதாகக் கோருகின்ற, பெருமை பேசுகின்ற சில பெயர்பெற்ற உதாரணங்கள், நேர்மை அல்லது ஷரீ'ஆ பற்றிய அறிவு அல்லது இரண்டுமே இல்லாதவர்கள் என்பதே எமது அபிப்பிராயம். ஷரீ'ஆவின் முழுமையான உள்ளடக்கத்தைக் கருத்தில் கொள்ளாமல் அதன் குற்றவியல் சட்டக்கோவையில் தேர்ந்தெடுத்த சில அம்சங்களை மாத்திரம் ஷரீ'ஆ எனக்காட்டுவது வெறும் பித்தலாட்டமே. ஆளும் வட்டாரத்தில் காணப்படும் பாரிய ஊழல்களையும் எவ்விதப் பொறுப்புக்கூறலுமின்றி பேராசை கொண்டு தேசத்தின் வளங்களைச் சுரண்டி வாழும் அவர்களது போக்கையும் தடுக்க எவ்வித முயற்சியும் மேற்கொள்ளாமல், சிறுசிறு குற்றங்களுக்காகக் கடுமையான தண்டனைகளை வழங்குவது இஸ்லாமிய முறை எனக் கூறமுடியாது.

இஸ்லாத்தில் ஆட்சியாளர் தம் மக்களுக்குப் பொறுப்புக்கூற வேண்டியவர். அவர் ஒரு சேவகனேயன்றி எஜமானல்ல. சட்டத்தை மீறும் உயர் குடியினரை ஒன்றும் செய்யாமல் சாதாரண மக்களையும் நலிவுற்றவர்களையும் நீதியின் முன் நிறுத்துவது இஸ்லாத்துக்கு முரணானது. ஷரீ'ஆ அமுல்படுத்தப்படவேண்டியது தொடக்கத்தில் இருந்து முடிவு வரையேயன்றி முடிவிலிருந்து தொடக்கம் வரையல்ல. குற்றங்களைத் தடுப்பதற்கு இஸ்லாம் மூன்றுமட்ட அணுகுமுறையொன்றைக் கைக்கொள்கிறது: முதலாவது, இஸ்லாமிய உணர்வை (கல்வி மற்றும் வழிகாட்டல் மூலம்) விருத்திசெய்தல். அடுத்து, குற்றச் செயல்களுக்கு வழி வகுக்கக்கூடிய (சமூக மற்றும் பொருளாதார) பிரச்சினைகளைத் தவிர்த்தல், இறுதியாக சட்டரீதியான தண்டனை விதித்தல். அதற்கு அப்பால் சட்டத்திற்கு எவ்விதக் கட்டுப்பாடும் இருக்காது.

**ஜனநாயகம்**

இஸ்லாம் ஜனநாயகத்துடன் இணங்கிப்போகக்கூடியதா என்ற கேள்வி இப்போது அடிக்கடி கேட்கப்படுகின்றது. இல்லை என்று பதில் கொடுப்பவர்கள் பல்வேறு வகையினரைக் கொண்ட ஒரு குழுவினரே. இவர்களிடையே வேறெந்தப் பொதுத்தன்மையும் இல்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் மேற்குலகைக் கண்டு வியந்த முஸ்லிம் புத்திஜீவிகளின் குழுக்கள் மேற்குலகின் நல்லவையோடு கெட்டதையும் கைக்கொள்ள வேண்டும் எனக் கோரிக்கை

விடுத்தது போலவே இன்று மேற்குலகில் காணப்படும் ஒழுக்கவீழ்ச்சி, அரசியல் ரீதியான அநியாயங்கள் என்பவற்றினால் ஏமாற்றமடைந் துள்ளவர்கள் அதற்கு எதிர்விளைவு காட்டும் வகையில் ஜனநாயகம் உட்பட மேற்குலகுக்குரிய அனைத்தையும் வெறுத்தொதுக்கத் தலைப் பட்டுள்ளனர். இஸ்லாமிய நாடுகளின் சமயச் சார்பற்ற சர்வாதிகாரிகள், அவர்கள் சர்வாதிகாரிகளாக இருப்பதன் காரணத்தாலேயே ஜன நாயகத்தை வெறுக்கின்றனர். அவர்கள் தமது சுயலாபத்துக்காக ஜனநாயகம் இஸ்லாத்துக்கு முரணானது எனத் தமது முஸ்லிம் பிரஜைகளுக்கு எடுத்துக்காட்டுகின்றனர். இஸ்லாமிய உடையணிந்து கொண்டு தம்மை இஸ்லாமிய போக்குடையவர் எனப் பறைசாற்றிக் கொள்ளும் சர்வாதிகாரிகள், ஜனநாயகம் இஸ்லாமிய சன்மார்க்கத் திற்கு முரணானது என்றும் பிரச்சாரம் செய்கின்றனர். அவர்களது பிரச்சாரத்துக்குத் துணைபோகும் சமய அறிஞர்களும் அவர்களது சம்பளப் பட்டியலில் இருக்கத்தான் செய்கின்றனர்.

மேற்கில் ஊடகத்துறையிலும் அரசியல் வட்டாரங்களிலும் இருக் கின்ற இஸ்லாத்தின் சம்பிரதாய எதிரிகள், இஸ்லாத்தை ஜனநாயகப் பெறுமானங்களுக்கு இடமேயில்லாத ஜனநாயக விரோத சமய மொன்றாகச் சித்தரிப்பதற்கு முடிவின்றி முயற்சித்துக்கொண் டிருக்கின்றனர். அவர்களுடைய இலக்கு மேற்கத்திய பொதுசன அபிப்பிராயத்திலிருந்து இஸ்லாத்தை மேலும் அந்நியப்படுத்தி வைப்பதே. இதன் மூலம் முஸ்லிம்களுக்கு எதிராக அவர்களது அரசாங்கங்கள் பின்பற்றும் கடுமையான கோட்பாடுகளையும் நியாய மற்ற நிலைப்பாடுகளையும் பொதுமக்கள் ஏற்றுக்கொள்ள உதவும் வகையில் முஸ்லிம்களைப் பிசாசுகளாகச் சித்தரித்துக் காட்டுவதற்கு வாய்ப்பும் வசதியும் ஏற்படுகிறது. பெரும்பாலான முஸ்லிம் நாடுகளில் ஜனநாயகம் இல்லாமையை அவர்கள் அடிக்கடி தூக்கிக் காண்பிக் கின்றனர். எனினும் மத்திய கிழக்கில், மக்களின் ஜனநாயக அபிலா ஷைகளுக்கு எதிராக அங்குள்ள சர்வாதிகாரிகளுக்கு துணைநிற்பது மேற்கத்திய ஜனநாயக நாடுகளே என்பதை அவர்கள் குறிப் பிடுவதில்லை.

ஏழாம் நூற்றாண்டின் ஆரம்பப் பகுதியில் உருவான இஸ்லாமிய ஆட்சி முறையை அதற்குப் பல நூற்றாண்டுகளுக்குப் பின் தோன்றிய மேற்கத்திய ஜனநாயக நிறுவனங்களுடன் ஒப்பீடு செய்துபார்ப்பது சாத்தியமானதல்ல. அத்தோடு மேற்கத்திய ஜனநாயகங்கள் அனைத் தும் ஒரே மாதிரியானவையுமல்ல; அவை ஜனநாயகக் கோட்பாடு களையும் கருத்துக்களையும் பகிர்ந்துகொண்டிருக்கின்றன. பதினான்கு

நூற்றாண்டுகளுக்கு முன்பே குர்ஆன் 'ஷூரா' என்னும் கோட்பாடு பற்றித் தெளிவாக விளக்கிவிட்டது. கூட்டுமுறையில் ஆராய்ந்து கலந்தாலோசித்தே பிரச்சினைகளுக்குரிய முடிவுகள் எடுக்கப்பட வேண்டும் என அது கூறுகிறது. இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் (இறைத்தூதரினதும் அவரைப் பின்தொடர்ந்து வந்தவர்களினதும் காலத்தில்) இக்கோட்பாடு செயல்முறையில் பிரயோகிக்கப்பட்டமை ஜனநாயகத்தின் முன்னோடியாகக் கருதப்படத் தகுதிபெறுகின்றது.

இறைதூதர் என்ற வகையில் முஹம்மத் (ஸல்) அவர்கள் மறுகேள்வியின்றிப் பின்பற்றப்பட வேண்டியவராக விளங்கினார். மார்க்க விடயங்களை இறைவனிடமிருந்து பெறப்பட்ட விதத்திலேயே எடுத்துக்கூறுதல், அதற்கு விளக்கமளித்தல் என்பன தவிர்ந்த ஏனைய விடயங்களைப் பொறுத்தமட்டில், எதிர்காலத்தை எதிர்வுகூற வல்லமை யற்ற, தத்தமது துறைகளில் புலமையுள்ள மற்றவர்களைவிட அதிக அறிவுள்ளவன் என உரிமைகோர முடியாத, ஒரு சாதாரண மனிதரே தாம் என முஹம்மத் (ஸல்) அவர்களே தெளிவாக்கியிருக்கின்றனர். முஸ்லிம்களுக்கும் அராபிய சிலைவழிபாட்டாளர் குழுவினருக்கும் இடையில் நிகழ்ந்த முக்கியமான முதல் இராணுவ மோதலான பத்ர் யுத்தம் ஆரம்பமாவதற்குச் சற்றுமுன்னர், தன்னுடைய சிறுபடையை நகர்த்துவது தொடர்பான திட்டமொன்றை அன்னார் வரைந்திருந்தார். அப்போது அவருடைய தோழர்களுள் ஒருவர், "இந்தப் படை நகர்வு நுட்பம் எந்தக் கேள்வியுமின்றிப் பின்பற்றப்படவேண்டியதாக இறை வனால் அறிவிக்கப்பட்டதா? அல்லது அது ஓர் அபிப்பிராயம் மாத் திரமா?" எனக் கேட்டபோது "அது ஓர் அபிப்பிராயமே" என முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினர். பின்னர் அத்தோழர் படை நகர்த்துவதற்கான மாற்று முறையொன்றை முன்வைத்தார். அவரது ஆலோசனையை ஏற்றுக்கொண்ட இறைதூதர் அந்தத் திட்டத்தை செயல்படுத்தினார். அதன் விளைவு பெருவெற்றியாக அமைந்தது.

சில வருடங்களின் பின்னர் மதீனாவிலிருந்த முஸ்லிம்களைத் தாக்குவதற்காக எதிரிகள் பெரும் படையொன்றை அனுப்பிவைத்தனர். மதீனாவில் தங்கியிருந்து எதிரிகளுக்கு முகங்கொடுக்க வேண்டும் என்பதே முஹம்மத் (ஸல்) அவர்களின் அபிப்பிராயமாக இருந்தது. எனினும் கலந்தாலோசனை செய்தபோது அணிவகுத்துச் சென்று மதீனாவுக்கு அப்பாலிருந்த உஹுத் எனும் மலையடிவாரத்தில் எதிரி களோடு போராடுவதே நல்லது என்று பெரும்பான்மையினர் விரும்பினர். ஷூரா கோட்பாட்டுக்கு அமைய முஹம்மத் (ஸல்) அவர்கள் பெரும்பான்மையினரின் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொண்டார்.

ஆரம்பத்தில் முஸ்லிம்கள் வெற்றி கண்டனர். இந்நிலையில் மலை உச்சியில் நிறுத்தப்பட்டிருந்த அம்பெய்யும் வீரர்கள் யுத்தம் முடிந்துவிட்டது என எண்ணி தமது நிலைகளை விட்டகன்றனர். என்ன தான் நடந்தாலும் தங்கள் நிலைகளைவிட்டு அகலக்கூடாது என்ற இறைதூதரின் தெளிவான கட்டளையைப் புறக்கணித்த அவர்கள் எதிரிகளைத் துரத்திச் செல்லலாயினர். எதிரிகளின் குதிரைப் படை யொன்றை வழிநடாத்திச் சென்ற காலித் இப்ன் அல்வலீத் முஸ் லிம்களின் இந்தப் பலவீனத்தைக் கண்டு, வேறு வழியால் சென்று மலையுச்சியை அடைந்து முஸ்லிம்களைப் பின்புறமிருந்து தாக்கினார். முஸ்லிம்கள் இதனைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. இதனால் சம நிலை குலைக்கப்பட்டு யுத்தத்தின் போக்கு முஸ்லிம்களுக்குப் பாதக மானதாக மாறியது. பெரும் இழப்புக்களோடு அவர்கள் பின்வாங்க வேண்டி நேர்ந்தது. முஸ்லிம்கள் இரண்டு வகையான தவறுகளைச் செய்திருந்தபோதிலும், சற்றுப் பின்னர் இறங்கிய குர்ஆன் வாக்கியங்கள் முஹம்மத் (ஸல்) அவர்களை நோக்கிப் பின்வருமாறு கூறின: *''அல்லாஹ்வுடைய அருளின் காரணமாகவே நீர் அவர்களிடம் மென்மையாக (இரக்கமுள்ளவராக) நடந்துகொள்கிறீர். மேலும் சொல் லில் கடுகடுப்பானவராக, இரக்கமற்ற இதயமுள்ளவராக நீர் இருந் திருப்பீராயின் உம்மிடமிருந்து அவர்கள் பிரிந்து சென்றிருப்பார்கள். ஆகவே அவர்களை மன்னித்து (இறைவனிடம்) அவர்களுக்காக மன்னிக்கக் கோருவீராக! மேலும் அவர்களுடன் கலந்தாலோசனை செய்வீராக!..'' (3:159)* வாழ்வின் எல்லாக் கட்டங்களிலும் எல்லா மட்டங்களிலும் 'ஷூரா' கையாளப்படவேண்டும். குர்ஆனில் குறிப் பிடப்பட்டுள்ள அற்பமானவைபோல் தோன்றும் சில விடயங்களில் கூட இது அவசியம். எடுத்துக்காட்டாக, பால் குடிக்கும் குழந்தையை பால் மறக்கச் செய்யும் விடயத்தில் இரு பெற்றாரும் கலந்தாலோசித்தே முடிவெடுக்க வேண்டும் எனக் குர்ஆன் கட்டளையிடுகிறது.

இறைதூதரின் மரணத்தோடு இறைத்தூதுத்துவம் முற்றுப் பெற்றுவிட்டது. ஏனைனில் அன்னாருக்குப் பிறகு எந்த இறைதூதரும் வரப் போவதில்லை. எனினும் அவருக்குப் பின்னால் ஓர் அரசுத் தலைவர் வர வேண்டியிருந்தது. அப்பதவிக்கு ஒன்றுக்கு மேற்பட் டவர்கள் உரிமைகோரும் நிலையில் திறந்த விவாதத்தின் ஊடாகவே தலைவர் தேர்வு நிகழ்ந்தது. முடிவில் கருத்து ஒருமைப்பாட்டின் அடிப்படையில் இறைத்தூதரின் மிக நெருங்கிய தோழரான அபூபக்ர் முதலாவது கலீபாவாத் தெரிவுசெய்யப்பட்டார். அந்தச் சந்தர்ப்பத்தில் இஸ்லாமியக் கோட்பாடுகள் அபூபக்ர் அவர்களாலேயே மீளுறுதி

செய்யப்பட்டு வலியுறுத்தப்பட்டன. இதன்படி, தலைவர் தெரிவு செய்யப்படும் செயல்முறையையும் முஸ்லிம் சமுதாயத்தில் அவரது கடமை பொறுப்புக்களையும் நிர்ணயிக்கும் முக்கிய விதிகளை நாம் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம்:

1. அப்பதவி மக்கள் ஆணையின் மூலம் நிரப்பப்படவேண்டும். (கூட்டத்துக்குச் சமூகந் தராத ஏனையவர்களின் கருத்தையறிந்து அவர்களின் ஒப்புதலைப் பெறுவதே அபூபக்ர் எடுத்த அடுத்த நட வடிக்கை)

2. அந்நியமனம் நிபந்தனையுடன் கூடியது. ("நான் இறை வனுக்குக் கீழ்ப்படிந்து நடந்தால் நீங்கள் எனக்கு அடிபணியுங்கள்" என கலீபா பிரகடனம் செய்தார்)

3. மக்கள் வழங்கிய ஆணையை வாபஸ் பெறும் உரிமையும் அவர்களுக்கு உண்டு. (தான் இறைவனின் சட்டத்திற்கு முரணாக நடந்தால் மக்கள் தனக்கு அடிபணியத்தேவையில்லை என அபூபக்ர் பிரகடனம் செய்தார்)

4. ஆட்சியாளர் என்பவர் தமது பதவிக்குரிய கடமைகளை நிறைவேற்றுவதற்காக நாட்டு மக்களால் நியமிக்கப்பட்ட ஒரு பணியாளரே. (அபூபக்ர் தமது பதவியின் ஆரம்ப நாட்களில் தமது வாழ்க்கைச் செலவிற்காகத் தமது தனிப்பட்ட வியாபாரத்தில் ஈடுபடு வதைக் கண்ட மக்கள் முழுநேரப் பணிக்காக பணக்காரரோ ஏழையோ அல்லாத சராசரி முஸ்லிம் ஒருவரின் சம்பாத்தியத்திற்குச் சமனான தொகையொன்றை வேதனமாகப் பெற்றுக்கொள்ளுமாறு அவரை வற்புறுத்தி ஏற்கச் செய்தனர்)

5. அரசுத் தலைவரானவர் உயர் வகுப்பினர், பெருங்குடியினர், விசேட ஆர்வக் குழுவினர்கள் போன்றோரின் கையாளாக இருக்க முடியாது. அவர் சொன்னார்: "உங்களில் பலவீனமானவர்கள், நான் உங்களுக்குரியதைப் பெற்றுத்தரும் வரை என்னிடத்தில் வலிமையான வர்களே. உங்களில் வலிமையானவர்கள் உங்களிடமிருந்து பெறப் படவேண்டியதை நான் பெற்றுக்கொள்ளும் வரை என்னிடத்தில் பலவீனமானவர்களே."

சுருங்கச் சொல்வதாயின் இன்று பெரும்பாலான முஸ்லிம் நாடு களில் உள்ள நடைமுறைகளுக்கு முற்றிலும் மாற்றமானதாகவே அது இருந்தது. இஸ்லாம் நிர்ணயித்த திசையிலேயே நிலைமைகள் பரிணாமம் அடைந்திருந்தால், இஸ்லாமிய பேரரசு விரிவடைந்து வந்தபோது முஸ்லிம்கள் நல்லாட்சி முறைமையொன்றைச் சாதித்துக்

கொண்டிருக்கலாம். அம்முறைமையானது இன்றைய நவீன ஜனநாயக அமைப்புக்களிலுள்ள சிறந்தவற்றை உள்ளடக்கி, அவற்றிலுள்ள குறைபாடுகளைத் தவிர்த்துக்கொண்டதாக அமைந்திருக்கும்.

சிறிது காலத்திற்கு நிலைமைகள் நம்பிக்கை தரக்கூடிய முறை யிலேயே நகர்ந்தன. இரண்டாவது கலீபாவான உமர், தான் சரியான முறையில் நடக்கும் போது தனக்கு ஆதரவு தரும்படியும் தான் தவறுசெய்தால் தன்னைத் திருத்தும்படியும் மென்மேலும் மக்களுக்கு விழிப்பூட்டினார். அவர் அவ்வாறு கூறியபோது ஒரு மனிதர் எழுந்து நீர் வழி தவறிச் செல்லும்போது உம்மைத் திருத்துவோம். நாம் அதற்காக எமது வாள்களைக்கூடப் பயன்படுத்துவோம் என்று கூற ‘‘நீர் இப்படிக் கூறாதுவிட்டால் நீர் நல்லவரல்லர். இதை ஏற்றுக் கொள்ளாவிட்டால் நான் நல்லவனுமல்லன்’’ எனக் கலீபா பதில் கொடுத்தார்.

இஸ்லாமிய வரலாற்றில் நிகழ்ந்த மிகக் கவலைக்குரிய நிகழ் வொன்றின் காரணத்தால் இப்போக்கு துரதிர்ஷ்டவசமாக முறிந்து போயிற்று. கலீபா உத்மான் குடும்ப ஆட்சி நடாத்தியதாகக் குற்றம்கூறி அவருக்கெதிராகக் கிளர்ச்சி நடந்து கொலைசெய்யப்பட்டார். அடுத்த கலீபாவாக இறைத்தூதரின் ஒன்றுவிட்ட சகோதரரும் மருமகனும் விசேட அன்புக்குரியவருமான அலீ பதவியேற்றார். அவரிடம் பிரமிக் கத்தக்க தனிப்பட்ட தகுதிகளும் இருந்தன. அவர் கலீபாவாகத் தெரிவுசெய்யப்பட்டபோது முக்கியஸ்தர்களும் பொதுமக்களும் பெருந் தொகையினராக அவருக்கு விசுவாசப் பிரமாணம் செய்தனர். எனினும் ஸிரியாவின் (இஸ்லாமியப் பேரரசின் ஒரு பகுதி) ஆளுனராக இருந்த முஆவியா அவ்வாறு வாக்குறுதியளிக்க மறுத்ததோடு மதீனாவை நோக்கிப் பெரும் படையொன்றை வழிநடாத்திச் சென்றார். உத்மான் அவர்களைக் கொலை செய்தவர்களைத் தண்டிப்பதே தனது படை யெடுப்பின் நோக்கம் என அவர் பிரகடனப்படுத்தினார். கொல்லப்பட்ட கலீபாவுடைய உறவினராக அவர் இருந்தார். (இருவரும் உமையாக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள்) காலம் பிடிக்கும் சட்டரீதியான நடவடிக் கைக்குக் காத்திராமல் பழிக்குப்பழி வாங்குவதே அவரது கோரிக்கை. யுத்த களத்தில் அலியே வெற்றிபெற்றார். ஆனால் முஆவியா கெட் டிக்காரர். அவருடைய முகாமிலே தந்திரம் மிக்க சிலர் இருந்தனர். எனவே அவர் தந்திரமான முறையில் சமரசம் செய்துகொண்டார். இதனால் பொறுமையிழந்த சிலர் முஆவியாவையும் அலியையும் சாடினர். எனினும் இறுதியில் அலியே கொலையுண்டார். நாட்டு மக்கள் அதிர்ச்சியுற்றனர். எனினும் பேச்சுவார்த்தைகளின் பின்னர்

அலியின் வாரிசான அவரது மகன் ஹஸன் ஆட்சி அதிகாரத்தை முஆவியாவுக்கு வழங்க இணங்கினார். மேலும் இரத்தம் சிந்துவதைத் தவிர்ப்பதற்காக அவர் முஆவியாவுக்கு விசுவாசப் பிரமாணம் செய்தார்.

சிறிது காலத்தின் பின்னர் தனது அதிகாரத்தைப் பலப்படுத்திக் கொண்ட முஆவியா தனது மகன் யஸீத் என்பவரை தனக்குப் பின்னர் தனது வாரிசாக ஏற்று விசுவாசப் பிரமாணம் வழங்குமாறு நாட்டுமக்களை வற்புறுத்தியபோது மக்கள் அதிர்ச்சியுற்றனர். அலீயின் இரண்டாவது மகன் ஹுஸைன் யஸீதுக்கு எதிரான புரட்சிக்குத் தலைமை தாங்கினார். (அப்போது முஆவியாவும் ஹஸனும் காலஞ் சென்றிருந்தனர்) ஈராக்கின் மக்கள் ஹுஸைனுக்குத் தமது ஆதரவைத் தெரிவித்தபோதிலும் மத்திய அரசாங்கத்தின் திருகுதாளங்களுக்கும் கொடுமைகளுக்கும் அஞ்சி அவர்கள் அவரைக் கைவிட்டுவிட்டனர். புறமுதுகு காட்டித் தப்பியோடவோ பிடிபடவோ விரும்பாத ஹுஸைனும் அவருக்கு விசுவாசமான எழுபது பேரும் யஸீதின் இலட்சக்கணக்கான வீரர்களைக் கொண்ட இராணுவத்துக்கு முகங்கொடுத்து கர்பலா என்னும் இடத்தில் வீரமரணம் அடைந்தனர். இதுவே உமையாப் பரம்பரையின் இரண்டு நூற்றாண்டு கால ஆட்சிக்குச் சாவுமணியாக அமைந்தது என்பது சிறிது காலத்தின் பின்னர் நிரூபணமாகியது.

இந்த நிகழ்வே ஷீயாக்கள் என்ற இயக்கத்தின் தோற்றத்தைக் குறிக்கின்றது. அலீக்குச் சார்பானவர்கள் எனத் தம்மை அழைத்துக்கொண்ட கடும்போக்குள்ளவர்கள் இதில் அங்கம் வகித்தனர். உண்மையில் இந்த இயக்கம் அரசியல் ரீதியான எதிர்ப்பை வெளிப்படுத்துவதற்காகவே ஆரம்பிக்கப்பட்டது. எனினும் நியாயத்துக்காகப் போராடுவது ஒரு சமய ரீதியான ஆணை என்பதால் அரசியலை சமயத்திலிருந்து பிரிக்க முடியாமற்போய்விட்டது. காலப்போக்கில் ஷீஆக் கோட்பாடு சமயப் பிரிவொன்றாக உருப்பெற்றது. கிலாபத்துக்குரிய உரிமை அலீக்கே உரியது என்ற நம்பிக்கையை மையமாகக் கொண்டு உருவாகிய இக்கோட்பாடு அலீக்குப் பின்னர் அவரது வழித்தோன்றல்களே (மூத்த மகன் முதலில் என்ற முறையில்) கலீபாப் பதவிக்குரியவர்கள் எனக் கூறுகிறது.

ஷீஆக்கள் பல்வேறு பிரிவினர்களாகப் பிரிகையுற்றபோது பல துணைக் கருத்துக்களையும் தமதாக்கிக்கொண்டனர். சிறுவயதிலேயே மர்மமான முறையில் காணாமற்போன பன்னிரண்டாவது வாரிசு (இமாம்) பின்னொரு நாளில் வாக்களிக்கப்பட்ட மஹ்தீயாக வந்து நீதியான முறையில் ஆட்சிபுரிவார் என்பது பன்னிரண்டாம் பிரிவினர் என்னும் ஷீஆக்களின் பிரதான நம்பிக்கையாக இருக்கிறது. மொத்த

முஸ்லிம்களில் பத்து சதவீதத்தினர் ஷீஆக்களாக இருக்க ஏனையோர் ஸுன்னிகள் எனச் சம்பிரதாய ரீதியாக அழைக்கப்படுகின்றனர். ஆரம்ப காலத்தில் நீதியற்ற ஆட்சிக்கு உடந்தையாக இருந்தார்கள் என்பதற் காக ஸுன்னிகள் மீது ஷீஆக்கள் பகைமை பாராட்டுகின்றனர். எனினும் அனைவரும் குர்ஆனையும் முஹம்மத் (ஸல்) அவர்களின் இறை தூதையும் விசுவாசிக்கின்றனர். ஒவ்வொரு வருடமும் கர்பலா யுத்தத் தையும் ஹுஸைனின் உயிர்த் தியாகத்தையும் ஷீஆக்கள் நினைவு கூர்கின்றனர். தங்கள் மூதாதையர்கள் ஹுஸைனின் போராட்டத்தின் முக்கியமான கட்டத்திலே அவரைக் கைவிட்டதைக் கவலையோடு நினைவுகூர்ந்து அவர்கள் தம் மார்பில் அறைந்துகொள்கின்றனர். அலீயின் மீதும் அவரது புதல்வர்களான ஹஸன், ஹுஸைன் ஆகியோர் உட்பட அவரது குடும்பத்தவர் மீதும் ஸுன்னிகளும் அன்பும் மரியாதையும் அனுதாப உணர்வும் கொண்டுள்ளனர் என்பதும் தெளி வான உண்மையாகும்.

மிகமிகச் சுருக்கமான முறையில் வரலாறு பற்றி எடுத்துக் கூறினோம். இத்துடன் அதனை நிறுத்திக்கொண்டு ஜனநாயகம் பற்றிய விடயத்துக்கு வருவோம். மேலே சொல்லப்பட்ட வரலாற்று நிகழ்வானது நாட்டு மக்களின் விசுவாசப் பிரமாணத்தின்படி ஆட்சியைக் கையளிக் காது வாளினாலும் பண பலத்தினாலும் ஆட்சிக் கைமாற்றம் செய் வதற்குரிய துரதிஷ்டவசமான முன்னுதாரணமாக அமைந்திருக்கிறது. இந்தத் துர்ப்பாக்கிய நிகழ்வின் விளைவுகள் தொடர்ந்து வந்த முஸ் லிம் வரலாற்றை இடையறாது பாதித்துவந்திருக்கிறது. கொடுங்கோல் ஆட்சியாளர்கள் தமது நியாயமற்ற ஆட்சியை அங்கீகரித்து நியா யப்படுத்தக்கூடிய அறிஞர்களை எப்போதும் தேடிக்கொண்டார்கள். அதேவேளையில் கசப்பான உண்மையை வெளியே பேசத் துணிந் தவர்கள் சுதந்திரத்துக்காகத் தம் உயிரையே அர்ப்பணிக்க நேர்ந்தது. கலீபா நல்லவராக இருந்தபோது நன்மை நடந்தது. கலீபா தீயவராக இருந்தபோது தீமையே நிகழ்ந்தது. முன்னையதைவிட பின்னைய நிலைமையே பெரும்பாலும் காணப்பட்டது. இரண்டு சந்தர்ப்பங்களிலும் மக்களின் அதிகாரமும் ஆட்சியாளர்கள் மீது அவர்களுக்கிருந்த உரிமைகளும் கரைந்து மறைந்தன. எனினும் அறிவைத் தேடுவதும், அறிவியலில் சிறப்புறுவதும், நாகரிகத்தை நிலைநிறுத்துவதும் மார்க்க கடமை என நம்புபவர்கள் எல்லாக் காலங்களிலும் இருந்ததனால் இஸ்லாமிய நாகரீகம் செழித்தோங்கியது. இந்தத் துறைகள் அனைத்திலும் அரசாங்கம் மக்களை ஊக்குவித்தது. ஆனால் ஆட்சி யாளர் மீதான உரிமைகள் பற்றியோ, ஆளுவோரின் கடிவாளமற்ற

அதிகாரங்களைக் கட்டுப்படுத்துவது பற்றியோ பேசுவதும் எழுதுவதும் நசுக்கப்பட்டது. வாழ்வின் ஏனைய துறைகளில் இஸ்லாமிய நாகரிகத்தின் அருந் திறமைகளை நோக்கும்போது மக்களின் அரசியல் யாப்பு ரீதியான உரிமைகளைப் பற்றிய அவர்களது எழுத்துக்கள் சக்திவாய்ந்தனவாக - ஆனால் அரிதானவையாக இருந்தன.

ஜனநாயகத்துக்கு எதிராகக் கலக்கமுற்று முறுகல் அடையும் முஸ்லிம் சகோதரர்களுக்கு நான் கூற விரும்புவது யாதெனில், இஸ்லாமிய அரசினைப் பீடித்த ஒரு நோயாக ஜனநாயகம் ஒருபோதும் இருந்ததில்லை. மாறாக கொடுங்கோன்மையும் சர்வாதிகாரமும்தான் அதனைத் தொடர்ச்சியாகப் பாதித்துவந்துள்ளன என்பதே. எமது வரலாறு இந்த உண்மையை எமக்குக் காட்டித்தரவில்லையாயின் நாம் குருடர்களாகவே இருக்க வேண்டும். இஸ்லாம் ஜனநாயகத் தைச் சகித்துக்கொள்வதில்லை எனக் கூறுவோரும் பிழை என்றே நான் கூறுவேன். எனினும் இஸ்லாத்துக்கும் அதற்கும் இடையில் பிரதான வேறுபாடொன்று இருக்கிறது. மேற்கத்திய ஜனநாயகத்தில் இறைவனுக்கு எதிரானவர்கள் பெரும்பான்மை வாக்குகளைத் திரட் டிக்கொள்ள முடியுமானால் இறைவனைத் தோற்கடித்துவிடவோ அவனது ஆணைகளை ரத்தச்செய்து விடவோ முடியும். இஸ்லாத்தில் அரசியல் யாப்பு ஷரீ'ஆவின் அடிப்படையிலேயே இருக்கும். அதனோடு முரண்படும் எந்த சட்டவாக்கமும் யாப்புக்கு முரணானதாக அமையும். இந்த சட்டகத்தினுள்தான் ஜனநாயகச் செயன்முறை நூற் றுக்கு நூறு வீதம் செயற்படுகிறது.

தற்கால இஸ்லாமிய மறுமலர்ச்சியானது பரவலாகப் வெளிக் காட்டப்படுவது போன்ற வெறியூட்டும் தீவிரவாதம், வன்முறை வெளிப் பாடு, மதச் சார்பற்ற கொடுங்கோலாட்சி அல்லது இஸ்லாமிய போர் வையில் நடைபெறும் ஆட்சி என்பவற்றுக்கு அப்பாற்பட்டது. பரந்த அறிவு விளக்கமுடைய, அமைதியான மக்கள் கூட்டமொன்று சமயம் பற்றிய யதார்த்தத்தைக் கண்டறிந்துகொண்டு, வரலாறு தரும் படிப்பினைகளின் மூலம் விழிப்புணர்வு பெற்றுள்ளார்கள். இக்கூட்டத் தினர் மற்றவர்களுக்கு எதிரான வெற்றுக்கோஷங்களால் வெறியூட் டப்படாமல் நியாயமான சீர்திருத்தத்தை நோக்கிய அறிவுசார்ந்த முயற்சிகளால் உந்தப்பட்டிருக்கிறார்கள். நியாயமாக நடந்துகொள்ளும் முஸ்லிம் அல்லாத நாடு, கொடுங்கோன்மையும் அநியாயமும் நிறைந்த ஓர் இஸ்லாமிய அரசைவிடச் சிறந்தது என இஸ்லாமிய அறிஞர்கள் ஏற்கனவே தீர்ப்பு வழங்கியுள்ளனர்.

# ஒருவரின் அகநிலை

## இஸ்லாத்தின் ஐந்து தூண்கள்

முதலாம் இரண்டாம் அத்தியாயங்கள் இறை விசுவாசத்தின் அம்சங்களை ஆராய்ந்தன. இதனை முஹம்மத் (ஸல்) அவர்கள் பின்வருமாறு வரையறை செய்தார்கள். ''இறைவன் மீதும் அவனது வானவர்கள் மீதும் அவனது வேதங்கள் மீதும், அவனுடைய தூதர்கள் மீதும், இறுதிநாள் பற்றியும், முன்னேற்பாடுகள் பற்றியும் விசுவாசி யுங்கள்.'' (இங்கு முன்னேற்பாடுகள் பற்றிய விசுவாசம் ஒருவருடைய சுயாதீன விருப்பம் பற்றிய கருத்துப்படிவத்துக்கு மாறானதல்ல. நல்ல தோ தீயதோ தனது கட்டுப்பாட்டில் இல்லாதவை பற்றியே இது குறிப்பிடுகின்றது) இந்த அம்சங்களை, குருட்டுத்தனமாகப் பின்பற்றப்பட வேண்டிய சமய மரபுகளாக நாம் இங்கு முன்வைக்க வில்லை. மாறாக அவற்றைத் தர்க்கரீதியாக விளக்கவே முயற்சித் திருக்கிறோம். குர்ஆனின் போக்குடன் இது இணங்கிச் செல்வதாக இருக்கிறது. அது அறிகுறிகளைச் சுட்டிக்காட்டி, சிந்திக்கத் தூண்டும் கேள்விகளைக் கேட்பதன் ஊடாக சிந்தித்துப் பார்க்குமாறு மனித உள்ளங்களுக்கு அழைப்புவிடுக்கிறது. நம்பிக்கையைத் திணிப்பதற் குப் பதிலாக விளக்கம் கொடுத்து நம்பச் செய்கிறது.

இஸ்லாத்தின் பிரதான நம்பிக்கையும் (இறைவன் ஒருவனே என்பது) அதன் அம்சங்களும் ஏனைய ஆபிரஹாமியச் சமயங்களான கிறிஸ்தவத்திலும் யூத சமயத்திலும் இருக்கும் நம்பிக்கைகளுக்கு ஒப்பானவையே. உண்மையில் முன்னர் வந்த இறைதூதர்களையும் அவர்களைப் பின்பற்றுவோரையும் இஸ்லாத்தைப் பின்பற்றும் முஸ் லிம்கள் என்றே இஸ்லாம் வர்ணிக்கின்றது. ஏனெனில் இஸ்லாம் என்பதன் நேரடிக் கருத்து இறைவனின் விருப்பத்துக்கு அடிபணிவது என்பதே. இஸ்லாமிய சமயத்தைப் பற்றியும் அதன் ஷரீ'ஆ பற்றியும் பொதுவான விபரமொன்றை இந்த அத்தியாயத்தில் முன்வைத்த பின்னர் இஸ்லாத்துக்கே தனித்துவமான அதன் வணக்க வழிபாட்டு முறைகளை இப்பகுதியில் கலந்துரையாடுவோம். வணக்கம் இஸ் லாத்தில் மிக முக்கியமானது. ஏனெனில் முஸ்லிம் தனிநபர் ஒவ் வொருவர் மீதும் அது கவனத்தைக் குவிக்கிறது. அதன் மூலம் ஆரோக்கியமான அலகுகளைக் கொண்டதாக இஸ்லாம் என்னும் கூட்டமைப்பை உருவாக்கமுடியும். அதாவது இந்தக் கட்டமைப்பை உறுதியான கற்களைக் கொண்டு நிர்மாணிக்க முடிகிறது.

இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் விவரித்துள்ளது போன்று இஸ்லாத்தில் கட்டாயக் கடமைகளான வணக்கங்கள் ஐந்து வகைப்படும். ‘‘இஸ்லாம் ஐந்து தூண்களின் மேல் எழுப்பப்பட்டுள்ளது. இறைவனைத் (அல்லாஹ்வை) தவிர வேறு நாயன் இல்லை என்றும் முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைவனின் தூதர் என்றும் பிரகடனம் செய்வது (சாட்சியம் கூறுவது); தொழுகையை நிலைநிறுத்துவது, ஸக்காத் என்னும் ஏழை வரியைச் செலுத்துவது; ரமழான் மாதத்தில் நோன்பு இருப்பது, வசதியுள்ளவர்கள் ஹஜ் யாத்திரை மேற்கொள் வது.’’ இன்னொரு சந்தர்ப்பத்தில் இஸ்லாத்திற்கான வரைவிலக் கணத்தைத் தருமாறு கேட்கப்பட்டபோது இறைதூதர் அவர்கள் இந்த ஐந்து தூண்களையுமே குறிப்பிட்டார்கள். சரியாகச் சொல்வதானால் கட்டடங்கள் தூண்களைக் கொண்டிருப்பதில்லை. முழுக் கட்டடத் தையும் தாங்குவதற்காகத்தான் தூண்கள் இருக்கின்றன. இஸ்லாத்தை வெறுமனே வணக்க வழிபாடுகளுக்கு மாத்திரம் சுருக்கிக்கொண்டிருப் பவர்கள் இஸ்லாத்தின் பரந்துவிரிந்த முழுமைத்துவத்தை விளங்கிக் கொள்ளாதவர்களே. இந்த வணக்க வழிபாடுகளின் நோக்கம் வணங்குபவரின் குணநலன்களை நல்லமுறையில் வடிவமைப்பதே என்பதையும் அவர்கள் புரிந்துகொள்ளவில்லை.

இஸ்லாத்தின் ஐந்து தூண்களும்தான் குறைந்தபட்சமாக எதிர் பார்க்கப்படும் வழிபாடுகள்: இறைவனைத் திருப்திப்படுத்தும் நோக் கோடு செய்யப்படும் எந்தவொரு அனுமதிக்கப்பட்ட செயற்பாடும் வழிபாடே. தர்ம காரியங்களை எவ்வித வரையறையுமின்றிச் செய்ய முடியும். வழியில் சந்திக்கும் ஒருவரை புன்னகையோடு எதிர் கொள்வது அல்லது பாதையிலிருக்கும் தீங்குவிளைவிக்கக்கூடிய பொருளொன்றை அப்புறப்படுத்துவது போன்ற சிறிய விடயங்களும் இதிலடங்கும். இவ்விரண்டு செயல்களையும் இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் விசுவாசிகளுக்குக் கட்டளையிட்டுள்ளார்கள். நடை முறையில், ஒருவருடைய எண்ணத்தைப் பொறுத்து எந்தவொரு அனு மதிக்கப்பட்ட செயலும் ஒரு வழிபாடாக அமையலாம்.

**பிரகடனம் (சாட்சியம் கூறல்):** ‘‘அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனது திருத் தூதராவார்’’ என்ற எளிய கூற்றே இஸ்லாத்துக்கு திறவுகோலாக இருக்கிறது. இஸ்லாத்தைப் புதிதாக தழுவுகிறவர்கள் இரு சாட்சிகளின் முன்னிலையில் இதனை உளத்தூய்மையுடன் கூறுதல் வேண்டும். இந்தப் பிரகடனம் தொழுகைக்கான அழைப்பில் (அதான்) உள் ளடங்கியிருப்பதோடு எல்லாத் தொழுகையின் போதும் மீட்டப்படுகிறது.

எனினும் இது வெறும் வார்த்தைப் பிரமாணமல்ல. ஒரே இறைவனை உங்கள் இறைவனாக ஏற்றுக்கொள்வதாக நீங்கள் பிரகடனம் செய்யும் போது உங்களது வாழ்க்கையை வடிவமைத்து வழிகாட்டுபவனாக அவனை நீங்கள் எடுத்துக்கொள்கிறீர்கள் என்பதே பொருளாகும். இதன்படி மனிதர்கள், பொருட்கள், உள நிலைமைகள், ஆசைகள் போன்ற எதன் செல்வாக்கிற்கும் நீங்கள் கீழ்ப்படிய மாட்டீர்கள். முஹம்மத் (ஸல்) அவர்களை இறைவனின் தூதராக ஏற்றுக்கொண்ட ஒருவர் அன்னாரது அறிவுறுத்தல்களையும் போதனைகளையும் கடைப்பிடிப்பதாக வாக்குறுதி அளிக்கிறீர்கள். அத்தோடு அப்போதனைகள் இறைவனிடமிருந்து வந்தவை என்பதையும் ஒப்புக்கொள்கிறீர்கள். “இறைவனைத் தவிர வேறு நாயன் இல்லை. முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனது திருத்தூதர் ஆவார்” என்ற பிரகடனத்தின் மிக ஆழமான விளைவுகள் பற்றிய இஸ்லாமிய சட்டவியல் இலக்கியத் துறைகளில் காலத்துக்குக் காலம் நீண்ட நூல்கள் எழுதப்பட்டுள்ளன.

**தொழுகை (ஸலாஹ்):** இஸ்லாத்தில் காணப்படும் தொழுகை தனித்துவமானது. பிரார்த்தனை என்ற பொதுக் கருத்திலிருந்து அது ஓரளவு வேறுபடுகின்றது. எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் உங்கள் உணர்வுகளை இறைவனோடு பகிர்ந்துகொண்டு அவனது வழிகாட்டலையும், உதவியையும், மன்னிப்பையும் வேண்டுவதுதான் பொதுவாக பிரார்த்தனை என்பது. இதனை குர்ஆன் விதித்துள்ளதோடு ஏனைய சமயங்களும் சிபாரிசு செய்துள்ளன. இஸ்லாமிய தொழுகை விசேட வடிவத்தையும் உள்ளடக்கத்தையும் கொண்டது. அதில் உடலும் ஆன்மாவும் ஒருங்கிணைந்து செயற்படுகின்றன. அது தினமும் ஐந்து வேளைகள் - அதிகாலையில், பிற்பகலின் ஆரம்பத்தில், பிந்திய பிற்பகலில், சூரியனின் மறைவின் பின்னர், நன்கு இருட்டிய பின்னர் - நிறைவேற்றப்படுகிறது.

தொழுகையை வீடு, பள்ளிவாயல், மைதானம், வேலைத்தளம் போன்ற எந்தவொரு தூய்மையான இடத்திலும் நிறைவேற்றலாம். அது தனியாகவோ கூட்டாகவோ நிகழ்த்தப்படமுடியும். கூட்டுத் தொழுகையில் முஸ்லிம் ஆண்கள் மாத்திரமின்றி பெண்களும் கலந்துகொள்ளலாம். அவ்வேளையில் ஆண்களில் ஒருவர் இமாமாக (தலைவராக) நின்று தொழுகையை வழிநடாத்துவர். ஐவேளை தொழுகைக்கு சில நிமிடங்கள் மாத்திரமே பிடிக்கும். வெள்ளிக்கிழமைகளில் நடக்கும் நண்பகல் தொழுகை மாத்திரம் கட்டாய கூட்டுத்தொழுகையாக இருக்கிறது. அது பள்ளிவாயிலிலே நடாத்தப்படுவதோடு அதற்கு முன்பாக ஒரு போதனையும் (குத்பா) நிகழ்த்தப்படும். தொழுகைக்கு

இமாமாக இருப்பவர் ஒரு மதகுருவல்ல. எல்லாத் தொழுகைகளையும் ஒருவரே தான் வழிநடாத்தவேண்டும் என்பதில்லை. எனினும் அதற்கு உரியவரைத் தெரிவுசெய்யும் போது அவரது அறிவு, குர்ஆன் மற்றும் மார்க்க விடயங்கள் பற்றிய புலமை என்பன கருத்தில்கொள்ளப்படும். (எனவே வியாபாரிகள், காரியாலய உத்தியோகத்தர்கள், வைத் தியர்கள், ஆசிரியர்கள் போன்றோரும்கூட இப்பொறுப்பை நிறை வேற்றலாம்)

தொழுகையை நிறைவேற்றுவதற்கு ஒருவர் சுத்தமாக இருத்தல் வேண்டும். இதற்காக அவர் வுழூ என்னும் சுத்திகரிப்பைச் செய்து கொள்ளவேண்டும். கைகள், வாய், நாசித்துவாரங்கள், முகம், முன்னங் கைகள் (முழங்கை வரை) பாதங்கள் என்பவற்றை நீரால் சுத்தம் செய்வதோடு தலையையும் காதுகளையும் ஈரக்கைகளினால் தடவிக் கொள்ளுதல் இதிலடங்கும். வுழுவை ஒரு தடவை செய்தால் ஒருவர் பலதடவைகள் அதனோடு தொழமுடியும். எனினும் ஒருவர் நித்திரை கொண்டால் அல்லது சிறுநீர், மலம் அல்லது வாயு வெளியேற்றம் நிகழ்ந்தால் மீண்டும் வுழூ செய்துகொள்ள வேண்டும். உடலுறவு கொண்டால் முழுமையான குளிப்புத் தேவைப்படும். மாதப்போக்கு மற்றும் பிரசவத்துக்குப் பிந்திய போக்கு இருக்கும் போது பெண்கள் தொழுகையிலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளனர். அவை நின்ற பின்னர் அவர்கள் குளித்துக் கொள்ளவேண்டும். விந்து வெளியேற்றம் நிகழ்ந் தால் ஆண்களும் இவ்வாறு குளிக்கவேண்டும். எனினும் வுழுவுடனோ, வுழுவின்றியோ எவரும் தனிப்பட்ட முறையில் இறைவனிடம் பிரார்த் தனைகள் செய்துகொள்ள முடியும்.

ஒவ்வொரு தொழுகையும் இறைவனுடன் உரையாடுவதாக கஃபாவின் திசையை நோக்கி நிறைவேற்றப்படும். (கஃபா என்பது குலத் தந்தை இப்றாஹீமும் அவரது மகன் இஸ்மாயீலும் ஒரே இறைவனை வணங்குவதற்காக கட்டிய ஆலயம். இது அமைந்த பகுதிதான் பிற்காலத்தில் அரேபியாவின் மக்கா நகராக மாறியது) மக்காவிலுள்ள கஃபாவைச் சுற்றி மாத்திரம்தான் முஸ்லிம்கள் வட்ட வடிவில் நின்று தொழுவார்கள். உலகம் முழுவதிலும் அவர்கள் இடைவிடாது வரிசையாக நின்று மக்காவை நோக்கியவாறு தொழு கிறார்கள். பொதுவாக பெண்கள் பின்வரிசைகளில்தான் தொழு வார்கள். இது மார்க்கக் கட்டளையல்ல. பதிலாக ஆண்கள் பின்னால் இருக்கும் போது குனிதலும் சிரம்பணிதலும் போன்ற அசைவுகளில் ஈடுபடுவது பெண்களுக்குச் சங்கடத்தை ஏற்படுத்தும் என்பதே கார ணம்.

‘அல்லாஹு அக்பர்’ (இறைவன் மிகப் பெரியவன்) என்ற வார்த்தைகளைக் கூறியவண்ணம் தொழுகை தொடங்கும். இதன்படி தொழுபவர் முழு உலகையும் புறந்தள்ளிவிட்டு இறைவனை நோக்கிப் பேசுகிறார். ஒவ்வொரு தொழுகையிலும் அவசியம் இருக்கவேண்டிய ஓர் அம்சம்தான் குர்ஆனின் ஆரம்ப அத்தியாயத்தை ஓதுவது. அது பின்வருமாறு: *‘‘அனைத்துப் புகழும் அகிலத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே உரியது. அவன் அளவற்ற அருளாளன். மிகக் கிருபையுடையவன். அவனே (நியாயத்) தீர்ப்புநாளின் அதிபதி. (எங்கள் இரட்சகா!) உன்னையே நாங்கள் வணங்குகிறோம். உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம். நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக. எவர்களின் மீது நீ அருள்புரிந்தாயோ அத்தகையோரின் வழியில். அது உன் கோபத்துக்குள்ளானவர்களினதும் வழிகெட்டவர்களினதும் வழியுமல்ல.’’ (1:1-7)* தொழுகையின் மீதிப் பகுதியில் குர்ஆனிலிருந்து மேலதிகப் பகுதி களை ஓதுவதோடு, குனிதல், இறைவனுக்கு சிரம்பணிதல், இடையில் ‘‘மகத்தான எனது இறைவனை துதிக்கிறேன்’’, ‘‘உயர்வான எனது இரட்சகனைத் துதிக்கிறேன்’’, ‘‘அல்லாஹ் தனக்கு நன்றிபாராட்டுபவர்களுக்குச் செவிமடுக்கின்றான்’’ போன்ற வாக்கியங்களைக் கூறுதலும் இடம்பெறும். இருப்பு நிலையில் தொழுகை முடிவடையும். அந்நிலையில் சாட்சியம் கூறும் பிரகடனத்தை உறுதிசெய்தல், இறை தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் இப்றாஹீம், அவரது குடும்பத்தினர் அவரைப் பின்பற்றியவர்கள் ஆகியோர் மீதும் இறைவனின் சாந்தியையும் அருட்கொடைகளையும் வேண்டுதல் என்பன இடம்பெறும்.

கட்டாயமான தொழுகையும் சுயமாகத் தொழும் தொழுகைகளும் அனுபவிக்கப்படவேண்டிய உன்னதமான ஆன்மீகப் பொக்கிஷங்களாகும். தொழுகை உள்ளத்தில் சாந்தியையும், தூய்மையையும் அமைதியையும் தூண்டிவிடுவதோடு இறைவனுடனான நெருக்க உணர்வொன்றை இடையறாது ஊட்டிவிடுகிறது. அன்றாட வாழ்க்கையின் அமளிதுமளிகளை அது வியக்கத்தக்க அளவுக்கு குறைத்து மனதைச் சாந்தப்படுத்துகிறது. அதிகாலையில் ஆரம்பித்து தினமும் இடைவிட்டு ஐந்து வேளைகள் தொழுவதனால் வழிபாட்டாளர்களின் நன்னிலையை ஆரோக்கியமான மட்டத்தில் பேண உதவுகிறது. அவர்களுடைய உள்ளத்தில் குறும்புத்தனமான கெட்ட எண்ணங்களுக்கோ செயல்களுக்கோ அவகாசம் கிடைப்பதில்லை.

**ஏழைவரி (ஸகாத்):** பணத்தை தர்மமாகச் செலவு செய்வது பெரிதும் போற்றப்படக்கூடியது. எனவே முஸ்லிம்கள் தங்களால்

முடிந்த அளவுக்கு அவ்வாறு செலவு செய்யுமாறு ஊக்குவிக்கப்படு கின்றனர். அதற்கு எல்லை வகுக்கப்படவில்லை. எனினும் இஸ் லாத்தின் மூன்றாவது தூணான ஸகாத் வித்தியாசமானது. ஏனெனில் அது கட்டாயமானது. சுய ஆர்வத்துக்குரியதல்ல. அத்தோடு அது ஒரு குறிப்பிட்ட கணிப்பீட்டின்படி வழங்கப்படுகிறது. பொதுவான நியமங்களின்படி ஒருவருடைய அடிப்படைத் தேவைகளும் செலவு களும் போக மேலதிகமான தொகை ஒருவருட காலத்துக்குக் கையிருப்பில் இருந்தால் அது நூற்றுக்கு இரண்டரை வீதம் ஸகாத் கொடுத்துத் தூய்மையாக்கப்படல் வேண்டும். எனவே பயன்படுத்தப் படாமல் தேக்கிவைக்கப்படும் பணம் சுமார் நாற்பது ஆண்டுகளில் முற்றாகவே கரைந்துபோகச் செய்யும் வகையில் தண்டிக்கப்படுகிறது. இது பணத்தைப் பயன்படுத்துவதன் மூலம் பொது நன்மைக்கு உதவ வழிசெய்கிறது. பணத்தைப் போலவே வேறு வகையான வருமா னங்களும் இலாபங்களும் அவற்றுக்குரிய அளவுக் கணிப்பீடுகளைக் கொண்டுள்ளன. கைத்தொழில், விவசாயம், மிருகவளர்ப்பு, வீடு, நிலங்கள் போன்றவற்றிலிருந்து கிடைக்கும் வருமானங்களும் இதிலடங்கும். இதுபற்றிய விபரங்களை விசேட உசாத்துணைகளில் காணலாம்.

ஸகாத் என்பது பணக்காரரின் செல்வத்தில் ஏழைகளுக்கு இருக்கும் உரிமையாகும். இது விருப்பத்தேர்வோ தாராளத் தன்மை யோ அல்ல. இஸ்லாமிய அரசொன்றில் அது அரசாங்கத்தினால் சேகரிக்கப்பட்டு, வரவுசெலவுக்குரிய பிரதான மூலமாக அமைகிறது. சட்டப்படி அறவிடப்படும் ஏனைய வரிகளால் தேவைக்கேற்ப இது குறைநிரப்புச் செய்யப்படும். சேகரிக்கப்பட்ட ஸகாத் இஸ்லாமிய தொண்டர் நிறுவனங்களுக்கு வழங்கப்படலாம். அவை அதன் நியாய மான பகிர்வுக்கு பொறுப்பாக இருக்கும். அல்லது இஸ்லாமிய ஆட்சி செயற்படாத, தேவையுள்ள பிரதேசங்களுக்கு அது நேரடியாக வழங் கப்படலாம். (உதாரணமாக உலகெங்கும் சிறுபான்மையினராக அல்லது சமய சார்பற்ற ஆட்சிகளின் கீழ் வாழும் முஸ்லிம்களுக்கு வழங்கப்படலாம்) தேவையுள்ள முஸ்லிம் அல்லாதவர்களும் இதனால் பயன்பெறமுடியும்.

சமுதாயத்தின் அங்கத்தவர்களுக்கிடையே காணப்படுகின்ற முறிக்கப்படமுடியாத பிணைப்பினை ஸகாத் பிரதிபலிக்கின்றது. ''எமது சமுதாயத்தின் அங்கத்தவர்கள் ஓர் உடலின் உறுப்புக்களைப் போன்ற வர்கள். அவற்றில் ஒன்று பாதிக்கப்பட்டால் அடுத்தவை அனைத்தும் அதற்காக ஒன்றுதிரளும்'' என இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள்

விவரித்தார்கள். அறபு மொழியிலே 'ஸகாஹ்' என்றால் தூய்மைப் படுத்தல் என்று பொருள். வறியவர்களுக்குரிய பங்கினை அவர்களுக்கு வழங்குவதன் மூலம் ஒருவர் தனது செல்வத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்கிறார் என்பதே இதன் கருத்தாகும். ஸகாத் வழங்குவது ஒரு முதலீடேயன்றி செலவினம் அல்ல என்பதை அதனைக் கொடுக்கும் முஸ்லிம்கள் உணர்ந்துகொள்கின்றனர்.

**ரமழானில் நோன்பிருத்தல் (ஸவ்ம்):** இஸ்லாமிய சந்திரக் காலண்டரில் ஒரு மாதமாக ரமழான் வருகின்றது. இக்காலண்டர் கிரகரியின் காலண்டரைவிட பதினொரு நாட்களால் குறுகியது. எனவே ஒவ்வொரு வருடமும் ரமழான் பதினொரு நாட்கள் முந்தி வருகிறது. இதன் காரணமாக ஒருவர் தன் வாழ்நாளில் பல்வேறு பருவகாலங் களிலும் காலநிலைகளிலும் நோன்பிருக்க வாய்ப்புக்கிடைக்கிறது. ரமழானின் ஒவ்வொரு நாளிலும் உதயத்திலிருந்து அஸ்தமனம் வரை முஸ்லிம்கள் எவ்வித உணவோ பானமோ (நீர் உட்பட) உட்கொள் வதில்லை. பகல் வேளைகளில் பாலுறவும் தடுக்கப்பட்டுள்ளது. ஒரு வர் தனது நோன்பினைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டுமாயின் கோபம் போன்ற எந்த விரும்பத்தகாத நடத்தையையும் வெளிக்காட் டக்கூடாது.

ரமழான் பட்டினி கிடக்கும் ஒரு மாதமல்ல. ஏனெனில் போஷ னையும் நீரும் இரவில் நன்கு கிடைக்கின்றன. எனினும் ஒருவர் தனது முன்னிரவு மற்றும் உதயத்துக்கு முந்திய உணவுகளை உட் கொள்வதில் மிதமாக நடந்துகொள்ள வேண்டுமெனச் சிபாரிசு செய் யப்பட்டுள்ளது. நோயாளிகள், சிறுவர்கள், பாலூட்டும் தாய்மார்கள், முதியவர்கள் போன்றோர் நோன்பிலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளனர்.

ஒருவர் தனது அன்றாடப் பழக்கவழக்கங்களைக் கட்டுப்படுத்திப் பசியையும் தாகத்தையும் பொறுத்தக்கொள்வதனால், சுயகட்டுப்பாடு, திடசித்தம் என்பவற்றில் முதல் தரமான பயிற்சியை ரமழான் வழங்கு கிறது. (சுயகட்டுப்பாடு இல்லாமற்போனால் மனித குலத்திற்கு என்ன நடக்குமோ?) ஒருவர் தனது லௌகீகத் தேவைகளைக் கடந்து ஆன்மீகத்தைப் போற்றி வளர்ப்பதனால் நோன்பிருத்தல் அவருக்கு உள்ளத்தை வளப்படுத்தும் அனுபவமொன்றை வழங்குகின்றது. ஆன்மீகரீதியான மறுமலர்ச்சிக்கும் மீள்உயிர்ப்பிப்புக்கும் வழிவகுக்கும் களமொன்றாக இம்மாதம் விளங்குகிறது. இது வருடத்தின் மீதிப் பகுதிக்காகத் தனது பட்டரிகளை மின்னேற்றிக்கொள்வது போன்றதே. அதிகரித்த வணக்க வழிபாடுகளும் கொடையும் இம்மாதத்தின் சிறப் பியல்புகளாகும். இதன் முடிவில் முஸ்லிம்கள் தமது ஈத் பெருநாட்

களில் ஒன்றைக் கொண்டாடுவார்கள் - அடுத்தது புனித யாத்திரைக் காலத்தின் முடிவில் அனுஷ்டிக்கப்படுகிறது. இந்நாளில் காலையில் விசேட கூட்டுத்தொழுகையொன்றும் குடும்பத்தினர், நண்பர்களின் பெருநாள் ஒன்றுகூடல்களும் இடம்பெறுகின்றன.

**புனித யாத்திரை (ஹஜ்)**: இப்றாஹீமின் ஓரிறைக்கொள்கைப் பணியோடு இஸ்லாம் தன்னைப் பெருமளவில் இணைத்துக் கொண்டிருக்கிறது. அதன் ஐந்தாவது தூணான ஹஜ் குலத்தந்தை இப்றாஹீம் (அலை) இறைவனின் ஆணைக்கு அடிபணிந்ததை மரபுரீதியாக நினைவுகூரும் நிகழ்வேயன்றி வேறில்லை. இறைதூதர் இப்றாஹீம் (அலை) அவர்கள் தனது வாழ்க்கையில் சந்தித்த பல்வேறு சோதனைகளின் போதும் எவ்வித மாற்றமுமின்றி இறைவனுக்குக் கீழ்ப்படிந்தார். அவ்வாறான ஒரு சோதனையின் போது தனது மனைவி ஹாஜராவையும் அப்போதிருந்த ஒரே மகன் இஸ்மாயீலையும் அழைத்துக்கொண்டு பாழடைந்த பிரதேசமான தென்மேற்கு அரேபியாவுக்குச் செல்லுமாறு இறைவனால் ஆணையிடப்பட்டார். இறைவன் மீது நம்பிக்கை வைத்து இப்றாஹீம் (அலை) தனது மனைவியையும் மகனையும் தற்போதைய மக்கா இருக்கின்ற இடத்தில் தனியாக விட்டுச் சென்றார். அவர் பிரிந்து சென்ற பின் தாம் கொண்டுவந்திருந்த நீரும் ஆகாரமும் தீர்ந்து போகவே பீதியுடனும் கவலையுடனும் இஸ்மாயீலின் தாயார் நீர் தேடி அலையவேண்டி ஏற்பட்டது. அப்போது எதிர்ப்பாராத விதமாகவும் அற்புதமான முறையிலும் ஸம்ஸம் என்னும் கிணறு ஊற்றெடுத்துக் கிளம்பியது. காலத்துக்குக் காலம் அவர்களைச் சந்திக்க வந்த இப்றாஹீம்(அலை) அவர்களுக்கு தனது மகனோடு சேர்ந்து இறைவனை வணங்குவதற்கான முதலாவது மஸ்ஜிதைக் கட்டுமாறு இறைவன் பணித்தான். அத்தோடு வணங்குவதற்காக அந்த மஸ்ஜிதுக்கு யாத்திரை (ஹஜ்) மேற்கொள்ளும்படி விசுவாசிகளுக்கு அழைப்பு விடுக்குமாறும் இறைவன் அறிவுறுத்தினான். தனது சொந்த மகனை அறுத்துப் பலிகொடுக்குமாறு வந்த தெய்வீகக் கட்டளையே நபி இப்றாஹீமுக்கு ஏற்பட்ட மிகக் கடுமையான சோதனையாகும். இறைவனின் கட்டளையை நிறைவேற்றுமாறு அந்த மகன் வழங்கிய ஊக்குவிப்பின் விளைவாக அவர் இறைவனுக்குக் கீழ்ப்படிய முனைந்தார். அவரது விசுவாசத்தின் உண்மையான தன்மையைச் சோதித்தறிந்த இறைவன் அவரது மகனைத் தப்பவைத்ததோடு அவருக்குப் பதிலீடாக ஒரு செம்மறியாட்டை அனுப்பிவைத்தான்.

எனவே இந்த யாத்திரை இப்றாஹீம், இஸ்மாயீல் ஆகியோருடன் ஆரம்பித்து அதுமுதல் இடையறாது இடம்பெற்று வருகின்றது. எனினும்

சில சந்ததிகளுக்குப் பின்னர் மக்கள் பல தெய்வ வணக்கத்தில் ஈடுபடத்தொடங்கியதால் துரதிஷ்டவசமாக இறைவனை வணங்குவதற் குரிய ஆலயம் சிலைகளின் இல்லமாக மாறியது. பல தெய்வ வழி பாட்டில் ஈடுபட்டிருந்த ஒவ்வொரு அராபிய கோத்திரத்தவரும் தமக் கென ஒரு சிலையை எடுத்து அதற்கொரு பெயரையும் வைத்து கஃ பாவினுள் வைத்தனர். யாத்திரைக் காலம் தொடர்ந்து அனுஷ்டிக் கப்பட்டாலும் அது குடித்துக் கும்மாளமடித்து தீய செயல்களில் ஈடுபடும் காலமாக மாறியது. நிர்வாணமாக, கரகோஷம் செய்துகொண்டும் பாடிக்கொண்டும் குழல் ஊதிக்கொண்டும் கஃபாவை வலம் வருவது போன்ற புதிய சடங்குகள் புகுத்தப்பட்டிருந்தன. இவ்வாறு கலப்படம் செய்யப்பட்ட யாத்திரையானது மக்காவாசிகளுக்குப் பெரிய பண வருவாயைக் கொடுத்தது. அவர்களுடைய பொருளாதாரம் இந்த யாத்திரைக் காலத்திலும், வாணிபத்துக்காக வருடத்துக்கு இருமுறை கிழக்கு (ஆபிரிக்காவுக்கும் ஆசியாவுக்கும்) மேற்குத் (சிரியாவுக்கும் அதற்கப்பால் பைசாந்தியப் பேரரசு வரை) திசைகளை நோக்கிச் செல்லும் குழுப் பிரயாணங்களிலும் தங்கியிருந்தது. கடவுள்கள் சார்பாகப் பேசுவதற்கும் அவற்றுக்காக வழங்கப்படும் காணிக்கைகளை ஏற்பதற்கும் போலி மதகுருக் கூட்டமொன்றும் உருவாகியிருந்தது.

இப்றாஹீம் (அலை) அவர்களின் வழித்தோன்றல்களில் (இஸ்மாயீலின் வழி வந்த) இந்த பிரிவினரிடையே காணப்பட்ட இந்நிலைமை ஆயிரக்கணக்கான வருடங்களாகத் தொடர்ந்து நீடித்தது. பின்னர் இஸ்மாயீலின் சந்ததியிலிருந்து வந்த பலம் வாய்ந்த குறைஷிக் கோத்திரத்திலே கி.வ. 570இல் முஹம்மத் (ஸல்) அவர்கள் பிறந்தார்கள். அவர் பிறப்பதற்கு முன்பே அவரது தந்தை இறந்து விட்டார். அவரது பிள்ளைப் பருவத்திலே தாயும் காலமானார். முஹம்மத் (ஸல்) தனது பாட்டனாரால் வளர்க்கப்பட்டார். அவரது மறைவின் பின்பு அவரது சிறிய தந்தை அவரை வளர்த்தார். அவர் வளர்ந்து வந்தபோது சமுதாயத்தின் மரியாதைக்கும் போற்றுதலுக்கும் இலக்கானார். இளவயதிலேயே அவர் 'நம்பிக்கைக்குரியவர்' என்ற நற்பெயரைப் பெற்றுக்கொண்டார். தனது இருபத்தி ஐந்தாவது வயதி லே கதீஜா என்னும் செல்வந்த விதவையை மணந்துகொண்டார். கதீஜாவின் வணிகக் குழுவிற்கு முகாமையாளராக அவர் பணியாற்றி வந்திருந்ததால் அவரது நற்குணங்களை கதீஜா மதித்தார். கதீஜா அவரை விட பதினைந்து வருடங்கள் மூத்தவராக இருந்தாலும் அவர்களிருவரும் மிகச் சந்தோஷமாக வாழ்ந்தனர். இருபத்தியெட்டு வருடங்களுக்குப் பின்னர் கதீஜா இறக்கும் வரை அவர் வேறெவ ரையும் மணக்கவில்லை.

தனது கோத்திரத்தவரின் சிலை வணக்கங்களிலோ இஸ்லாத்துக்கு முந்திய (ஜாஹிலியா என்னும்) காலத்தில் அராபியரின் வாழ்க்கையில் வேரூன்றியிருந்த தவறான செயல்களிலோ முஹம்மத் (ஸல்) பங்கேற்கவில்லை. மக்காவுக்கு அருகாமையிலிருந்த மலையின் உச்சியிலிருந்த குகைக்குச் சென்று தியானத்தில் ஈடுபடும் வழக்கம் அவரிடம் இருந்தது. அப்படியான விஜயமொன்றின் போது வானவர் ஜிப்ரீல் அவர் முன் தோன்றி இறைதூதுத்துவம் என்ற தெய்வீகப் பணியை அவருக்கு ஒப்படைத்தார். அத்தோடு குர்ஆனையும் முதன்முதலாக அவருக்கு வெளிப்படுத்தினார். அவ்வாக்கியங்கள் பின்வருமாறு அமைந்தன: *''ஓதுவீராக! உம்முடைய இரட்சகனின் பெயரைக்கொண்டு (ஓதுவீராக!) அவன் எத்தகையவனென்றால் (படைப்பினங்கள் அனைத்தையும் அவனே) படைத்தான். மனிதனை இரத்தக்கட்டியிலிருந்து அவன் படைத்தான். நீர் ஓதுவீராக! மேலும் உமது இரட்சகன் மிகவும் சங்கையானவன். அவன் எத்தகையவனென்றால், எழுதுகோலைக் கொண்டு கற்றுக்கொடுத்தான். மனிதனுக்கு அவன் அறியாதவற்றையெல்லாம் கற்றுக்கொடுத்தான்.'' (96:1-5)* அப்போது மாதம் ரமழானாகவும் அந்த இரவு 'மகத்தான இரவாகவும்' (அரபியில் லைலதுல் கத்ர்) இருந்தன. இந்நிகழ்வினால் பெருமளவு பீதியும் அதிர்ச்சியுமுற்ற முஹம்மத் (ஸல்) அவர்கள் நடுநடுங்கியவாறு வீடு சென்றார். அங்கு அவரை அமைதிப்படுத்தி ஆறுதல் கூறிய கதீஜா பின்வருமாறு கூறினார்: ''கதீஜாவின் ஆன்மா எவன் கையில் இருக்கின்றதோ அவன் மீது சத்தியமாக, இந்த மக்களுக்கு இறைதூதராக நீங்கள் இருப்பீர்கள் என நான் நம்புகிறேன். நீங்கள் உங்கள் உறவினருக்கு கருணை காட்டுகிறீர்கள், விருந்தினரைத் தாராளமாக உபசரிக்கிறீர்கள், வறியவர்களுக்கு உதவுகிறீர்கள், உண்மையே பேசுகிறீர்கள். இறைவன் ஒருபோதும் உங்களைக் கைவிடமாட்டான்.''

முஹம்மத் (ஸல்) அவர்களின் தூதுத்துவக் காலம் முழுவதும் வானவர் மீண்டும் மீண்டும் வருகை தந்தார். அன்னாரின் பணி உண்மையை வெளிப்படுத்தி அவரது மக்களை மீண்டும் இப்றாஹீமின் தூய ஓரிறைக் கோட்பாட்டை நோக்கிச் செலுத்துவதற்குரிய திருப்பமாக அமைந்தது. எனினும், மக்காவின் செல்வமும் பலமும் மிக்கவர்களுக்கும் சிலை வணக்க மதகுருக்களுக்கும் இடையிலான கூட்டுக்கு அது பெரும் அச்சுறுத்தலாக அமைந்தது. ஏனெனில் அன்றிருந்த நிலைமையில்தான் அவர்களின் வாழ்வாதாரமே தங்கியிருந்தது. பதின்மூன்று வருடங்களாக முஹம்மத் (ஸல்) அவர்களும் அவரைப்

பின்பற்றியவர்களும் துன்புறுத்தப்பட்டார்கள். அவர்கள் மதீனாவுக்குக் குடிபெயர்ந்து தங்களைப் பாதுகாத்துக்கொள்ளவும் தங்கள் சமுதாயத்தை வலுப்படுத்திக்கொள்ளவும் (குர்ஆனினால்) அனுமதிக் கப்படும் வரை இத்துன்புறுத்தல் தொடர்ந்தது. இறுதியில் முஹம்மத் (ஸல்) அவர்களின் படையினர் மக்காவைக் கைப்பற்றியதோடு, முஸ் லிம்களுக்கும் இஸ்லாத்துக்கும் எதிராகப் போராடியவர்களுக்குப் பொது மன்னிப்பு வழங்கப்பட்டது. அவர்கள் சிலைகளை உடைத் தெறிந்து இப்றாஹீமின் க.்.பாவை பல்தெய்வ வழிபாட்டிலிருந்து தூய் மைப்படுத்தியதோடு மார்க்கத்தை அதன் தூய்மையான ஆரம்ப நிலைக்குத் திருத்தியமைத்தனர். இதன் பின் புனித யாத்திரை அதற் கேயுரிய காரணத்துக்காக இடம்பெறலாயிற்று. இஸ்லாத்தின் ஐந் தாவது தூணானது உடலில் வலிமையும், போதிய பணவசதியும் உள்ள ஒவ்வொரு முஸ்லிம் ஆண், பெண்ணின் மீது ஆயுளில் ஒரு தடவை கட்டாயமாக்கப்பட்டுள்ளது.

மேலே தரப்பட்ட ஓரளவு நீண்ட விளக்கத்தில் கூறப்பட்டுள்ளது போல் நன்கறியப்பட்ட உண்மைகள் இருந்தபோதிலும், ஹஜ் யாத் திரையை இஸ்லாம் உள்வாங்கிக்கொண்ட பல்தெய்வக் கொள்கையா ளரின் சடங்கொன்றாக விவரிக்கும் ‘நிபுணர்களும் அறிஞர்களும்’ இன்றும் இருக்கத்தான் செய்கிறார்கள். முஸ்லிம்களின் உள்ளங்களை நோவிப்பதற்கு இதுவொன்று போதாதா?

சந்திரக் காலண்டரின் பன்னிரண்டாம் மாதத்தில் புனித யாத் திரைக்காலம் வருகின்றது. அது ஹஜ்ஜுடைய மாதம் (துல் ஹஜ்ஜா) என அழைக்கப்படுகின்றது. அது ஆபிரஹாமிய நிகழ்வு என்பதனால் இஸ்லாம் உருவான போது அது ஏற்கனவே அறியப்பட்டதாக இருந் தது. ஹஜ்ஜின் போது பெண்கள் முகம் மற்றும் கைகள் தவிர்த்து முழு உடலையும் மூடக்கூடிய சாதாரண உடைகளை அணிவார்கள். ஆண்கள் தைக்கப்படாத வெள்ளைத் துணித்துண்டுகள் இரண்டினை அணிதல் வேண்டும். செருப்புகள், பொக்கட் வைத்த இடுப்பு வார் என்பன தவிர்ந்த வேறெந்தத் துணிகளையும் அணியக்கூடாது. அனை வரும் இவ்வாறு அணிவதால் யாத்திரிகர்கள் அனைவரும் எவ்வித வகுப்பு வேறுபாடுமின்றி ஒரேவிதமாகத் தோற்றமளிப்பர். நிறம், மொழி, இனம், தேசம், கல்வித்தரம் போன்ற எல்லா வேறுபாடுகளையும் கடந்து, முழுமையான சகோதரத்துவ வாஞ்சையோடு அவர்கள் ஒருவரோடு ஒருவர் பழகுவதோடு முடிந்தபோதெல்லாம் ஒருவருக் கொருவர் உதவிக் கொள்வார்கள். ஹஜ்ஜின் போது மனிதத்துவத்தின் நல்ல தன்மைகள் மாத்திரமே வெளிப்படுகின்றன. அத்தோடு மனித

குலம் என்பது ஒரே இறைவனை வணங்கும் ஒரே குடும்பமே என்ற நம்பிக்கையின் தூய்மையும் புலப்படும். எந்தவிதத் தரப்பிரிப்பும் அங்கு இருக்காது. குடும்பங்களும் குழுக்களும் மில்லியன் கணக்கான சனக்கூட்டத்தினுள் தவறிப்போகாமல் இருப்பதற்காக நெருக்கமாக ஒன்றுசேர்ந்திருப்பர்.

ஹஜ் சடங்குகளில் இப்றாஹீமின் மஸ்ஜிதில் தொழுதல், கஃ பாவை வலம் வருதல், ஸபா, மர்வாக் குன்றுகளுக்கிடையில் பல தடவைகள் நடத்தல் (நபி இஸ்மாயீல் அவர்களின் தாயார் தனது மகனுக்காகத் தண்ணீர் தேடி பரபரப்புடன் ஓடிய இடம் இதுதான்), அறபா மலை அடிவாரத்தில் ஒன்றுகூடித் தொழுதலும் பிரார்த்தித்தலும், இப்றாஹீம் தனது மகனை அறுப்பதைத் தடுப்பதற்கு சைத்தான் முயன்ற மூன்று இடங்களிலும் தரித்து அங்குள்ள மூன்று தூண் களுக்கும் கல் எறிதல் (சைத்தானின் தூண்டுதலை வெற்றிகொள் வதை இது குறிப்பால் உணர்த்துகிறது) என்பன அடங்கும். ஹஜ்ஜின் முக்கிய அம்சங்களாக ஈதுல் அழ்ஹா (தியாகத் திருநாள்) தினத்தில் கூட்டாகத் தொழுதலும் போதனைச் சொற்பொழிவைக் கேட்பதும் அமைகின்றன. அதைத் தொடர்ந்து இப்றாஹீமின் சம்பிரதாயப்படி ஒரு செம்மறியாடு அறுத்துப் பலியிடப்படும். (அது ஏழைகளுக்கு அன்பளிப்பாக வழங்கப்படும். ஒரு பகுதி குடும்பத்தினரையும் நண்பர் களையும் சேரும்) ஹஜ் யாத்திரையில் கலந்துகொள்ளாத முஸ் லிம்கள் கூட்டுத்தொழுகையோடு (உபதேசம் உட்பட) பெருநாளைக் கொண்டாடுவதோடு செம்மறி ஆடொன்றையும் அறுத்துப் பலி கொடுப்பர்.

பெருநாள் விருந்தானது அனுபவித்து மகிழக்கூடிய சந்தோச மான ஒரு வைபவமாகும். ஹஜ்ஜின் போது பெருந்தொகையான மிருகங்கள் அறுக்கப்படுவதனால் அவற்றை உடனடியாக அங்கேயே பயன்படுத்தமுடியாது. எனவே அவசியமான மார்க்கத் தீர்ப்பைப் பெற்றுக் கொண்டு ஸவூதி அராபிய அதிகாரிகள் இறைச்சி பொதி செய்யும் ஆலையொன்றை நிறுவி இருக்கின்றனர். இதன் மூலம் இறைச்சி பேணிவைக்கப்பட்டு பேணிகளில் அடைக்கப்பட்டு இஸ்லாமிய உலகில் வாழும் வறியமக்களுக்கு அனுப்பிவைக்கப்படுகின்றது. குறிப் பிட்ட கால-நேர இடைவெளிக்குள் இரண்டு மில்லியனுக்குக் குறை யாத தொகை யாத்திரிகளுக்கு இடமளித்து, நிர்வகித்துப், பிரயாண வசதிகள் செய்துகொடுக்கும் அவர்களது முயற்சி பாராட்டப்படவேண் டியதே.

## இஸ்லாமிய ஒழுக்கமுறை

தவ்ராத்திலும் இன்ஜீலிலும் விதிக்கப்பட்ட தூய நிலைகளில் கிறிஸ்தவ மற்றும் யூத ஒழுக்கமுறைகளை ஒத்தனவாகவே இஸ்லாமிய ஒழுக்கங்களும் இருக்கின்றன. ஆபிரஹாமிய ஒழுக்க மரபுகளில் பிற்காலத்தில் திரிபுவாதிகளால் செய்யப்பட்டுள்ள அனர்த்தங்கள் அவற்றில் அடங்கா. நேற்றைய ஒழுக்கக்கேடுகள் இன்றைய ஒழுக்க நெறிகளாகத் தோன்றும் வகையில் இவர்கள் ஒழுக்கவிதிகளை மாற்றியமைத்துள்ளனர். ஒழுக்கக்கேடுகள் 'love', 'gay', 'relationship', 'boy/girlfriend', 'lover' என்பன போன்ற தீங்கற்ற குற்றம் காண முடியாத பெயர்களை வெளிப்பூச்சாகக் கொண்டு காணப்படுகின்றன. இவ்வாறு நல்ல பெயர்கள் முன்னர் பாவங்களாகக் கருதப்பட்டவற்றை மூடி மறைக்க (அல்லது மேலும் தூண்டிவிட) உதவும் என்பதே அவர்களின் எதிர்பார்ப்பு.

தனிப்பட்ட ரீதியில் ஒவ்வொரு பிரச்சினையையும் பற்றிக் கலந்துரையாடாமல் வாசகருக்கு நேரடியாகவே இஸ்லாமிய ஒழுங்குமுறை தொடர்பான மூலாதாரங்களை அறிமுகஞ்செய்து வைப்பதற்காக குர்ஆனிலிருந்தும் முஹம்மத் (ஸல்) அவர்களின் ஹதீஸ்களில் (கூற்றுகளில்) இருந்தும் சில விடயங்களை இப்பகுதியில் மேற்கோளாகக் காட்டுவது நல்லதென நினைத்தோம். இந்தத் தகவல்களை மேற்கத்திய வாசகர்கள் அறிந்திருக்கமாட்டார்கள். ஏனெனில் நிபுணர்கள், விசேட புலமையுள்ளவர்கள் என அழைக்கப்படுவோரின் அடுக்கடுக்கான எதிர்ப்பிரசாரத்தினால் இவற்றைவிட்டும் அவர்கள் பிரித்துவைக்கப்பட்டுள்ளனர். குர்ஆன் முஸ்லிம்களைப் பொய் உரைக்குமாறும், ஏமாற்றுமாறும் முஸ்லிம் அல்லாதோரைக் கொலை செய்யுமாறும் ஏவுகிறது என்றோ முஹம்மத் (ஸல்) அவர்கள் ஈனஇரக்கமற்ற ஒரு வில்லன், பேராசை வெறியும், காமவெறியும் சிற்றின்ப வேட்கையும் கொண்டவர் என்றோ வானொலியிலும் தொலைக்காட்சியிலும் பலதடவைகள் கூறப்படுவதை நாம் கேட்டும் கண்டும் இருக்கிறோம். இப்பொய்களை மறுத்துரைக்க நாம் முயலும் போது இவற்றுக்கான பதில்களை பிரசுரிக்கச்செய்யவோ, மன்னிப்புக்கோரலைப் பெறவோ சில வேளைகளில் முடியுமாகின்றது. எனினும் இந்தத் தவறான தகவல்களின் பரம்பல் தொடர்ந்துகொண்டே இருக்கிறது. இருந்தபோதிலும், எமது பல்வேறு முயற்சிகளின் காரணமாக அதிக அதிகமான மக்கள் இஸ்லாம் பற்றிய உண்மையை அறிந்துகொள்கின்றனர். உண்மையிலிருந்து பொய்யை வேறுபடுத்திப் பார்க்கக்கூடியவர்களின் தொகை ஓரளவேனும் அதிகரித்துவிட்டால்

இந்தக் கேடு விளைவிக்கும் முயற்சிகளுக்குச் சாவுமணி அடிக்கப்பட்டு விடும். அத்தோடு முஸ்லிம்களைத் தவறான முறையில் சித்தரிப் பதையே தொழிலாகக் கொண்டவர்களுக்கும் முடிவு கட்டப்படும்.

இஸ்லாமிய ஒழுக்கமுறையென்பது வெறுமனே செய்யவேண் டியவை, செய்யக்கூடாதவை என்பவற்றைக் கொண்ட ஒரு பட்டிய லல்ல. பூமியில் இறைவனின் பிரதிநிதி என்ற வகையில் மனிதனின் நடிபாகத்தை விளங்கி ஏற்றுக்கொள்ளக்கூடிய ஆளுமைகளை உருவாக்குவதே அதன் இலக்காக இருக்கிறது. இதன் மூலம் ஒருவர் உரிமையாளனான இறைவனின் அறிவுறுத்தற் கைநூலுக்கு இணங் கியவாறு தன் அகச்சூழலின் இயல்பையும் புறச்சூழலின் இயல்பு களையும் முகாமை செய்ய நாட்டம் கொண்டவராக மாறுவார். சில மேற்கோள்களை - எமது நினைவில் எழுந்த ஒழுங்கில் கீழே தருகின் றோம்.

**குர்ஆனை சுவைத்துப் பார்ப்போம்**

1. *இன்னும், அர்ரஹ்மானுடைய அடியார்கள் எத்தகையோரெனில், அவர்கள் பூமியில் பணிவாக நடப்பார்கள்; மூடர்கள் அவர் களுடன் (வேண்டாதவற்றைப்) பேசமுற்பட்டால், ''சாந்தி உண் டாகட்டும்'' என்று கூறிவிடுவார்கள். இன்னும் அவர்கள் எத்தகை யோரெனில், தங்கள் இரட்சகனைச் சிரம் பணிந்தவர்களாகவும், நின்ற நிலையிலும் (வழிபாட்டில்) இரவைக் கழிப்பார்கள். இன் னும் அவர்கள் ''எங்கள் இரட்சகனே! நகரகத்தின் வேதனை யை எங்களை விட்டும் நீ திருப்பிவிடுவாயாக! நிச்சயமாக அதன் வேதனை நிலையானதாகும். நிச்சயமாக அது உறை விடத்தாலும் சிறிது நேரம் தங்குமிடத்தாலும் மிகக் கெட்டது'' என்று கூறுவாார்கள். இன்னும் அவர்கள் செலவு செய்தால் வீண்விரயம் செய்யமாட்டார்கள். (ஒரேயடியாகச்) சுருக்கிக்கொள் ளவும் மாட்டார்கள். (அவர்கள் செலவு செய்வது) அவ்விரண்டு நிலைகளுக்கும் மத்தியிலிருக்கும். இன்னும் அவர்கள் அல்லாஹ்வுடன் வேறொரு நாயனை அழைக்கமாட்டார்கள். அல்லாஹ் தடுத்திருக்கும் எந்த உயிரையும் அவர் உரிமை யின்றி கொலை செய்துவிடவும் மாட்டார்கள். அவர்கள் விபச்சார மும் செய்யமாட்டார்கள். எவரேனும் இவைகளைச் செய்ய முற்பட்டால் அவர் (அதற்குரிய) தண்டனையைச் சந்திப்பார். மறுமைநாளில் அவருக்கு வேதனை இரட்டிப்பாக்கப்படும். மேலும் இழிவுபடுத்தப்பட்டவராக அதில் என்றென்றும் தங்கிவிடு*

*வார். எவர் பாவமன்னிப்புக் கோரி, விசுவாசம் கொண்டு நற்செய லும் செய்தாரோ அவரைத் தவிர; எனவே அத்தகையோரின் தீமைகளை நன்மைகளாக அல்லாஹ் மாற்றிவிடுவான். மேலும் அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும் மிகக் கிருபையுடைய வனாகவும் இருக்கின்றான். இன்னும் எவர் பாவமன்னிப்புக் கோரி, நற்கருமங்களையும் செய்கிறாரோ அவர் நிச்சயமாக முற்றிலும் அல்லாஹ்வின்பால் திரும்பிவிடுகின்றார். இன்னும் அவர்கள் பொய்ச் சாட்சியம் சொல்லமாட்டார்கள். (ஒருவேளை) வீணான காரியத்தின் பக்கம் சென்றுவிட்டால் கண்ணியமான வர்களாக (ஒதுங்கிச்) சென்றுவிடுவார்கள். இன்னும் அவர்கள் தங்கள் இரட்சகனின் வசனங்களைக் கொண்டு உபதேசிக்கப்பட் டால் செவிடர்களாவும் குருடர்களாகவும் அதன் மீது விழமாட் டார்கள். மேலும் அவர்கள் "எங்கள் இரட்சகனே! எங்கள் மனைவியர்களிடமிருந்தும் எங்கள் சந்ததிகளிலிருந்தும் எங் களுக்குக் கண்களின் குளிர்ச்சியைத் தந்தருள்வாயாக. அன்றி யும், பயபக்தியுடையவர்களுக்கு எங்களை (நல்வழியின்பால் அழைக்கும்) வழிகாட்டியாகவும் நீ ஆக்குவாயாக!" என்று (பிரார்த்தித்துக்) கூறுவார்கள். (25:63-74)*

2. *உங்கள் இரட்சகனின் மன்னிப்பின்பாலும், சுவனத்தின்பாலும் விரைந்துகொள்ளுங்கள் அதன் அகலமாகிறது வானங்களும் பூமியுமாகும். அது பயபக்தியுடையவர்களுக்காகத் தயார்செய் யப்பட்டுள்ளது. அவர்கள் எத்தகையோரென்றால் செல்வ நிலை யிலும் வறுமை நிலையிலும் செலவு செய்துகொண்டிருப்பார்கள். கோபத்தையும் அடக்கிக்கொள்ளக்கூடியவர்கள். மனிதர்களை யும் மன்னித்துவிடக்கூடியவர்கள். அல்லாஹ்வோ (இத்தகைய) நன்மை செய்வோரை நேசிக்கின்றான். இன்னும் அவர்கள் யாதொரு மானக்கேடான காரியத்தைச் செய்துவிட்டால் அல்லது தங்களுக்குத் தாங்களே அநீதமிழைத்துக்கொண்டால் (உடனே) அல்லாஹ்வை நினைவு கூர்வார்கள். இன்னும் (அவனிடமே) தங்களது பாவங்களுக்காக மன்னிக்கத் தேடு வார்கள். அல்லாஹ்வைத் தவிர குற்றங்களை மன்னிப்பவன் யார்? அவர்கள் செய்த காரியத்தை (தவறென்று) அவர்கள் அறிந்துகொண்டே (அதில்) நிலைத்திருக்கவும் மாட்டார்கள். அவர்களுடைய கூலி அவர்களுடைய இரட்சகனிடமிருந்து மன் னிப்பும் சுவனபதிகளுமாகும். இவற்றின் கீழ் ஆறுகள் ஓடிக் கொண்டிருக்கும். அவர்கள் அவற்றில் நிரந்தரமாகத் (தங்கி)*

*இருப்பவர்கள். (இத்தகு) காரியங்கள் செய்தோரின் கூலி மிகவும் நல்லது. (3:133-136)*

3. *மேலும் லுக்மான் தன் மைந்தனுக்கு உபதேசம் செய்தவராக 'என் அருமை மைந்தனே! நீ அல்லாஹ்வுக்கு இணைவைக் காதே! நிச்சயமாக இணைவைத்தல் மிகப் பெரிய அநியாய மாகும்' என்று கூறியதை நீர் நினைவுகூர்வீராக! நாம் மனித னுக்கு தன் பெற்றோர் (உடன் நல்லமுறையில் நடந்துகொள் ளும்படி) பற்றி நல்லுபதேசம் செய்தோம். அவனுடைய தாய் பலவீனத்துக்கு மேல் பலவீனம் அடைந்தவளாக அவனைச் சுமந்தாள். இன்னும் அவன் (பால் மறக்கடித்துப்) பிரிவது இரண்டு வருடங்களிலாகும். (மனிதனே!) நீ எனக்கும் உன்னுடைய பெற்றோருக்கும் நன்றி செலுத்துவாயாக! (முடிவில்) என்னிடமே (உனது) மீட்சி இருக்கிறது. எது பற்றி உனக்கு அறிவு (ஆதாரம்) இல்லையோ அதனை எனக்கு நீ இணையாக்க வேண்டும் என அவ்விருவரும் வற்புறுத்தினால் (அவ்விடயத்தில்) நீ அவ் விருவருக்கும் கீழ்ப்படிய வேண்டாம். ஆயினும் இவ்வுலகத்தில் நன்மையான காரியத்தில் நீ அவ்விருவருடனும் (அன்புடன்) உடனிருப்பாயாக! இன்னும் என்பால் திரும்பியவரின் வழியை நீ பின்பற்றுவாயாக. பின்னர், நீங்கள் (யாவரும்) என்னிடமே திரும்பிவந்து சேரவேண்டியிருக்கிறது. அப்பொழுது நீங்கள் செய்துகொண்டிருந்தவற்றைப்பற்றி நான் உங்களுக்கு அறி விப்பேன். என்னருமை மைந்தனே! நிச்சயமாக அது கடுகின் வித்தளவாக இருப்பினும் (சரி) அது ஒரு பாறைக்குள் அல்லது வானங்களில் அல்லது பூமியில் (மறைந்து) இருந்தபோதிலும் (கேள்வி கணக்கின் போது) அல்லாஹ் அதனைக் கொண்டுவந் துவிடுவான். நிச்சயமாக அல்லாஹ் வெகு நுட்பமானவன்; நன்கு உணர்பவன். ''என்னருமை மைந்தனே! நீ தொழுகையை நிறைவேற்றுவாயாக! நன்மையைக் கொண்டும் ஏவுவாயாக! பாவமான காரியங்களிலிருந்தும் விலக்குவாயாக! மேலும் உனக்கேற்படும் கஷ்டங்களை நீ பொறுமையுடன் சகித்துக் கொள்வாயாக! நிச்சயமாக இது காரியங்களில் உறுதியானதில் உள்ளதாகும். அன்றியும் (பெருமை கொண்டு) உன் முகத்தை மனிதர்களை விட்டும் திருப்பிக்கொள்ளாதே! மேலும் பூமியில் கர்வமாக நடக்காதே! நிச்சயமாக அல்லாஹ், தற்பெருமைக் காரர், கர்வங்கொண்டோர் ஒவ்வொருவரையும் நேசிக்கமாட் டான். மேலும் உன் நடையில் மத்திய தரத்தைக் கடைப்பிடிப்பா*

*யாக! உன் சப்தத்தையும் தாழ்த்திக்கொள்வாயாக! நிச்சயமாக சப்தங்களிலெல்லாம் வெறுக்கத்தக்கது கழுதைகளின் சப்தமே'' (என லுக்மான் கூறினார்) (31:13-19)*

4. *உங்களில் (செல்வ) வளம் பெற்றோரும், வசதியுடையோரும் தங்கள் பந்துக்களுக்கும், ஏழைகளுக்கும், அல்லாஹ்வுடைய பாதையில் தம் வீடுகளை விட்டுச் சென்றவர்களுக்கும் (எப்பொரு ளையும்) கொடுக்காமலிருக்க சத்தியம் செய்யவேண்டாம். அவர்களை மன்னித்துவிடவும். (பழைய வருத்தத்தைப்) பொருட் படுத்தாது விட்டுவிடவும். அல்லாஹ் உங்களுக்கு மன்னிப்பளிப் பதை நீங்கள் விரும்பமாட்டீர்களா? மேலும் அல்லாஹ் மிக்க மன்னிப்பவன். மிக்க கிருபையுடையவன். நிச்சயமாக, கற்புள்ள அப்பாவிகளான விசுவாசிகளான பெண்களை அவதூறு கூறு கிறார்களே - அத்தகையோர் - இம்மையிலும் மறுமையிலும் (அல்லாஹ்வினால்) சபிக்கப்பட்டுள்ளனர். இன்னும் அவர்களுக்கு மகத்தான வேதனையுண்டு. (24:22-23)*

5. *கிழக்கு, மேற்கு ஆகியவற்றின் பக்கமாக உங்கள் முகங்களை நீங்கள் திருப்புவது (மட்டும்) நன்மை (செய்ததாக ஆகிவிடுவது) இல்லை; எனினும் நன்மை உடையவர் எவரெனில் எவர் அல்லாஹ்வையும், இறுதிநாளையும், வானவர்களையும், வேதத் தையும், நபிமார்களையும் விசுவாசித்து, மேலும் செல்வத்தை, தன் விருப்பத்தின் மீது பந்துக்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கருக்கும், யாசிப்பவர்களுக்கும், அடிமைகளிலும் (அவர்களை விடுவிப்பதற்காக) கொடுத்தவரும், மேலும் தொழுகையை நிறைவேற்றி ஸகாத்தையும் கொடுத்து, வாக்களித்தால் தங்களின் வாக்குறுதியை நிறைவேற்றக்கூடிய வர்களும், துன்பத்திலும் கஷ்டத்திலும் யுத்த நேரத்திலும் பொறு மையுடன் இருந்தவர்களுமாவர். அத்தகையோர் தாம் உண்மை சொன்னார்களே அவர்கள் (ஆவர்). இன்னும் இவர்கள் தாம் பயபக்தியாளர்கள். (2:177)*

6. *நிச்சயமாக முஸ்லிம்களான ஆண்களும், முஸ்லிம்களான பெண் களும் விசுவாசிகளான ஆண்களும் விசுவாசிகளான பெண் களும் (அல்லாஹ்வுக்கு) வழிபாடு செய்யும் ஆண்களும் வழி பாடு செய்யும் பெண்களும் உண்மையே கூறுபவர்களான ஆண் களும் உண்மையே கூறுபவர்களான பெண்களும் பொறுமை யான ஆண்களும் பொறுமையான பெண்களும் உள்ளச்சத்*

*தோடு (அல்லாஹ்வை) பயந்து நடக்கும் ஆண்களும் உள்ளச் சத்தோடு (அல்லாஹ்வை) பயந்து நடக்கும் பெண்களும் தானம் செய்பவர்களான ஆண்களும் தானம் செய்பவர்களான பெண்களும் நோன்பு நோற்பவர்களான ஆண்களும் நோன்பு நோற்பவர்களான பெண்களும் தங்கள் மர்மஸ்தானங்களைக் காத்துக்கொள்பவர்களான ஆண்களும் (அவ்வாறு) காத்துக் கொள்பவர்களான பெண்களும் அல்லாஹ்வை அதிகமாக நினைவுகூரும் ஆண்களும் (அவ்வாறு) நினைவுகூர்பவர்களான பெண்களும் (ஆகிய) இவர்களுக்கு அல்லாஹ் மன்னிப்பையும் மகத்தான கூலியையும் தயார்செய்து வைத்திருக்கின்றான். (33:35)*

7. *நிச்சயமாக அல்லாஹ் நீதி செலுத்துமாறும், நன்மை செய்யு மாறும், உறவினர்களுக்கு (பொருளைக்) கொடுக்குமாறும் ஏவு கிறான்; மேலும், மானக்கேடான காரியங்கள், (மார்க்கத்தில்) மறுக்கப்பட்டவை, வரம்பு மீறுதல் ஆகியவற்றை விட்டும் (உங்களை) அவன் விலக்குகிறான். (இவைகளை) நீங்கள் நினைவில் வைத்துக்கொள்வதற்காக அவன் உங்களுக்கு உபதேசிக்கிறான். இன்னும், நீங்கள் உங்களுக்கு மத்தியில் உடன்படிக்கை செய்துகொண்டால் (அல்லாஹ்வின் பெயரால் செய்யப்பட்ட) உடன்படிக்கையை நிறைவேற்றுங்கள். சத்தியங் களை அவற்றை உறுதிப்படுத்திய பின்னர், உங்கள் மீது (அவற்றுக்கு) அல்லாஹ்வை பொறுப்பாகவும் நீங்கள் ஆக்கி யிருக்க நீங்கள் துண்டித்தும் விடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்வதை நன்கு அறிவான். (16:90-91)*

8. *(நபியே!) உமதிரட்சகன் அவனைத் தவிர (மற்றெவரையும்) நீங்கள் வணங்கக்கூடாதென்றும், பெற்றோர்க்கு உபகாரம் செய்யவேண்டுமென்றும் கட்டளையிட்டிருக்கின்றான்; அவ்விரு வரில் ஒருவரோ அல்லது அவ்விருவருமோ உம்மிடத்தில் திண்ணமாக முதுமையை அடைந்துவிட்டால் அவ்விருவருக்கும் சீ என்று கூட நீ (இழித்துக்) கூறவேண்டாம். அவ்விருவரையும் விரட்டிவிடவும் வேண்டாம். அவ்விருவருக்கும் மரியாதையான வார்த்தையைக் கூறுவீராக. இன்னும் அவ்விருவருக்காக இரக் கத்துடன் பணிவு என்னும் இறக்கையை நீர் தாழ்த்துவீராக! மேலும் 'என் இரட்சகனே! நான் குழந்தையாக இருந்தபொழுது (மிக்க அன்பாக) என்னை வளர்த்தது போன்று நீயும் அவ்விரு வருக்கும் அருள்புரிவாயாக!' என்றும் கூறுவீராக. (17:23-24)*

*9. உங்களுக்கும், அவர்களிலிருந்து நீங்கள் விரோதித்திருக் கின்றீர்களே அத்தகையோருக்கும் இடையில் அல்லாஹ் நேசத்தை ஏற்படுத்திவிடக்கூடும். அல்லாஹ்வோ ஆற்றலுடையோன்! மேலும், அல்லாஹ் மிக்க மன்னிக்கிறவன், மிகக் கிருபையுடையவன். மார்க்கத்தில் உங்களுடன் எதிர்த்துப் போரிடாமலும் உங்கள் இல்லங்களிலிருந்து உங்களை வெளியேற்றாமலும் இருந்தார்களே அத்தகையோருக்கு நீங்கள் நன்மை செய்வதையும், அவர்கள்பால் நீங்கள் நீதமாக நடந்து கொள்வதையும் அல்லாஹ் உங்களுக்குத் தடுக்கவில்லை. நிச்சயமாக அல்லாஹ் நீதி செய்வோரை நேசிக்கின்றான். (60:7-8)*

*10. விசுவாசங்கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வுக்காக நீதியைக் கொண்டு சாட்சி கூறுகின்றவர்களாக (உண்மையின் மீது) நிலைத்தவர்களாக ஆகிவிடுங்கள். எந்த சமூகத்தவரின் விரோதமும், நீங்கள் நீதமாக நடந்துகொள்ளாதிருக்க உங்களைத் திண்ணமாகத் தூண்டிவிட வேண்டாம். நீங்கள் நீதி செலுத்துங்கள். அதுதான் பயபக்திக்கு மிக நெருக்கமானதாகும். இன்னும் நீங்கள் அல்லாஹ்வைப் பயப்படுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கு உணர்கின்றவன். (5:8)*

*11. விசுவாசிகளே! ஒரு சமூகத்தார் இன்னொரு சமூகத்தாரைப் பரிகாசம் செய்யவேண்டாம். அவர்கள் இவர்களைவிட மிகச் சிறந்தவர்களாக இருக்கலாம். (அவ்வாறே) எந்தப் பெண்களும் மற்ற எந்தப் பெண்களையும் (பரிகாசம் செய்ய வேண்டாம்) அவர்கள் இவர்களைவிட மிகச் சிறந்தவர்களாக இருக்கலாம். உங்களில் சிலர் சிலரைக் குறைகூறவும் வேண்டாம். உங்களில் சிலர் சிலரை (அவருக்கில்லாத) பெயர்களால் அழைக்கவும் வேண்டாம். விசுவாசங்கொண்ட பின்னர் தீய பெயர் (கூறுவது) மிகக் கெட்டதாகிவிட்டது. எவர்கள் (இவற்றிலிருந்து) பாவ மன்னிப்புக் கோரி மீளவில்லையோ அவர்களே அநியாயக்காரர்கள். விசுவாசிகளே! (தவறான) எண்ணத்தில் பெரும்பாலானவற்றை நீங்கள் தவிர்த்துக்கொள்ளுங்கள். நிச்சயமாக எண்ணத்தில் சில பாவமாகும். (எவருடைய குறைகளையும்) நீங்கள் துருவித் துருவி விசாரித்துக்கொண்டிருக்கவும் வேண்டாம். உங்களில் சிலரைப் புறம்பேசவும் வேண்டாம். உங்களில் ஒருவர், தனது சகோதரனின் மாமிசத்தை சவமாக இருக்கும் போது புசிக்க விரும்புவாரா? அப்போது அதனை நீங்கள் வெறுத்துவிடுவீர்கள்.*

*இன்னும் நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்துகொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் பாவமீட்சியை மிகுதியாக ஏற்பவன். மிக்க கிருபையுடையவன். (49:11-12)*

*12. அன்றியும் (எதிரிகளான) அவர்கள் சமாதானத்தின் பக்கம் சாய்ந்தால், அப்பொழுது (நபியே) நீரும் அதன் பக்கம் சாய்வீராக! அல்லாஹ்வின் மீதே நம்பிக்கையும் வைப்பீராக! நிச்சயமாக அவனே செவியுறுவோன்; நன்கறிந்தோன். (8-61)*

*13. நன்மையும் தீமையும் சமமாகிவிடாது. (ஆதலால், நபியே!) எது மிக அழகானதோ அதைக்கொண்டு (தீமையை) தடுத்துக் கொள்வீராக! அப்பொழுது எவருக்கும் உமக்குமிடையே பகைமை இருந்ததோ அவர், உம்முடைய உற்ற சிநேகிதரைப் போல் ஆகிவிடுவார். (41:34)*

*14. நியாயத் தீர்ப்பைப் பொய்யாக்குவோனை நீர் (கவனித்துப்) பார்த்தீரா? ஆகவே அத்தகையோனே அனாதைகளை விரட்டுகின்றான். அவன் ஏழைக்கு உணவளிக்கத் தூண்டுவதுமில்லை. எனவே, தொழுகையாளிகளுக்குக் கேடுதான். அவர்கள் எத்தகையோரென்றால் தங்கள் தொழுகையை (நிறைவேற்றுவதை விட்டும்) பாராமுகமாக இருப்போர். அத்தகையோர்தான் (மற்றவர்களுக்குக்) காண்பிக்கிறார்கள். மேலும் அற்பமான பொருட்களை (மற்றவர்களுக்குக் கொடுப்பதை) தடுக்கிறார்கள். (107:1-7)*

*15. (அளவையிலும் நிலுவையிலும்) குறைக்கக்கூடியவர்களுக்குக் கேடு உண்டாவதாக! அவர்கள் எத்தகையோரென்றால், மனிதர்களிடமிருந்து அளந்து வாங்கினால், நிறைவாக வாங்கிக் கொள்கிறார்கள். தாங்கள் அவர்களுக்கு அளந்துகொடுத்தாலும் அல்லது நிறுத்துக்கொடுத்தாலும் (குறைத்துக் கொடுத்து) நஷ்டப்படுத்திவிடுகின்றனர். அத்தகையோர், தாம் (மீண்டும்) எழுப்பப்படுவார்கள் என்பதை எண்ணிப் பார்க்கவில்லையா? மகத்தான ஒரு நாளைக்காக (அது) அகிலத்தாரின் இரட்சகனின் முன்னிலையில் மனிதர்கள் நிற்கும் நாள். (83:1-6)*

**இறைதூதர் கூறியவை:**

1. தான் தனக்கென விரும்புவதைத் தன் சகோதரனுக்கும் விரும்பாத வரை உங்களில் எவரும் (உண்மை) விசுவாசியாக மாட்டார்.

2. எவரொருவர் ஒரு தீய செயலைக் கண்டாராயின் அவர் அதனைத் தன் கரங்களால் தடுக்கட்டும். அவ்வாறு செய்யமுடியாது போனால் அவர் தம் நாவினால் அதைத் தடுக்கட்டும். அப்படியும் செய்ய முடியாது போனால் தன் உள்ளத்தால் அதனைத் தடுக்கட்டும் - இதுவே விசுவாசத்தின் மிகப் பலவீனமான நிலைமையாகும்.

3. உங்கள் இரட்சகன் கூறினான் *"ஆதமுடைய மகனே! நீ என்னை அழைத்து என்னிடம் கேட்டுக்கொண்டிருக்கும் வரை நீ செய் துள்ளவற்றுக்காக நான் உன்னை மன்னித்துவிடுவேன். அத னைப் பொருட்படுத்தமாட்டேன். ஆதமுடைய மகனே! உன் னுடைய பாவங்கள் வானளவினதாக இருந்து நீ என்னிடம் பாவமன்னிப்புக் கோரினால் நான் உன்னை மன்னித்து விடுவேன். ஆதமுடைய மகனே; பூமியளவு பாவத்துடன் (பாவ மன்னிப்புக்காக) என் பக்கம் திரும்பி எனக்கு எதனையும் இணைவைக்காது இருப்பின் நான் உனக்குப் பூமியளவு பாவமன்னிப்பை வழங்குவேன்."*

4. இறைவன் உங்களது உடல்களையும் உருவங்களையும் நோக்குவதில்லை. அவன் உங்கள் இதயங்களையும் செயல் களையும்தான் நோக்குகின்றான்.

5. ஒரு சீப்பிலுள்ள பற்களைப் போன்று மனிதர்கள் யாவரும் சமமானவர்களே. நீங்கள் அனைவரும் ஆதமிலிருந்து வந்த வர்கள். ஆதம் மண்ணிலிருந்து வந்தவர். கறுப்பரை விட வெள் ளையர் உயர்ந்தவருமல்லர். அராபியல்லாதவரை விட அரா பியர். உயர்ந்தவருமல்லர் - பயபக்தியின் காரணமாகவே ஒழிய.

6. பலசாலி என்பவர் மல்யுத்தம் புரிவதில் சிறந்தவரல்லர். எவர் கோபம் வரும்போது தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கிறாரோ அவரே சிறந்த பலசாலி.

7. "நான் கருணை காட்டுவதற்குப் பொருத்தமானவர் யார்?" என ஓர் இளைஞர் இறைதூதரிடம் கேட்டபோது "உமது தாய்" என அன்னார் பதில் அளித்தனர். "அடுத்து யார்?" என அம் மனிதர் கேட்டபோது "உமது தாய்" என்று இறைதூதர் பதி லளித்தார்கள். "அதன் பிறகு யார்?" என அம்மனிதன் கேட்ட போது இறைதூதர் "உமது தாய்" என்றார்கள். "அதன் பிறகு?" என மீண்டும் அந்த மனிதர் கேட்டபோது "உமது தந்தை" என்றனர் இறைதூதர்.

8. உங்களில் மிகச் சிறந்தவர்கள் உங்கள் மனைவியருடன் மிக அன்பாக இருப்பவர்களே. உங்கள் மத்தியில் நான் மிகச் சிறந்தவனாக இருக்கிறேன்.

9. ''ஒரு விசுவாசி கோழையாக இருக்க முடியுமா?'' என இறை தூதரிடம் வினவப்பட்டபோது அன்னார் ''இருக்கக்கூடும்'' என்றார்கள். ''ஒரு விசுவாசி உலோபியாக இருக்கமுடியுமா?'' எனக் கேட்கப்பட்டபோது ''இருக்கக்கூடும்'' என்றே பதில் சொன் னார்கள். ஆனால், ''ஒரு விசுவாசி பொய்யராக இருக்க முடியுமா?'' என்று கேட்கப்பட்டபோது ''ஒருபோதும் இருக்க முடியாது'' என அன்னார் கூறினார்கள்.

10. உஷ்ணமான கோடை நாளொன்றில் தாகத்தினால் தவிக்கும் நாயொன்று ஒரு கிணற்றுக்கருகே அதன் தண்ணீரை அடைய முடியாமல் நிற்பதை ஒரு மனிதன் கண்டான். என்னைப் போலவே இந்த நாயும் தாக்தினால் தவிக்கிறதே என அம்மனிதன் தனக்குள்ளே கூறிக்கொண்டான். அவன் கிணற் றினுள் இறங்கி தனது பாதணியில் தண்ணீரை நிரப்பி எடுத்து வந்து அந்த நாய்க்கு அருந்தக் கொடுத்தான். அவனது செய லைக் கண்டு மகிழ்ந்த இறைவன் அவனது பாவங்களை யெல்லாம் மன்னித்துவிட்டான்.

11. ஒரு நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்றாகும் : அவன் பேசினால் பொய் பேசுவான். அவன் வாக்குறுதி வழங்கினால் அதனை முறிப்பான். அவன் மீது நம்பிக்கை வைத்தால் நம்பிக் கைத் துரோகம் செய்வான்.

12. உங்கள் இரட்சகன் (அல்லாஹ்) கூறுகிறான்: *எனது அடியான் என்னை நோக்கி ஒரு சாண் வந்தால் நான் அவனை நோக்கி ஒரு முழம் போவேன். அவன் என்னை நோக்கி ஒரு முழம் வந்தால் நான் அவனை நோக்கி ஒரு பாகம் போவேன். அவன் என்னை நோக்கி நடந்து வந்தால் நான் அவனை நோக்கி ஓடிச் செல்வேன்.*

13. அயலவர்கள் நலனில் அக்கறை காட்டுமாறு வானவர் ஜிப்ரீல் எனக்குத் தொடர்ச்சியாக எந்தளவுக்கு அறிவுறுத்தி வந்தார் எனின் இறைவன் அயலவருக்கு வாரிசுரிமை வழங்கிவிடுவா னோ என்று கூட நான் யோசிக்கத் தொடங்கிவிட்டேன்.

14. நியாயத் தீர்ப்பு நாளின் போது பின்வருமாறு ஓர் அழைப்புக் குரல் கேட்கும் : ''மற்றவர்களுக்கு மன்னிப்பு வழங்கிய மனி

தர்கள் எங்கே? நீங்கள் உங்கள் இரட்சகனின் முன்னிலையில் வந்து உங்களுக்குரிய வெகுமதிகளைப் பெற்றுக்கொள்ளுங் கள். மன்னிப்பு வழங்கிய ஒவ்வொருவரும் சுவனபதியில் நுழை யச்செய்யப்படுவர்.''

15. இறைவா! தவறுகளிலிருந்தும் துன்பங்களிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன். கோழைத்தனத்திலிருந் தும் உலோபித்தனத்திலிருந்தும் நான் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் கடனிலிருந்தும் ஏனையவர்களால் அடக்கியாளப்படுவ திலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்.

16. வெறுப்புக்குரிய செயலொன்று ஒரு சமூகத்தில் நிலைபெற்று அதனை அவர்கள் பகிரங்கப்படுத்தி ஊக்குவிப்பார்களாயின், நிச்சயமாக இறைவன் அவர்களது முன்னோர்கள் அறிந்திராத நோய்களை அவர்களிடையே உருவாக்குவான்.

17. மதுபானமே தீமைகள் அனைத்திற்கும் தாயாக இருக்கிறது.

18. விசுவாசிகளின் விவகாரங்கள் அற்புதமானவையாக இருக்கும். ஏனெனில் அவர்களுக்கு ஒரு நன்மை விளைந்தால் அவர்கள் இறைவனுக்கு நன்றி பாராட்டுவார்கள். அது அவர்களுக்கு நல்லதாக அமையும். அதேவேளை அவர்களுக்கு ஏதும் கஷ் டம் ஏற்பட்டால் அவர்கள் பொறுமையைக் கடைபிடிப்பார்கள். அது அவர்களுக்கு நல்லதாக அமையும்.

19. ஆதமின் பிள்ளையொன்று இறந்துவிட்டால் மறுவுலகில் அதன் இவ்வுலகத்துடனான தொடர்புகள் முற்றாக அறுந்துவிடும் - மூன்று விடயங்களைத் தவிர: அவையாவன: அவர் விட்டுச் செல்லும் முடிவில்லாது தொடரும் தர்மம், மற்றவர்கள் தொடர்ந்து பயன்பெறக்கூடிய பயனுள்ள அறிவு, அவருக்காகப் பிரார்த்திக்கக்கூடிய பயபக்தியுள்ள பிள்ளைகள்.

20. இறைவன் அனுமதி வழங்கியுள்ள விடயங்களில் அவனுக்கு மிகவும் வெறுப்பானது விவாகவிலக்கு ஆகும். ஒரு விசுவாசி தனது விசுவாசியான மனைவியைக் கைவிடக்கூடாது. அவனது விருப்பத்துக்கு முரணான சில அம்சங்கள் அவளில் காணப் பட்டாலும் அவனது விருப்பத்துக்குரிய அம்சங்களும் இருக் கத்தான் செய்யும்.

21. நியாயத் தீர்ப்பு நாளிலே இறைவனின் நிழலைத் தவிர வேறெந்த நிழலும் இல்லாத நிலையில் ஏழு பேர் இறைவனின் நிழலில் அடைக்கலம் பெறுவர். அவர்கள்: நீதியான ஆட்சியாளர்,

இறைவனுக்கு கீழ்ப்படிவாக வளர்க்கப்பட்ட இளைஞன், மஸ்ஜிதுகளுக்கு தனது உள்ளத்தை அர்ப்பணித்துக்கொண்ட மனிதர், இறைவனுக்காக அன்புகொண்ட இரு சகோதரர்கள் (அல்லது சகோதரிகள்), தனிமையில் இறைவனை நினைவுகூர்ந்து கண்களில் கண்ணீர் ஊற்றெடுத்த மனிதர், ஓர் அழகான பெண் தவறான உறவுக்கு அழைத்தபோது ''நான் இறைவனுக்கு அஞ்சுகிறேன்'' என்று கூறி ஒதுங்கிக்கொண்ட வாலிபன், தனது வலது கரம் கொடுத்ததை இடது கரம் அறிந்துகொள்ளாத வகையில் இரகசியமாக தர்மம் செய்த மனிதர்.

22. பச்சையான வெங்காயத்தையோ வெள்ளைப் பூண்டையோ உட்கொண்ட ஒருவர் மஸ்ஜிதில் நடக்கும் கூட்டுத்தொழுகையில் கலந்துகொள்வதை தவிர்த்தல் வேண்டும். (இல்லையேல் அவற்றின் கடுமையான வாடை காரணமாக அவர் அடுத்தவர்களுக்குத் தொந்தரவு ஏற்படுத்தக்கூடும்)

23. இறைவனின் கட்டளைகளை விசுவாசத்துடன் ஏற்று நடப்பவர்களுக்கும் அவ்வாறு செய்யாதவர்களுக்கும் உதாரணம் ஒரு கப்பலின் மேல்தட்டில் சிலரும் கீழ்தட்டில் சிலருமாக பிரயாணம் செய்யும் ஒரு குழுவினரைப் போன்றது. கீழ் தட்டிலுள்ளவர்களுக்கு நீர் தேவைப்படும் போது அவர்கள் மேல் தட்டுக்குச் சென்று அதனைப் பெற்றுக்கொள்ளவேண்டியிருந்தது. எனவே அவர்கள் ''கப்பலில் எமது பகுதியில் நாம் துளையொன்றை இட்டு நேரடியாக நீரைப் பெற்றுக்கொள்வோம்'' என்று கூறினர். எனினும் மேல் தட்டிலுள்ளவாகள் அவர்களது யோசனைக்கு இடமளித்தால் அவர்கள் அனைவருமே அழிந்து போவர். அதேவேளை அவர்களை அவ்வாறு செய்யாமல் தடுத்தால், அவர்கள் அனைவரும் பாதுகாக்கப்படுவர்.

24. மேலுள்ள கை (அதாவது கொடுக்கும் கை) கீழிருக்கும் கையை (எடுக்கும் கையை) விட மேலானது.

25. ''சரியோ தவறோ உங்கள் சகோதரருக்கு உதவி செய்யுங்கள்'' என இறைதூதர் அவர்கள் கூறினார்கள். அப்போது, ''அவர் சரியாக இருக்கும் போது அவருக்கு உதவுவதைப் புரிந்துகொள்ளலாம். ஆனால் அவர் தவறாக இருந்தால் அவருக்கு நாம் எவ்வாறு உதவிசெய்ய முடியும்?'' என அன்னாரிடம் கேட்கப்பட்டது. ''அவரைத் தவறிலிருந்து தடுத்துவிடுங்கள். அதுதான் அவருக்குச் செய்யக்கூடிய உண்மையான உதவி'' என அன்னார் பதிலளித்தார்கள்.

26. உங்களுக்கு முன்பிருந்த சமூகங்கள் அழிவை எதிர்கொண்டதற்குக் காரணம் அவர்கள் உயர் குடியினர் திருடியபோது அவர்களைத் தண்டிக்காதுவிட்டார்கள். ஆனால் பலவீனர்கள் திருடியபோது அவர்களைத் தண்டித்தார்கள்.

27. எந்நாளும் உயிர்வாழப் போகிறோம் என்பதாக நினைத்து இவ்வுலகத்திற்காக உழையுங்கள். நாளை இறக்கப்போகிறோம் என்பதாக நினைத்து மறுமைக்காக உழையுங்கள்.

28. சில வறிய முஸ்லிம்கள் இறைதூதரிடம் பின்வருமாறு முறையிட்டார்கள். ''வசதிபடைத்தவர்கள் எல்லா வெகுமதிகளையும் பெற்றுக்கொள்கின்றார்கள். நாம் தொழுவது போலவே அவர்களும் தொழுகிறார்கள். நாம் நோன்பிருப்பது போன்றே அவர்களும் நோன்பிருக்கின்றார்கள். அத்தோடு தமது பணத்திலிருந்து தர்மமும் கொடுக்கிறார்கள். (எம்மால் அதனைச் செய்யமுடியாதிருக்கிறது)''. இறைதூதர் சொன்னார்கள் ''நீங்கள் தர்மமாக கொடுப்பதற்காக அல்லாஹ் உங்களுக்கென சிலவற்றைத் தந்திருக்கிறான் தானே? இறைவனுடைய பரிபூரணத்தன்மையைப் பற்றிய ஒவ்வொரு புகழ்ச்சியும் ஒரு தர்மம் தான். இறைவனுக்கு நன்றி கூறும் ஒவ்வொரு தருணமும் தர்மம் தான். அல்லாஹ்வைத் தவிர வேறு நாயன் இல்லை என்று கூறுதலும் ஒரு தர்மமே. நன்மையை ஏவித் தீமையை விலக்குவதும் தர்மமே. உங்கள் மனைவியரிடம் செல்லும் ஒவ்வொரு தருணமும் ஒரு தர்மம் தான்.'' அப்போது அவர்கள் ''ஒருவர் தனது சிற்றின்ப ஆசையைத் தீர்த்துக்கொள்வதற்கும் சன்மானம் வழங்கப்படுமா?'' என்று வினவினர். அதற்கு அன்னார், ''ஒருவர் விலக்கப்பட்ட முறையில் தனது ஆசையைத் தீர்த்துக்கொள்வது பாவச் செயல் என நீங்கள் நினைக்கவில்லையா? அதேபோல் அவர் தனது ஆசையை சட்டரீதியான முறையில் தீர்த்துக்கொள்வாரானால் அவ்வாறு செய்வதற்குச் சன்மானம் உண்டு'' எனக் கூறினார்கள்.

29. இறைவனுக்கு அஞ்சிக்கொள்வதில் சிறந்தமுறை எது? என்று கேட்கப்பட்டபோது இறைதூதர் அவர்கள் ''இறைவனை எதிரில் காண்பது போன்று நினைத்து அவனை அஞ்சிக்கொள்வதே சிறந்தது. ஏனெனில் நீங்கள் அவனைக் கண்டுகொள்ளாவிட்டாலும் அவன் உங்களைக் காண்கின்றான்'' என்று கூறினார்கள்.

30. இறைவனை நினைவிலிருத்திக்கொள்ளுங்கள்; அவன் உங்கள் முன்னால் இருப்பதைக் காண்பீர்கள். சுபீட்சமான காலத்தில் இறைவனை நினைவுகூருங்கள். கஷ்டமான காலத்தில் அவன் உங்களை அறிந்துகொள்வான். உங்களைக் கடந்துசென்ற ஒன்று உங்களுக்கு நிகழ்ந்திருக்கவும் முடியாது; உங்களுக்கு நிகழ்ந்த ஒன்று உங்களை கடந்து சென்றிருக்கவும் முடியாது என்பதை அறிந்துகொள்ளுங்கள். பொறுமையுடன் தான் வெற்றி வரும் என்பதையும், நோயோடு தான் நிவாரணம் வரும் என்பதையும் கஷ்டத்தோடு தான் லேசு வரும் என்பதையும் அறிந்து கொள்ளுங்கள்.

# அத்தியாயம் ஐந்து

## இன்றைய பிரச்சினைகள்

வெறுமனே வழிபாட்டு விடயங்களுக்கும் வழிபாட்டுத் தளங்களுக்கும் மட்டுப்படுத்தப்படாத முற்று முழுமையான ஒரு சமயம் என்ற வகையில் இஸ்லாம் வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் அணுகி நிற்கின்றது. எனவே முஸ்லிம்கள் ஒரு கூறாக அமைந்த பரந்த சமூகத்தின் கவலைகளிலும் அக்கறைகளிலும் இஸ்லாம் பங்கு கொள்கிறது. எனவே இந்தப் பிரச்சினைகளுக்குரிய தீர்வுகளையும் பொது அடிப்படைகளையும் கண்டறிவதற்கான கூட்டுமுயற்சியில் தமது விழுமியங்களையும் பகிர்ந்துகொள்வதற்கு முஸ்லிம்கள் விரும்புவது இயல்பானதே.

இந்த அத்தியாயத்தில் தற்கால பிரச்சினைகளுள் சில பற்றிய இஸ்லாமிய கண்ணோட்டங்களை நாம் முன்வைக்கப்போகிறோம். எமது அன்றாட வாழ்க்கைக்கு இஸ்லாமியப் பார்வைக் கோணத்தின் பொருத்தப்பாட்டை ஆராயவும் எடுத்துக்காட்டவும் கூடிய மாதிரிகளாகவே இத்தலைப்புக்களைத் தெரிவு செய்துள்ளோம். கோட்பாடு மற்றும் கருத்துரீதியான சிந்தனை அணுகுமுறை இங்கு கையாளப்படவில்லை.

அடுத்துவரும் பக்கங்களில் கலந்துரையாடப்படும் விடயங்கள் பின்வருமாறு: (1) நவீன உலக ஒழுங்கமைப்பு (2) ஜிஹாத் (3) குடும்பமும் பாலியல் புரட்சியும் (4) உயிரியல் - மருந்து ஒழுக்க விதிகள் - இதனுள் (அ) இனப்பெருக்கம் தொடர்பான பிரச்சினைகள் (ஆ) உறுப்பு அன்பளிப்பும் உறுப்பு மாற்றுச் சிகிச்சையும் (இ) மரணத்தை வரையறுத்தல் (ஈ) கருணைக் கொலை (உ) மரபணுப் பொறியியல் என்பன அடங்கியுள்ளன.

**நவீன உலக ஒழுங்கமைப்பு**

கம்யூனிஸத்தின் துரித வீழ்ச்சியின் விளைவாக அண்மைக் காலத்தில் நவீன உலக ஒழுங்கமைப்பொன்று பிரகடனப்படுத்தப்பட் டிருக்கிறது. உலகின் பெரும்பகுதியினர் கம்யூனிஸத்தின் வீழ்ச்சியை எதிர்பார்க்காத போதிலும், இஸ்லாமிய இலக்கிய ஆக்கங்கள், பல தசாப்தங்களாகக் கம்யூனிஸத்தையும் முதலாளித்துவத்தையும் விமர் சித்து வந்துள்ளதோடு அவை தாக்கிப் பிடிக்கப்போவதில்லை என்றும் கூறிவந்துள்ளன. இஸ்லாமியப் போதனைகளை அடிப்படையாகக் கொண்ட சுயாதீன ஆட்சி முறையொன்றுடன் ஒப்பீடு செய்து மேற் சொன்ன இரண்டு முறைகளும் என்னென்ன முறையில் எந்தெந்த இடத்தில் குறைபாடுடையனவாக இருக்கின்றன என்பதை முஸ்லிம் அறிஞர்கள் தமது ஒப்பீட்டு ஆய்வுகளில் தெளிவாக எடுத்துக்காட்டி யுள்ளனர்.

கம்யூனிஸத்தின் வீழ்ச்சியானது முதலாளித்துவம் பொருத்த மானது என்பதை அத்தாட்சிப்படுத்துவதாகத் தீர்மானிப்பது முட்டாள் தனமானது. இரண்டுமே சடப்பொருள்வாதக் கோட்பாடுகளாக இருப்ப தனால் அவை தவறுடையனவாக உள்ளன. சடப்பொருளுக்கும் அப் பாற்பட்ட சிறப்பியல்புகளைக் கொண்ட மனித இனத்துக்குப் பொருத்த மற்றவை.

அக்கோட்பாடுகளில் காணப்படும் இன்னொரு தவறு தனி நபருக்கும் சமூகத்துக்குமிடையில் சமரசத்துக்கு வரமுடியாத மோத லொன்று நிகழ்வதாக அவை எடுத்துக்கொண்டிருப்பதே. கம்யூனிஸம் சமூக நலனுக்காகத் தனியாளை நசுக்க முயற்சித்தது. எனினும் சமூகம் என்பது தனியாட்களின் கூட்டுத்தானே. எனவே, நொறுக்கப்பட்ட சமூகமொன்றே இதன் விளைவால் உருவாகியது.

மறுபுறமாக, முதலாளித்துவமானது தனியாள் நலனை அள வுக்கு மீறிப் போற்றி சமூகத்தின் உரிமை கோரல்களிலிருந்து தனி யாளைப் பாதுகாக்கின்றது. இதன் காரணமாக, சுயநலத்தை நியாயப் படுத்தலாம் என்ற உணர்வைத் தனியாட்கள் பெற்றுள்ளனர். இந்த உணர்வு வெளிநோக்கி வியாபிக்கும் போது அது வகுப்புவாதம், பெருநிறுவனப் போக்கு, தேசியவாதம், இனவாதம், அடிமைப்படுத்தல், காலனித்துவம் போன்றனவாக உருவெடுக்கின்றது. வளர்ச்சியடை வதும் எல்லையின்றிப் பெருகுவதும்தான் மூலதனத்தின் ஒரே செயற் பாடும் ஒரே போக்கும் என்பதே முதலாளித்துவத்தின் அடித்தளமாக அமைந்திருக்கிறது. உள்ளூர்ச் சந்தைகள் நிரம்பலடைந்துவிட்டால் வெளிநாடுகளில் - குறிப்பாக மூன்றாம் உலக நாடுகளில் - புதிய

சந்தை வாய்ப்புக்கள் தேடப்படுகின்றன. வரையறைகளுக்குட்பட்ட இந்தப் பூமியிலே எல்லையில்லாத வளர்ச்சியை அடைவது சாத்தியமில்லை என்ற உண்மையை (ஒருவேளை வேண்டுமென்றே) முதலாளித்துவம் கண்டுகொள்வதில்லை.

மேலும் மேலும் டொலர்களைக் குவிக்க நடக்கும் கடுமையான போட்டியோடு, திட்டமிட்டு உற்சாகமாய் ஊக்குவிக்கப்படுகின்ற நுகர்வுப்போக்கும், திட்டமிட்டுப் பண்டங்களை வழக்கொழிந்து போகச் செய்யும் நடைமுறையும் இணைந்து நிற்கின்றன. இவை தேவைகளை நிறைவேற்றுவதற்காகவன்றி, சௌகரியங்களையும், இன்பங்களையும், படாடோபத்தையும் நோக்காகக் கொண்டனவாகவே இருக்கின்றன. இயற்கை வளங்கள் - அவற்றுள் சில மீளப்பெறப்பட முடியாதவை - அதிகரிக்கும் வேகத்தில் மீறப்பட்டுக்கொண்டிருக்கின்றன. அதிகம் சம்பாதிப்பதற்கான இந்த வெறிக்கு உலகத்தின் வளங்களே பலியாடு களாக அமைகின்றன. இப்போக்கு குறிப்பாக, மலிவான உழைப்பும், பொருட்களும் கிடைக்கக்கூடிய மூன்றாம் உலக நாடுகளின் சுரண்டலுக்கு வழிவகுக்கிறது. மக்களின் இயற்கை வளங்களும் மூலப்பொருட்களும் மலிவு விலைக்குச் சூறையாடப்படுகின்றன. (அதேவேளை இந்த மூலப்பொருட்களைக் கொண்டு தயாரிக்கப்படும் உற்பத்திப் பொருட்களுக்கு அவர்கள் அளவுக்கு மீறிய விலைகளைச் செலுத்தவேண்டியிருக்கிறது) அதுமட்டுமன்றி, முதலாம் உலக இறக்கு மதிகளில் தங்கியிருக்காது, தம் நிலையை மேம்படுத்திக்கொள் வதற்கான செயற்திட்டங்களை மேற்கொள்வதிலிருந்தும் அவர்கள் தடுக்கப்படுகின்றனர்.

இத்தகைய, இரத்தம் உறிஞ்சும் போக்கினால் மூன்றாம் உலகு முற்றாக நசிந்து போவதைத் தடுப்பதற்காக கடன்கள், உதவிகள் என்ற பெயரில் புதிய மூலதனத்தை அங்கு புகுத்துகின்றனர். மேற் கத்திய மூலதனத்தின் நன்மை கருதி அவர்களது கொள்வனவு ஆற்றலைப் பேணிக்கொள்வதே இதன் உள்நோக்கமாகும்.

எனினும் அவ்வாறு வழங்கப்படும் கடனுதவிகளில் மிகச்சிறிய பகுதியே மக்களின் தேவைகளுக்காகச் செலவுசெய்யப்படுகிறது. அதில் பெரும் பகுதி ஆளும் வர்க்கத்தையும் அதன் பரிவாரங் களையும் கொண்ட உள்ளூர் உயர் குடியினரையே அடைகிறது. அவர்களால்தான் தற்போதைய நிலைமை தொடர்ந்தும் காணப்படு கின்றது. இக்கடனுதவிகளின் நிபந்தனைகள் பற்றிய பகிரங்க விவா தங்களை இவர்கள் தடுத்துவிடுவதோடு அவற்றை மேற்பார்வை செய்யவும் அவற்றுக்காகப் பொறுப்புக் கூறவும் எடுக்கப்படும்

முயற்சிகளையும் தடைசெய்கின்றனர். இவர்கள் உழைப்போரின் உரிமைகளை அடக்கிவைப்பதோடு, பாதுகாப்பற்ற செயன்முறை களுக்கு இடமும் அளிக்கின்றனர். மூன்றாம் உலக நாடுகளின் - இஸ்லாமிய உலகின் பெரும் பகுதி உட்பட - அடையாளச் சின்ன மாகக் காணப்படும் அதிர்ச்சிதரக்கூடிய ஊழல்கள் பகிரங்கப் படுத்தப்படாமல் தடுத்து நிற்பவர்களும் இவர்கள்தான். இரண்டு வகையான முரண்பாட்டு நிலைமைகளை இது விளக்குகின்றது. முத லாவது பல மத்திய கிழக்கு நாடுகளைப் பொறுத்தமட்டில் எவ்வளவு அதிகமாக மேற்குலகு அங்கு பணத்தை அள்ளிக் கொட்டுகின்றதோ அந்த அளவுக்கு அவை வறுமையை நோக்கிச் செல்வதோடு அவற்றின் கடன் பளுவும் அதிகரிக்கிறது. இரண்டாவது, மத்திய கிழக்கில் ஜனநாயக நடைமுறைகளினூடாக ஆட்சியைக் கைப்பற்றும் நிலையை நெருங்குகின்ற ஜனநாயக இயக்கங்களுக்கு எதிராக பிரதான மேற்கத்திய ஜனநாயக நாடுகளே சதித்துரோகம் செய்கின் றன. இந்த வகையில் இந்த ஜனநாயக நாடுகள் பொதுமக்களின் ஜனநாயக அபிலாஷைகளுக்கு எதிராக சர்வாதிகாரிகளுடன் கூட்டுச் சேர்கின்றன. தேவையான போது அந்தச் சர்வாதிகாரிகளுக்கு ஆதர வாகத் தம் இராணுவ பலத்தையும் பயன்படுத்துகின்றன.

ஒவ்வொரு மேற்கத்திய தலையீட்டினதும் இலக்கு உறுதிப் பாட்டை ஏற்படுத்துதல் என்றே பிரகடனப்படுத்தப்படுகிறது. இதன் உண்மைக் கருத்து வெளிநாட்டு மூலதனத்துக்கு மிகச் சிறந்த சுரண்டல் வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுத்தல் என்பதே. இதன் விளைவு வெளிநாட்டு மக்களுக்கு எவ்வளவு தீங்கானதாக இருந் தாலும் சரியே. அவர்களுக்கும் அவர்களது சந்ததிகளுக்கும் அதிகரித்துச் செல்லும் கடன்பளுவொன்று சுமத்தப்படுவதோடு, அவர் களின் தேசிய உற்பத்தியின் மூலம் அக்கடனுக்கு வட்டி கொடுப்பதைத் தவிர கடனைச் செலுத்தி முடிக்க ஒருபோதும் முடிவதில்லை. இந்த நிலைமை நன்கு அறியப்பட்டதாகவும் மூன்றாவது உலக மக்களால் கசப்போடு உணரப்படக்கூடியதாகவும் இருக்கிறது. அதன் விளைவு களை அவர்கள் தமது இல்லங்களிலும், குடும்பங்களிலும் தங்கள் பிள்ளைகளுக்குக் கிடைக்கக்கூடிய மிகமிக மட்டுப்படுத்தப்பட்ட வாய்ப் புக்களிலும் காண்கின்றனர். இதனை அநியாயம் எனக் காண்கின்ற அவர்கள் இந்நிலைமையை மாற்றியமைக்க முனைகின்றபோது கொடூரமாக அடக்கி ஒடுக்கப்படுகின்றனர். இந்த அடக்குமுறையில் மேற்கத்திய அரசியல்வாதிகள் பங்குபற்றுகின்றனர். தமது பொது மக்கள் மத்தியில் இதனை நியாயப்படுத்துவதற்காக பிரச்சார வாசகங்

களையும் சொற்களையும் உபயோகிக்க அவர்கள் தயங்குவதில்லை. (அந்த மக்கள் தம் நாட்டின் உறுதி நிலையைக் குலைக்க எத் தனிக்கின்றனர் என்றோ எமது தேசிய நலன்களின் மீது ஆக்கரமிப்புச் செய்கிறார்கள் என்றோ சொல்வார்கள்) அவ்வாறு நியாயம் கோரு வோரைக் கம்யூனிஸ்டுகள் என்று அழைப்பது அண்மைக்காலம் வரை வசதியாக இருந்தது. கம்யூனிஸத்தின் வீழ்ச்சியின் பின்னர் இஸ்லாமிய அடிப்படைவாதிகள் என்ற புதிய லேபல் பயன்படுத்தப்படுகிறது.

பெரிய வர்த்தக கூட்டமைப்புகளுக்கும் பெரும் தனவந்தர்களுக் கும் சொந்தமான பாரிய தொடர்பூடக இயந்திரங்கள் பொதுமக்களின் சிந்தனையைத் திரிபுபடுத்தி வடிவமைப்பதில் ஈடுபட்டுள்ளன. எனவே மேற்குலகப் பொதுமக்கள் எவ்வித ஐயப்பாடும் இல்லாமல் இவற்றை விழுங்கிக்கொண்டு இதுவரை காலமும் தமது கொள்கை வகுப்பவர் களின் வழிமுறைகளையும் செயல்களையும் அனுமதித்து வந்திருக் கின்றனர். முதலாளித்துவத்தின் தீராத பசியும் அதன் பேராசை பிடித்த செயல் முறைகளும் அந்நியமான மக்கள் வாழும் மூன்றாம் உலகைச் சேர்ந்த தூர பிரதேசங்களுக்கு மட்டும் மட்டுப்படுத்தப்படவில்லை என்பதை உணர்ந்துகொள்ள அவர்கள் தவறியிருக்கிறார்கள். அரசாங்கமும் பெரிய வர்த்தகர்களும் 'வளர்ச்சியை அதிகரித்தல், மூலதனத்தைப் பெருக்குதல், பணத்தைப் பெருக்குதல்' ஆகிய தமது புனிதக் கோட்பாடுகளினால் உந்தப்பட்டு இதே அநியாயத்தை உள் ளூரில் தமது சொந்தப் பிரஜைகளுக்கும் செய்யாமல் இருக்கப் போவதில்லை. உற்பத்தித் துறையின் பெரும் பகுதியை உழைப்பு மலிவாகக் கிடைக்கும் தென் கிழக்காசியாவுக்கும் ஏனைய இடங் களுக்கும் இடமாற்றி மலிவாக உற்பத்தியைச் செய்து அதனைத் திருப்பி அமெரிக்காவுக்கு அனுப்பி அதிக விலைக்கு விற்பனை செய்யும் இவர்களது செயலை வேறு எப்படி விளக்கமுடியும்? இந்தச் செயல்முறையின் காரணமாக பல மில்லியன் அமெரிக்கத் தொழி லாளர்கள் வேலையிழந்து தொழில் இல்லாதோர் அணியில் சேர்ந் துள்ளனர்.

இந்தக் கடிவாளமற்ற முதலாளித்துவப் போக்கு முடிவின்றித் தொடர முடியாது. அது விரைவில் ஒரு முடக்க நிலையை அடையப் போகிறது என்பதையே எல்லாச் சான்றுகளும் காட்டுகின்றன. இச்சான்று கள் சாடப்படுகின்றன; புறக்கணிக்கப்படுகின்றன; மூடி மறைக்கப் படுகின்றன. எனினும் எதிரணியினர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவை இருக்கத்தான் செய்கின்றன. உலக வளங்களும், மூன்றாம் உலக மக்களும் என்ற இரண்டு தங்க முட்டைகளை இடும் வாத்து

அதிக காலம் உயிரோடிருக்காது. தாமதமின்றித் தீவிர மாற்றமொன்று நடந்தாலேயொழிய இந்தப் பூமி தொடர்ந்து நிலைக்க முடியாததாக மாறிவிடும்.

வெறுமனே விதிகள் மாறுவதைவிட உள்ளங்கள் மாற்றமடைவதே இங்கு தேவைப்படுகிறது. சடவாத மனப்பான்மை ஆதிக்கம் செலுத்தும் வரை நடக்கப்போவதைத் தாமதப்படுத்தக்கூடிய, அறிகுறிகளுக்கான தற்காலிகப் பரிகாரமொன்றைக் காணலாமேயன்றி அதனைத் தடுத்து நிறுத்த முடியாது. தற்கால சிந்தனைப்போக்கு மனித இடைத்தொடர்புகளை எங்களுக்கு எதிர் அவர்கள், வடக்குக்கு எதிர் தெற்கு, சுரண்டுபவருக்கு எதிர் சுரண்டப்படுபவர், தனவந்தருக்கு எதிர் ஏழை, வெள்ளையருக்கு எதிர் நிறத்தவர், எஜமானருக்கு எதிர் அடிமை (சேவகன்) என்கின்ற ரீதியில் அணுகும் வரை எதிர்காலம் பற்றி நம்பிக்கை வைக்கமுடியாது. மனித குலம் என்ற கப்பலின் ஆடம்பர மற்றும் முதல்வகுப்பு அறைகளில் இருக்கும் பிரயாணிகள் அதிகம் அதிகமாக பெறுமதியான பண்டங்களையும் ஆடம்பரப் பொருட்களையும் தேடிக் குவித்துக்கொண்டிருந்தாலும், அக்கப்பல் மூழ்கத்தான் போகின்றது.

வியத்தகு சுய மாற்றமொன்றினை அடைவதற்குத் தேவையான தூரநோக்கு, ஞானம், ஆற்றல் என்பன இன்றைய உலகின் அரசியல்வாதிகளிடமும் முதலீட்டாளர்களிடமும் இருக்குமா என்பது சந்தேகமே. தீங்கான இந்தப் போக்கில் அவர்கள் தொடர்ந்து சென்று மனித குலத்தை அதலபாதாளத்தின் விளிம்புக்கே வழிநடத்திச் செல்வதைக் காணக் கவலையாக இருக்கின்றது. வாக்காளர்கள் என்ற வகையில் இறுதியில் தீர்பபு வழங்கப்போகின்றவர்களான பொதுமக்களுக்குக் கல்வியூட்டுவதற்கான பெரும் இயக்கம் ஒன்றுதான் நம்பிக்கை தரக்கூடியதாக இருக்கும். புதிய மாற்றமொன்றுக்கான தேவை உருவாக்கப்பட்டால் அரசியல்வாதிகள் தம்மை மாற்றிக்கொள்ளவேண்டியிருக்கும்; அல்லது மாற்றத்திற்கான பாதையை விட்டு ஒதுங்கவேண்டி நேரிடும்.

இவையெல்லாவற்றுடனும் இஸ்லாத்துக்கு என்ன தொடர்பு? இஸ்லாமிய அறிஞர்களும் சிந்தனையாளர்களும் (இஸ்லாத்துடன் சம்பந்தப்பட்ட அனைத்தினதும் முகப்பாக தொடர்பூடகங்களால் சித்தரிக்கப்படும் பயங்கரவாதிகளும் தீவிரவாதிகளும் அல்ல) இஸ்லாமிய ஷரீ'ஆவின் அடிப்படையில் உலகப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான இஸ்லாமிய அமைப்பொன்றின் இயல்புகள் பற்றி பல தசாப்தங்களாகத் திட்டமிட்டு வருகின்றனர். இது முன்னொரு காலத்தில் வேறுபட்ட சூழல்களில் சிறப்பாகச் செயற்பட்ட அமைப்பினது நகலொன்றாக

இருக்காது. அத்தோடு அது தனியே இஸ்லாத்துக்கு மட்டும் உரியது என்றோ கண்டிப்பாக முஸ்லிம்களுக்கென நிர்ணயிக்கப்பட்டது என்றோ கருதிவிடவும் கூடாது. மனித குலத்தின் நலன் என்பது எல்லோருக்கும் பொதுவானது. குறுகி வரும் இடைத்தொடர்புகள் கொண்ட இவ் வுலகைப் பொறுத்தமட்டில் நாம் அனைவரும் ஒரே தலை விதியைத் தான் எதிர்கொள்கிறோம். இந்தத் திட்டத்தின் பிரதான சிறப்பியல்புகள் கீழே விவரிக்கப்பட்டுள்ளன.

### மனிதன் மீதான ஆதிக்கம்

இந்த அகிலத்தின் அதி உத்தம ஜீவன் மனிதனல்லன். ஆனால் அவன் அதிஉத்தமமானவனாகிய இறைவனுக்குப் பொறுப்புக்கூற வேண்டியவனாக இருக்கின்றான். தொஸ்தோயெவ்ஸ்கி சொன்னது போல் இறைவன் இல்லையேல் எல்லாமே சாத்தியமாகிவிடும்; எதை வேண்டுமானாலும் சரியெனக்காட்டி நியாயப்படுத்திவிட முடியும். மனிதன் இறைவனை ஆட்சியிலிருந்து இறக்கிவிட்டு சுயவழிபாட்டில் இறங்கிவிட்டான். இந்த அகிலத்தில் இறைவனின் பிரதிநிதியாகவும் நம்பிக்கைப்பொறுப்பாளனாகவுமே மனிதன் இருக்கிறான். இதன்படி தனது சொந்த உந்துதல்களுக்கும் இச்சைகளுக்கும் இணங்கவன்றி, படைத்தவனின் அறிவுறுத்தல்களுக்கு ஏற்ப இப்பூமியை நிர்வகிக்கும் விதத்தில் இயற்கையின் மீதான முழு அதிகாரமும் அவனுக்குக் கிடைக்கின்றது. அறிவியலோ (இது இன்னும் ஆரம்பப் பருவத்தில் இருக்கும் ஒரு கருவி) அகந்தையோ (இது ஒரு கொலைப் பொறி) மனிதனை இறைவனின் பாத்திரத்தை ஏற்குமாறு செய்யக்கூடாது - இந்த விடயத்தில் மனிதன் புத்தியோடு நடந்துகொள்ள முடியுமானால் சரி.

### பொருட்களின் உரிமை

இறைவனே சிருஷ்டிக்கர்த்தா என்பதனால் எல்லாவற்றுக்கும் இறுதிச் சொந்தக்காரன் அவனே. எங்களுடைய உரிமை இரண்டாம் பட்சமானது. சட்டரீதியான ரீதியில் சொத்துக்களை சொந்தமாக்கிக் கொள்ளவும் செல்வத்தைப் பெருக்கவும் எமக்குச் சுதந்திரம் உண்டு- செல்வத்துக்கு உரிமைகள் மட்டுமின்றிக் கடமைகளும் உண்டு என்பதை நாம் உணர்ந்துகொண்டிருப்பின் செல்வம் சேகரிப்பதற்கு வரையறையே கிடையாது. செல்வத்தின் செயற்பாடு - முடிவின்றிப் பெருகுவது மட்டுமல்ல; சமூகத்துக்குரிய பொறுப்புக்களை நிறைவேற்றுவதும் அதற்குரியது.

தனிமனிதனுக்கும் சமூகத்துக்கும் இடையில் தவிர்க்கமுடியாத மோதல் இருக்கிறது என்ற (கம்யூனிஸம், முதலாளித்துவம் ஆகிய இரண்டினதும்) எடுகோளுக்கு இஸ்லாத்தில் இடம் கிடையாது. இஸ் லாத்தில் இவையிரண்டுக்கும் இடையில் நுட்பமான சமநிலை பேணப் படுவதோடு அனைத்துக்கும் நியாயம் வழங்கப்படுகிறது. இந்தச் சமநிலை வெறுமனே சட்டத்தின் வலிமையினால் அன்றி இறைவனின் திருப்தியைப் பெறவேண்டும் என்ற வலிமையான ஆசையின் காரண மாகவே பேணப்படுகின்றது. இந்த ஆசையினாலேயே கொடை கொடுப் பவனுக்கு ஈகை தொடர்ந்து மகிழ்ச்சி தருவதாக அமைகிறது. இந்தச் சமன்பாட்டில் இறைவன் உயிர்ப்பான நிதர்சனமாக எப்போதும் இருக் கின்றான். இந்தக் கருத்தானது, சடவாதக் கண்ணோட்டத்தின்படி பொருத்தமற்றதாகவும் முற்றாக அர்த்தமற்றதாகவுமே தெரியும்.

வறியவர்களின் ஜீவனோபாயத்தை இறைவன் தனவந்தர்களின் செல்வத்தில் சேர்த்திருக்கின்றான் என்பதே இஸ்லாத்தின் நிலைப்பாடு. நவீன உலக ஒழுங்கமைப்பொன்றில் இக்கோட்பாட்டை சர்வதேச மட்டத்திற்கு விரிவாக்கலாம். இப்புதிய ஒழுங்குமுறை சாத்தியமானது மட்டுமின்றி அடையக்கூடியதாகவும் உள்ளது. எனினும் பெறுமானங் களில்லாத கல்வி முறையினாலோ, பெருகிவரும் தொடர்பூடகங்களின் கருத்துத் திணிப்புக்களினாலோ அல்லது அநியாயங்களைச் சகித்துக் கொள்ளும் சமூக அமைப்பின் கீழோ இதனை அடையமுடியாது. இன்று எந்தளவுக்குச் சமூகம் ஒன்றிலொன்று தங்கியிருக்கிறது, ஒன்றிணைந்திருக்கிறது எனில் செல்வத்தின் உச்சத்தில் இருப்பவர் களோ, வறுமையின் பாதாளத்தில் இருப்பவர்களோ ஒருவர் மற்றவரில் தங்காது தனித்து வாழ முடியாமல் இருக்கிறது.

ஒரு மனிதன் வறுமையினால் இறந்தால், அந்த ஊரின் மக்கள் அவனைத் தாம் கொன்றது போல் நினைத்து அவனுக்காக விடுவிப்புப் பணம் வழங்கவேண்டுமென பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னர் இஸ்லாத்தின் இரண்டாவது கலீபா உமர் ஆணையிட்டிருந்தார். இறை தூதர் கூறியது போல் சமுதாயம் என்பது ஓர் உடல் போன்றது. ‘‘ஓர் அங்கம் அவதியுறும் போது ஏனையவை அதன் உதவிக்குச் செல்ல வேண்டும்.’’ அடிப்படைச் சௌகரியங்களோடு வாழும் உரிமை ஒவ்வொரு பிரஜைக்கும் உண்டு - (வெறுமனே பிழைத்து வாழும் அளவிலல்ல) அடுத்தவர்களது தர்மத்தில் வாழ்வது ஊக்குவிக் கப்படவில்லை. எனவே தனியாள் உரிமையில் வருவாய்தரக்கூடிய தொழில்வாய்ப்பும் அடங்கும். உழைப்பாளர் பற்றாக்குறையை நிவர்த்தி செய்யும் ஒரு வழியாக உழைப்பைச் சிக்கனப்படுத்தும் தொழில்

நுட்பங்கள் அனுமதிக்கப்பட்டுள்ளன. ஆனால் வெறுமனே தொழில் சிக்கனத்துக்காகத் தொழிலாளர்களை வேலையிழக்கச் செய்ய முடியாது. இயந்திரங்களைவிட மனிதனுக்கே முன்னுரிமை உண்டு. அதேபோல் தனியார் நலனை விட கூட்டு நலனுக்கே முன்னுரிமை வழங்கப்படும் என்பதே நியதி. தொழில்நுட்ப முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்துதல் என்பது இதன் பொருளல்ல. எனினும் அது உழைப்போடு கைகோர்த்துச் செல்வதன் மூலமே அதன் விளைவு களைக் கட்டுப்படுத்த முடியும். தொழிலாளர்கள் தமது கம்பனியின் பங்குகளைக் கொள்வனவு செய்வதற்கு ஊக்குவிக்கப்பட்டு உதவி செய்யப்படுவதன் மூலம் உழைப்பு, மூலதனம் என்ற முனைவாக்கம் மங்கச்செய்யப்படலாம். இதனூடாக தமது கம்பனியின் முன்னேற் றத்தில் அவர்கள் உண்மையான ஆர்வமுடையவர்களாக இருப்பர்.

பணத்தை ஏதேனுமொரு உற்பத்தியோடு இணைத்தே அல் லாமல் வெறுமனே பணத்தையே பண்டமாக வைத்துப் பணம் சம்பாதிக்க முடியாது என்பது இஸ்லாத்தின் இன்னொரு விதியாகும். இதனால்தான் வட்டி இஸ்லாத்தில் விலக்கப்பட்டிருக்கிறது. அண்மைக் காலத்தில் வட்டியில்லா வங்கி முறை பற்றி நிறைய எழுதப்பட்டிருக் கிறது. இஸ்லாமிய நாடுகளில் மட்டுமன்றி ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும்கூட இது வெற்றிகரமாக முன்னெடுத்துச் செல்லப் பட்டிருக்கிறது.

### மனித சமத்துவம்

ஆதம், ஹவ்வா ஆகிய பொதுவான ஆதிப் பெற்றாரிலிருந்து தோன்றிய ஒரே குடும்பமே மனித குலம் என்று வலியுறுத்தப்பட்டு இளவயதிலிருந்தே பிள்ளைகளுக்குப் போதிக்கப்படவேண்டும். மனிதர் இயல்பாகவே சமமானவர்கள் என்ற எண்ணக்கருவும் இதனோடு சேர்த்துப் போதிக்கப்படவேண்டும். வெள்ளையர்கள் (ஆரியர்கள்) ஏனைய இனத்தினர்களைவிட உயர்வானவர்கள் என்று நிரூபிப்பதற்குச் சான்றுகளாக ஒரு காலத்தில் அறிவியலும் சமயமும் ஐரோப்பாவில் (அமெரிக்காவிலும்கூட) தவறாக உபயோகிக்கப்பட்டது ஒரு துர்ப் பாக்கியமே. இந்த உரிமை பாராட்டலுக்கு உபயோகிக்கப்பட்ட சான்று கள் இப்போது செத்து மடிந்துவிட்டன. எனினும் அதன் மரபு இன்னும் தொடர்கிறது. மேற்கிலுள்ள பெரும்பாலான ஆலயங்களில் யேசுநாதர் நீல விழிகளும் பொன்னிற முடியும் கொண்ட வெள்ளையராக சித்தரிக் கப்பட்டிருக்கிறார். அவர் பிறந்த பலஸ்தீனில் வாழும் கருங்கபில முடி கொண்ட மாநிற மக்களின் இயல்புகளுக்கு இது முற்றிலும் முரணானதாக இருக்கிறது.

மேற்கத்திய வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் இனவாதம் முனைப்பாகக் காணப்படுகிறது. அதனை மாற்றியமைப்பதற்குத் தேவையான மனத்திடம் இன்னும் உருப்பெறவில்லை. அமெரிக்கா விலே சிவில் உரிமைகளைப் பெறுவதற்கான கடும் போராட்டம் பல தசாப்தங்களாக நடந்துகொண்டிருக்கிறது. ஓரளவு முன்னேற்றம் தெரியக்கூடியதாக இருப்பினும் அடிமைத்துவத்தின் கசப்புணர்வு மறைந்துவிட்டதாகச் சொல்லிவிட முடியாது. சமத்துவம் என்பது சில சட்டரீதியான நியமங்கள் அல்ல. அது உள்ளத்தின் அடிப்படை நிலையொன்றாகும்.

வெள்ளையரது நாகரிகத்தின் வரலாற்றிலே கறைபடிவித்த அடிமைத்துவ அத்தியாயம் பற்றி வெள்ளையர் எவரும் மனம் வருந்திக் கூறுவதை இதுவரை அமெரிக்காவிலுள்ள கறுப்பர் எவரும் செவிமடுத்ததில்லை. (வெள்ளையரல்லாத ஜப்பானிய அமெரிக் கர்களிடம் இரண்டாம் உலகப்போரின் போது அவர்களைத் தடுத்து வைத்ததற்கான மன்னிப்பு கோரப்பட்டு நஷ்டஈடும் வழங்கப்பட்டது) இனப் பிரச்சினைகள் தொடர்ந்தும் வெடித்துக்கொண்டிருக்கின்றன. அவை மனம் வருந்தக்கூடியனவாக இருப்பினும்கூட, இந்த வன் முறைச் சம்பவங்களில் ஈடுபடுவோர் கூறும் காரணங்களில் ஓரளவு நியாயம் இருக்கத்தான் செய்கிறது. இந்த வகையில் 1992 ஏப்ரலில் லொஸ் ஏன்ஜலிஸ் நகரில் நிகழ்ந்த கலவரத்தைச் சுட்டிக்காட்டலாம்.

அமெரிக்கக் கறுப்பர்களின் நிலைமையை மேம்படுத்த நட வடிக்கை எடுக்குமாறு கோரப்படும் ஒவ்வொரு வேளையிலும் அதற் காக எடுக்கப்படும் பதில் நடவடிக்கை குறுகிய காலத்துக்கு நன்மை பயத்தாலும் பிரச்சினைக்குரிய மூலகாரணம் அணுகப்படுவதில்லை. துப்பாக்கித் தோட்டாக்களோ டொலர்களோ ஒருபோதும் நிரந்தரத் தீர்வுகளைக் கொண்டுவரப்போவதில்லை. ஒவ்வொரு மனிதரும் தமது இதயத்தின் ஆழத்தில் ஒவ்வொரு அடுத்த மனிதரையும் அன்புக்குரிய சமமான சகோதர சகோதரி என உணர்ந்து விசுவாசிப்பதன் மூலம் தான் உண்மையான மாற்றம் நிகழமுடியும். இதனைச் சட்டத்தினால் நடைமுறைப்படுத்த முடியாது. இது கல்வியின் ஒரு பணியாக இருக்கவேண்டும். எவ்வித தடைச் சுவர்களினாலும் பிரிக்கப்படாத, ஐக்கியமும் கருணையும் கொண்ட சமூகமொன்றை உருவாக்குவதை நோக்காகக் கொண்ட முற்றுமுழுதான கல்விப் புரட்சியொன்றின் மூலமே எமது உலகை மாற்றியமைக்க முடியும். இத்தகைய சமூகம் தனது தேசிய எல்லைகளுக்குள் மட்டுமன்றி உலகளாவிய மட்டத் திலும் சுதந்திரம், சகோதரத்துவம், சமத்துவம் என்பவற்றுக்குப் புத் துயிரும் முக்கியத்துவமும் கொடுப்பதாக அமைதல் வேண்டும்.

நவ காலனித்துவ நாடுகளில் நிகழும் மீள் கல்வியூட்டலானது மூன்றாம் உலகை விருத்திசெய்வதற்கான அவற்றின் முயற்சிகளோடு ஒன்றிணைக்கப்பட்டால்தான் மாற்றத்தை ஏற்படுத்தலாம். ஐரோப்பா தனது விவசாயிகளுக்கு வழங்கும் மானியத்தின் தொகை பட்டினியை உலக அரங்கிலிருந்தே ஒழிப்பதற்குரிய விதத்தில் மூன்றாம் உலகிலே திருப்பத்தை ஏற்படுத்தப் போதுமானது என மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. ஐரோப்பாவில் பல்வேறு நாடுகளின் முன்னாள் அமைச்சர்களையும் பிரதம மந்திரிகளையும் கொண்ட கூட்டமொன்றில் மேற்படி கருத்து சமர்பிக்கப்பட்டபோது அது முற்றாகப் பரிகசிக்கப்பட்டு நிராகரிக்கப்பட்டது. மானியங்களை ஒழிப்பதோ, மூன்றாம் உலகத்தை அபிவிருத்தி செய்வதோ முக்கிய தெரிவுகளாகக் கருதப்படவில்லை. முன்னையது சமயோசித அரசியல் காரணங்களுக்காகவும் பின்னையது அரசியல் தந்திரோபாயத்துக்காகவும் நிராகரிக்கப்பட்டன.

## சுய கட்டுப்பாட்டின் அவசியம்

மனிதர்களுக்கே தனித்துவமாக உள்ள சுய கட்டுப்பாட்டுக்கான ஆற்றல் விரைவாக அரிக்கப்பட்டுக்கொண்டிருப்பதனால் அது மீள நிலைநிறுத்தப்படவேண்டும். மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் இடையிலான பிரதான வேறுபாடொன்றாக அது விளங்குகின்ற போதிலும் நவீன கால மனப்பாங்குகள் அதனை சீர்குலைத்துள்ளன. நெடுஞ்சாலையொன்றில் சென்றுகொண்டிருந்த கார்களை நோக்கி துப்பாக்கியால் சுட்டு சிலரைக் கொலை செய்ததற்காகக் கைது செய்யப்பட்ட ஓர் இளைஞனால் ''எனக்கு யாரையாவது கொல்ல வேண்டும் போலிருந்தது'' என்ற விளக்கத்தை மட்டுமே கொடுக்க முடிந்தது. இது ஒரு தனியான உதாரணமல்ல. திடீர் மனத்தூண்டுதல்களால் ஏற்படுகின்ற நாசகார நடத்தை இன்று பொதுவான சமூக நிகழ்வாக மாறியிருப்பதைக் குற்றச்செயல்கள் பற்றிய புள்ளிவிபரங்கள் எடுத்துக்காட்டுகின்றன. செய்தித்தாள்களை வாசிப்பவர்களும் செய்தி பார்ப்பவர்களும் இதனை உறுதிப்படுத்துவார்கள். உறுதியான பெறுமானத் தொகுதியொன்று இல்லாமையும் அதன் விளைவாக திடீர் உந்துதல்களையும் உளத்தூண்டுதல்களையும் தடுத்துக்கொள்ள முடியாமல் இருப்பதும் படிப்படியான சமூக அழிவுக்கு வழிவகுக்கும் காரணிகளாக அமைந்துள்ளன.

மாற்றத்துக்கான திறவுகோலை நாம் கல்வியிலும் தொடர்பு ஊடகங்களிலும் கண்டுகொள்ளலாம். எனினும் கல்வியானது அறிவைக் கொண்டதாக மட்டும் அமையாமல் எது சரி என்பது பற்றிய

விசுவாசத்தையும் ஓர் உயர் அதிகாரிக்குப் பொறுப்புக்கூற வேண்டும் என்ற உணர்வையும் கொண்டிருக்கவேண்டும். அப்போது மாத்திரம் தான் பெரும்பாலானவர்கள் தமது மனச்சாட்சிக்கு முழுமையாகத் தலை சாய்ப்பார்கள். முஸ்லிம்களும் ஏனையோரும் விசுவாசிப்பது போன்று நியாயத் தீர்ப்பு நாளொன்று இருக்குமானால், வன்முறை, ஆபாசம், காமவிகாரம் போன்றவற்றை பகிரங்கப்படுத்தி ஊக்கு விக்கின்றதில் தங்கள் பங்களிப்புப் பற்றி விசாரிப்புக்கு முகங் கொடுக்கவேண்டிய ஊடகக் கம்பனி உரிமையாளர்கள் பற்றி யாரும் வியந்து போற்றமாட்டார்கள். சிந்திக்கத் தகாதன பற்றி, எவ்வித சங்கடமுமின்றிப் பேசத் தொடங்கினால் அவை சிந்திக்கத் தகுந்தன வாக மாறிவிடும். பின்னர் எங்கள் இளம் பிள்ளைகள் அவற்றைத் துருவித் தேடிப் பரிசோதனை செய்து பார்த்து இறுதியில் கட்டற்ற உடலுறவும், துஷ்டத்தனமும் சமூகத்தில் கைவிடமுடியாத பழக்கங் களாக மாறிவிடும்.

துரதிஷ்டவசமாக சில நாடுகள் தாம் அளவுமீறிய பலம் கொண்டனவாகவும் தமது பகை நாடுகள் நலிவுற்றனவாகவும் இருக்கும் போது அப்பட்டமான பலத்தைப் பிரயோகித்து தங்கள் இளம் சமுதாயத்துக்கு மறைமுகமான முறையில் முன்மாதிரி காட்டிக் கொடுக்கின்றன. ஆக்கிரமிப்பு என போலிக் குற்றம் சுமத்தி பெரிய இராணுவ வல்லரசுகள் எதிர்ப்பே காட்டமுடியாத நாடுகளை அடக்கும் போது பெறுமானங்களையும் கொள்கைகளையும் நழுவவிட்டுவிடு கின்றன. அதன் விளைவாக மேலும் மோசமான ஆக்கிரமிப்புத் தொட ரும். இறுதியில் ‘‘எடுத்த பணியை முடிப்பது எளிதல்ல’’ என்று கூறி அந்த வல்லரசுகள் பின்வாங்கிக்கொள்ளும். மனிதர்களைத் தாக்கும் போதும் அவர்களைப் பாதுகாக்கத் தவறும் போதும் மனித உயிர் துச்சமாகவே மதிக்கப்படுகிறது. 1991 வளைகுடா யுத்தத்தின்போது ஓர் இராணுவத் தலைவர் கூறிய ‘‘சடலங்களை எண்ணுவது எங் களுடைய வேலையல்ல’’ என்ற கூற்று எத்தனையோ செய்திகளை வெளிப்படுத்துகிறது. இங்கு அவர் குறிப்பிட்டது எதிர்த் தரப்பினரின் சடலங்கள் பற்றியே.

### போரும் சமாதானமும்

போர் தொடர்பான இஸ்லாமிய விதிகள் மிகத் தெளிவானவை. இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களே இதனை தெளிவாக விளக் கியிருக்கின்றார்கள். அது பாதுகாப்புக் கருதியதாக இருக்கவேண்டும் அல்லது அடக்கு முறையை ஒழிப்பதாக இருக்கவேண்டும். இப்போதும்

இதனை நியாயமான காரணம் என்கின்றனர். எப்படியிருப்பினும் அப்பாவிக் குடிமக்களுக்கோ சூழலுக்கோ தீங்கு செய்யாததாக அது அமைதல் வேண்டும். ஆக்கிரமிப்புக்கு எதிராகக் கூட்டுச் சேர்தல் பற்றி குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது. *விசுவாசிகளில் இரு கூட்டத்தார் தங்களுக்குள் சண்டை செய்துகொண்டால் அவ்விருவருக்கிடையே சமாதானம் செய்து வையுங்கள். அவர்களில் ஒரு கூட்டத்தார் மற்றொரு கூட்டத்தார் மீது (அக்கிரமம் செய்து) வரம்பு மீறினால், அக்கூட்டத்தவர் இறைவனுடைய கட்டளையின்பால் திரும்பும்வரை நீங்கள் போர் செய்யுங்கள். அவர்கள் (அவ்வாறு) திரும்பாவிட்டால் அவ்விருவருக்கிடையே நீதியைக்கொண்டு சமாதானம் செய்து வையுங்கள். (இதில்) நீங்கள் நீதியாகவும் நடந்துகொள்ளுங்கள். நிச்சயமாக இறைவன் நீதியாளர்களை நேசிக்கின்றான் (49:9)*

நியாயமான காரணம் ஒன்றுக்காக முஸ்லிம் அல்லாதோருடனும் கூட்டுச் சேரலாம். அவிசுவாசிகளிடமிருந்து கூட்டாக மதீனா நகரைப் பாதுகாப்பதற்காக யூதர்களுடன் இறைதூதர் செய்துகொண்ட உடன்படிக்கை இதற்கோர் உதாரணம். இஸ்லாத்துக்கு மிக முந்திய காலத்தில், ஒடுக்கப்பட்டவர்களுக்கு ஆதரவு வழங்குவதற்காக மக்காவிலிருந்த கோத்திரங்களுக்கிடையே செய்யப்பட்டதாக இறைதூதர் குறிப்பிட்ட ஓர் ஒப்பந்தம் இன்னோர் உதாரணம். ‘‘அந்த கூட்டுச் சேர்வு இஸ்லாத்துக்கு முன்னர் நிகழ்ந்த ஒன்று. எனினும் இஸ்லாத்தில், நான் அவ்வாறு அழைக்கப்பட்டிருந்தால் நான் அதில் சேர்ந்துகொண்டிருப்பேன்’’ என அன்னார் கூறினார்கள். இறைதூதர் அவர்கள் தமது படையினருக்கு வழங்கிய அறிவுறுத்தல்கள் கண்டிப்பானவை. சண்டையிடுவோருக்கு எதிராக மட்டும் அவர்கள் போரிட வேண்டுமேயின்றிப் பெண்களுக்கும், சிறுவர்களுக்கும், முதியோருக்கும் எதிராகவல்ல என்பது வலியுறுத்தப்பட்டது. தங்கள் ஆசிரமங்களில் அல்லது வழிபாட்டுத் தளங்களில் இருக்கும் முஸ்லிம் அல்லாத மதகுருமாருக்கும் தீங்கிழைக்கப்படக்கூடாது என்றும், யுத்த நடவடிக்கையாக எதிரிகளின் மரங்கள் வெட்டப்படவோ எரிக்கப்படவோ கூடாது என்றும் உணவுத் தேவைக்காகவன்றி மிருகங்கள் கொல்லப்படக்கூடாது என்றும் ஆணையிடப்பட்டது. இந்த அறிவுறுத்தல்களை நோக்கும் போது, நவீன யுத்த நிலைமைகளில் இவ்வுன்னதமான இஸ்லாமிய நெறிகளை அமுல் நடத்துவதற்கு விசேட முயற்சி தேவைப்படுகிறது. இறுதியாக முதலாம் உலகப் போரின் போதுதான் சண்டைகளைப் போரிடும் இராணுவங்களுக்கிடையில் மாத்திரம் ஓரளவு மட்டுப்படுத்திக்கொள்ள முடிந்தது. 1930களில் இடம்பெற்ற ஸ்பானிய உள்நாட்டுப்போர்

தொடக்கம் விதிகள் மாறத் தொடங்கின. இரண்டாம் உலகப்போரிலும், கொரிய யுத்தம், வியட்னாம் யுத்தம் என்பவற்றிலும் இதற்காண சான்றுகளைக் காண முடிந்தது. ஹிரோஷிமாவிலும் நாகசாக்கியிலும் போடப்பட்ட இரண்டு அணுகுண்டுகளும் இதற்குச் சான்று பகர்கின்றன. வியட்னாம் யுத்தத்தின்போது இடம்பெற்ற முழுப்பரப்பையும் இலக்கு வைத்த குண்டு வீச்சுக்களும், சுதந்திர சுடு வலயங்களும் மனிதர்கள், விலங்குகள், தாவரங்களை மட்டுமன்றி அந்த நிலத்தின் மண்ணையே நாசமாக்கின.

எனவே மேற்சொன்ன இஸ்லாமிய யுத்த நெறிகள் வெறும் கொள்கை ரீதியானவை மட்டுமே என்றும் நவீன உலகுக்குப் பொருந் தாது என்றும் சிலர் நினைக்கக்கூடும். முஸ்லிம்களும் ஏனையோரும் இதனை வேறு கண்ணோட்டத்தில் நோக்குகின்றனர். நவீன யுத்தங்கள் பேரழிவை ஏற்படுத்துவதனால் பிணக்குகளுக்குத் தீர்வு காண்பதில் யுத்தம் ஒரு தெரிவாக அமையக்கூடாது. அடிமைத்தளை ஒழிந்தது போல் யுத்தம் ஒழிக்கப்படவேண்டும். ஓர் உக்கிரமான இராணுவத் தாக்குதலின் போதே நவீன உலக ஒழுங்கமைப்பு அறிவிக்கப்பட்டது என்பது ஒரு கெட்ட சகுனமே. அதனைத் தொடர்ந்து எடுக்கப்பட்ட முடிவுகள் இந்தப் புதிய ஒழுங்கமைப்பில் புதிதாக இருப்பது பழைய உலக அமைப்பிலிருந்த இரு எதிரிகளுக்குப் பதிலாக எதிரி ஒன்றாக இருப்பது மட்டுமே என்ற சந்தேகத்தை எழுப்புகின்றது.

என்றுமில்லாதவாறு மனித குலம் நாகரிகத்தின் உச்சத்தை அடைந்து புதிய மில்லென்னியத்தை எதிர்கொண்டிருக்கும் இவ்வேளை யில் போர்களற்ற, நியாயமான சமாதானத்திற்கான மாற்று வழிகளைக் கொண்ட புதிய உலக ஒழுங்கொன்றை உருவாக்குவது தொடர்ந்தும் வீண் கனவாக இருக்கப்போவதில்லை.

நாடுகளுக்கிடையிலான முரண்பாடுகளைச் சுயாதீனமான நீதிமன்றங்களால் ஏன் தீர்த்துவைக்க முடியாது? யுத்தம் என்பது சரியையும் தவறையும் பிரித்துக்காட்டுவதல்ல. யார் மேலானவர், யாரிடம் அதிகம் நாசகார பலம் இருக்கிறது என்பதைத்தான் அது காட்டும். நேர்மையான, பக்கச்சார்பற்ற முறையில் பிணக்குகளை அணுகக்கூடிய நீதிமன்றங்களை நிறுவமுடியுமானால் நியாயமான, நேர்மையான முறையில் பிணக்குகளைத் தீர்த்துவைப்பது சாத்திய மாகிவிடும். (ஐக்கிய நாடுகள் சபையும் அதன் பாதுகாப்புச் சபையும் இதற்குள் அடங்கமாட்டா) நாகரிகமடைந்த நாடுகள் நாகரிகமான முறையில் நடந்துகொள்வதில்தான் இதுபோன்ற யோசனைகளின் வெற்றி தங்கியிருக்கிறது. உண்மையே தேவை. தாம் உண்மைக்கு

எதிரானவர்கள் என யாரும் கூறமாட்டார்கள். ஆனால் அதுதான் யதார்த்த நிலையாக இருக்கிறது. உண்மை என்பது ஒரு பெறுமானம். கவலைக்குரிய விதத்தில் அரசியல்வாதிகள் உண்மையைக் கண்டு கொள்ள மறுப்பதே இன்று நாம் எதிர்நோக்கும் பெரிய அச்சுறுத்தலாக இருக்கிறது.

பலசாலிகள் சட்டத்தினால் தீர்மானிக்கப்பட்டபடி நீதிக்கு அடி பணியப் போகிறார்களா அல்லது வல்லமையே சரியாகும் என்று பிடிவாதம் பண்ணப் போகிறார்களா? அடிக்கடி எங்கோ ஓரிடத்தில் நடக்கும் போர்களை வைத்துக்கொண்டு இராணுவ உற்பத்தியாளர்கள் தம் இருப்பை நியாயப்படுத்துவதைக் கைவிடப் போகிறார்களா? உலக வளங்களைப் பகிர்நதுகொள்வதிலும் அவற்றை மீள உருவாக்கு வதற்குரிய செலவைப் பகிர்ந்துகொள்வதிலும் நீதி நியாயத்தை ஏற்றுக்கொள்ளப் போகின்றார்களா? நிச்சயமாக இல்லை. இவையெல்லாம் இன்றைய புதிய உலக ஒழுங்கின் எஜமானர்களுக்கு முற்றிலும் அபசாரமானவையாகவே தோன்றும். மாற்றம் ஏற்படும் வரை இந்நிலை நீடிக்கும். ஆனால் மாற்றம் மேல்மட்டத்திலிருந்து வரப்போவதில்லை. அது கீழிருந்து மேல்நோக்கித்தான் வரவேண்டும்.

### சூழலியல்

அபிவிருத்தியடைந்துவரும் நாடுகளில் வாழும் மனித குலத்தின் வறிய பகுதியினர் தமது உணவைக் கொள்வனவு செய்வதற்காகப் பணம் சம்பாதிப்பதற்கும், தங்கள் கடன்களைச் செலுத்தவும், தம் இராணுவத்துக்கு ஆயுதங்கள் வாங்கவும், தங்கள் சர்வாதிகாரிகளைப் பாதுகாப்பதற்கும், தங்கள் ஆட்சியாளர்களினதும் உயர் வகுப்பினரதும் பேராசைகளைத் தீர்ப்பதற்கும் தம் இயற்கை வளங்களை அளவுக்கு மீறிச் சுரண்டும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளனர். மனிதகுலத்தின் வளமிக்க பகுதியிலோ பணக்காரரின் நுகர்வுப்போக்கை மேம்படுத்து வதற்காகச் செல்வந்தரை மேலும் செல்வந்தராக்கவும் அவர்களது ஆடம்பரங்களைப் பெருக்கிச் சுகபோகங்களில் திளைக்கச் செய்வதற் காகவும் கைத்தொழில்மய நாடுகளில் சூழல் மீறப்பட்டு, நஞ்சூட்டப்பட்டு நாசமாக்கப்படுகிறது. முன்னெப்போதும் இல்லாத விதத்தில் உயிர்க்கோளத்தில் பாரதூரமான முறையில் செல்வாக்குச் செலுத்தும் வல்லமையை அறிவியலும் தொழில்நுட்பமும் பெற்றுக்கொண்டுள்ள இக்காலத்தில்தான் இது இடம்பெறுகிறது. அத்தோடு இது சமாதான காலத்தில் நடக்கின்றது. நவீன யுத்தங்கள் பெரிய அளவில் நடந்தால் விளையக்கூடிய அழிவுரீதியான நிரந்தர சேதம் இங்கு சேர்க்கப்பட வில்லை. நாம் ஊதாரித்தனமான விதத்தில் வருங்காலத்திலிருந்து

இரவல் வாங்கிக்கொண்டிருக்கிறோம். எமது எதிர்காலச் சந்ததிகளால் தீர்த்துவைக்க முடியாத அளவுக்கு நாம் கடன் வாங்கிக்கொண்டிருக் கிறோம் என்பதை நியாயமான மதிப்பீடுகள் எடுத்துக்காட்டுகின்றன. இதற்கான பரிகார நடவடிக்கைகளும் நடைமுறைச் சாத்தியமான ஆலோசனைகளும் முன்வைக்கப்பட்டுள்ளன. எனினும் எதிர்பார்த்தபடி ஆட்சியின் கடிவாளத்தைக் கையில் வைத்துக்கொண்டு கட்டற்ற, பேராசை பிடித்த, சுயநலமான, பேருண்டி விரும்பியான, குறும் நோக் குடைய முதலாளித்துவத்தின் பாதுகாவலர்களே இவற்றுக்குத் தடைக்கற்களாக இருக்கின்றனர். *''மேலும் இவ்வுலக வாழ்க்கையில் எவனுடைய கூற்று உம்மை ஆச்சரியத்தில் ஆழ்த்துமோ அவனும் மனிதர்களில் இருக்கின்றான். அவன் தன் இதயத்திலுள்ளவற்றின் மீது இறைவனைச் சாட்சியாக்குவான். அவன்தான் கடும் தர்க்கம் செய்பவன். அவன் திரும்பிவிட்டால், பூமியில் குழப்பம் விளைவிக்கவும் விவசாயத்தையும், சந்ததியையும் நாசமாக்கிவிடவும் அதில் முயற்சி செய்கின்றான். இன்னும் இறைவன் குழப்பத்தை விரும்பமாட்டான்.'' (2:204-205)* என்று குர்ஆன் கூறுகிறது.

பெரு வர்த்தகங்களின் கடுமையான எதிர்ப்புக்கு மத்தியிலும், அரசியல் வட்டத்துக்குப் புறம்பான சூழலியல் இயக்கம் படிப்படியாக வலுப்பெற்று வருகின்றது. 1990 ஆண்டு புவித் தினத்தில் 140 நாடு களில் சுமார் 10 கோடி மக்கள் அடிமட்ட ஆர்ப்பாட்டங்கள் செய்ய முன்வந்தனர். இதனை அரசியல்வாதிகள் அலட்சியம் செய்ய முடி யாது. இல்லையேல் அவர்கள் வாக்குகளை இழந்துவிடுவர். உலக அரசாங்கங்கள் பங்குபற்றுகின்ற உலக சூழலியல் முகவர் அமைப் பொன்றை உருவாக்கவேண்டிய காலம் வந்திருக்கிறது. அரசாங் கங்கள் இதன் சிபாரிசுகளுக்குத் தாமே விரும்பி இணங்குவதாக முன்கூட்டியே ஒப்புக்கொள்ள வேண்டும். இந்தச் சிபாரிசுகள் நீதி நியாயத்துக்கு முரணானவையாக இருக்கக்கூடாது.

## சனத்தொகைப் பிரச்சினை

கிடைக்கக்கூடிய வளங்களை மிஞ்சும் வேகத்தில் உலகின் சனத்தொகை வளர்ந்துகொண்டிருக்கிறது. எனவே சனத்தொகைப் பெருக்கம் பற்றிய கவலைகள் நியாயமானவையே. சனத்தொகை அதிகரிப்பில் பெரும் பகுதி மூன்றாம் உலகில் நிகழ்வதால், அது பொறுப்பின்றி நடந்துகொள்வதாக மேற்குலகு அதன்மீது குற்றம் சுமத்துகிறது. இது தொடர்பாக ஒழுங்கு நடவடிக்கைகள் எடுப்பதும் ஆலோசிக்கப்பட்டு, ஐக்கிய அமெரிக்கா உட்பட உதவி வழங்கும்

நாடுகள், வழங்கப்படும் உதவியை கருவளச் சீராக்கல், குடும்பத்திட்ட அடைவுகள் என்பவற்றோடு பிணைக்க ஆலோசித்து வருகின்றன. டாக்டர் ஜீன் மார்ட்டின் என்பவர் எழுதிய "Would Machiavelli now be a better guide for doctors than Hippocrates?" என்ற கட்டுரையில் மீளாய்வு செய்யப்பட்டுள்ள சில மேற்கத்திய அபிப்பிராயங்கள் மேற் சொல்லப்பட்டவற்றைவிட மோசமானவையாக உள்ளன. மூன்றாம் உலகில் சில தடுப்பூசி வழங்கும் நிகழ்ச்சித் திட்டங்களும் வேறு சுகாதார விருத்தி நடவடிக்கைகளும் புத்திசாலித்தனமானவையா எனச் சிலர் கேட்கின்றனராம். ஏனெனில் இப்படியான நடவடிக்கைகள் காரணமாக அளவுக்கதிகமான சிறுவர்கள் பிழைத்து வாழ்ந்து வளங் களைப் பயன்படுத்த நேரிடுகிறதாம். இதன் விளைவாக பஞ்சம், மரணம் என்பவற்றின் சுழற்சி மீட்டப்படுகின்றதாம். இன்னொரு வகையில் கூறுவதானால் மூன்றாம் உலகில் மரண வீதத்தைக் குறைப்பதை மட்டுப்படுத்த வேண்டும் எனக் கோரப்படுகிறது. மனிதாபிமானத் திலிருந்து நடைமுறைவாதத்ததுக்கான இந்தப் பெயர்வு தர்க்கரீதியான தாக சிலருக்குப்படுகிறது. இதனால்தான் இக்கட்டுரையில் மக்கியா வெல்லியின் பெயர் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

இப்படியொரு பிரச்சினை இருக்கிறது என்பதை யாரும் மறுப் பதற்கில்லை. பாதுகாப்பான, நம்பகரமான, இலகுவில் பெற்றுக்கொள் ளக்கூடிய கருத் தடைச் சாதனங்களை, அவற்றைப் பயன்படுத்த விரும்பும் குடும்பங்களுக்கு (வற்புறுத்தலின்றி) வழங்கவேண்டிய தேவையொன்றும் இருக்கிறது. இது தொடர்பாக இஸ்லாத்திற்கு எவ்வித மனவுறுத்தலும் இல்லை. ஆனால், சனத்தொகைப் பிரச் சினைக்கான முழுப் பழியையும் மூன்றாம் உலக நாடுகளின் மீது முழுமையாகச் சுமத்துவது, உண்மையை முழுமையாகக் கூறுவதல்ல என்பதே எமது மனக்குறை. ஏனெனில் இது உண்மையில் பன்முகத் தன்மையுடையது. அமெரிக்காவில் ஒரு குழந்தையின் பிறப்பு உலக வளங்களிலும் சுற்றாடலிலும் ஏற்படுத்தும் நெருக்கடியானது பங் களாதேஷ் போன்ற ஒரு நாட்டில் நிகழும் ஒரு பிறப்பினால் ஏற்படு வதைவிட நூறுமடங்கு அதிகமானது என National Geographic சஞ்சிகையில் எழுதிய ஸ்டன்போர்ட் பல்கலைக் கழகத்தின் உயிரியல் விஞ்ஞானப் பிரிவைச் சேர்ந்த Paul மற்றும் Anne Ehrlich என்பவர்கள் குறிப்பிட்டுள்ளனர். வறிய நாடுகளில் உள்ள சனத்தொகைப் பிரச் சினைகள் அந்நாடுகளை வறுமையில் உழலச் செய்யும் அதேவேளை செல்வந்த நாடுகளில் இருக்கும் சனத்தொகைப் பிரச்சினைகள் நாகரிகத்தைத் தாங்கி நிற்பதற்கான பூமியின் ஆற்றலை அழிக்கிறது என அவர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

மூன்றாம் உலகில் சனத்தொகை வளர்ச்சியைக் குறைப்பதற் கான வழிமுறைகள் பற்றி விவாதிக்கப்பட்டுள்ளது. (குறிப்பாக 1974இல் புக்காரெஸ்ட் நகரில் நடந்த உலக சனத்தொகை மாநாட்டில்) ஐரோப் பாவில் கருவள வீதம் வீழ்ச்சியடைவதற்கான காரணம் போன்ற வர லாற்றுரீதியான முன் நிகழ்வுகளைப் பற்றி கற்பதைக் கொண்டும் விவேகத்தைக் கொண்டும் யோசிக்கும் போது அபிவிருத்தியே கருவள வீதம் குறைவடைவதற்கு காரணம் என்பது தெளிவாகிறது. எனவே கருவளக் கட்டுப்பாட்டைவிட அபிவிருத்தியே சிறந்த பரிகாரம். பாதுகாப்பின்மை பற்றிய உணர்வு இதற்கு இயல்பான தூண்டுதலாக அமைவதும் தெரிந்த விடயமே. எனினும் முதலாளித்துவ நாடுகள் கருவளக் கட்டுப்பாடு தொடர்பாக மூன்றாம் உலகின் மீது அளவுக்கு மீறிய அழுத்தத்தை ஏற்படுத்துகின்றன. அவர்களுடைய அக்கறை மனித சமுதாயத்தின் நலனுக்கான தாராளத்தன்மைக்கும் ஈகைக்கும் அப்பாற்பட்டவை.

Foreign Affairs என்ற சஞ்சிகையின் 1991 கோடைகால இதழில் American Enterprise Institute ஐச் சேர்ந்த Dr. Nicholas Eberstadt என்பவர் வழங்கியுள்ள அறிக்கையொன்றில் (இது முதலில் அமெரிக்க இராணுவத்தின் நீண்ட வீச்சுத் திட்டமிடல் மாநாட்டுக்காகத் தயாரிக் கப்பட்டது) மூன்றாம் உலக நாடுகளில் ஏற்பட்டுவரும் விகிதாசார சனத்தொகை அதிகரிப்பானது சர்வதேச அரசியல் ஒழுங்கிலும் உலக அதிகாரச் சமநிலையிலும் ஏற்படுத்தக்கூடிய விளைவுகள் பற்றி எச்சரிக் கை செய்யப்பட்டுள்ளது. இன்னும் மூன்று பரம்பரைகளின் பின்னர் மேற்கிலுள்ள எட்டு பூட்டன் பூட்டிகளிடையே நான்கு அல்லது ஐந்து வழித்தோன்றல்களே உருவாகியிருக்கும் என்றும் அதேவேளை ஆபி ரிக்காவிலும் மத்திய கிழக்கிலும் அத்தொகை முன்னூறுக்கும் கூடிய தாக இருக்கும் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். எனவே இன்று முன்னணியில் இருக்கும் நாடுகள் எதிர்காலத்தில் சிறிய நாடுகளாக மாறப்போகின்றன.

உலகளாவிய சனத்தொகை அதிகரிப்பு அமெரிக்காவின் பாது காப்பிலும் வெளிநாட்டு ஆர்வங்களிலும் ஏற்படுத்தக்கூடிய தாக்கங்கள் பற்றிய ஆய்வு சிறந்த அறிவூட்டக்கூடிய ஆவணமொன்றாகும். சிக்கல்வாய்ந்த அரசியல், பொருளாதார, இராணுவ ரீதியான விளை வுகள் பற்றியும் அது எடுத்துக்காட்டுகிறது. சனத்தொகைக் காரணிகள் புரட்சிகரமான நடவடிக்கைகளுக்கு வித்திடக்கூடும். வெளிநாட்டுப் பொருளாதார நலன்களைப் பறித்தெடுக்கவோ அல்லது மட்டுப் படுத்தவோ அவை தூண்டுதலாய் அமையலாம். வறுமை, சனத்

தொகை வளர்ச்சி, இளைஞர் சனத்தொகை என்பன அபிவிருத்தியைத் துரிதப்படுத்துவதோடு, வெளிநாட்டு முதலீடுகளுக்கான விதிகளையும் நிபந்தனைகளையும் மீளாய்வு செய்வதற்கு வழிவகுக்கும். அத்தோடு வேலையில்லாப் பிரச்சினைக்குச் சாத்தியமான தீர்வாக இராணு வத்துக்கு ஆட்சேர்ப்பு செய்வதன் மூலம் இராணுவ வளர்ச்சி ஊக்கப் படுத்தப்படலாம். கைத்தொழில் நாடுகள் ஏற்கனவே அபிவிருத்தியில் பின்தங்கிய நாடுகளின் மீது யுத்தமொன்றை மேற்கொண்டுள்ளன என்ற உணர்வை மேற்சொன்ன ஆவணத்தின் சில பகுதிகள் உருவாக் கியிருக்கின்றன.

எமது பூமி ஓர் உலகளாவிய கிராமமாக மாறிவருவதனால் அக்கிராமத்தின் தேவைகளுக்கு ஏற்பவே புது உலக ஒழுங்கு நெறிப் படுத்தப்படவேண்டும் எனத் தோன்றுகிறது. உள்ளவர், இல்லாதவர் என உலகைப் பகுப்பது தவிர்க்கப்படமுடியாதது என்றோ அதன் விளைவாக இப்பிரிவினருக்கு இடையே சாகும் வரையான போராட்டம் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது என்றோ முன் தீர்மானங்கள் மேற் கொள்ளப்படக்கூடாது. செல்வந்தர்கள் பணிவும் உளத் திருப்தியும் அடைவதோடு தாம் தமது தற்போதைய வாழ்வில் அனுபவித்துவரும் சில சுகபோகங்களை பொது நன்மைக்காக விட்டுக்கொடுப்பதற்கு விரும்பி முன்வரவேண்டும். அவர்களுடைய ஆடம்பர வசதிகள் அத்தியவசியத் தேவைகளல்ல. மனித குடும்பத்தின் பெரும் பகுதி யினரின் அத்தியவசியத் தேவைகளை வழங்க முடிந்ததே என்ற சந்தோஷமே அவர்களுக்குக் கிடைக்கின்ற வெகுமதியாக இருக்கும். இவ்வாறு மகிழ்ச்சி தரக்கூடியது வேறென்ன இருக்கிறது? இந்தச் சமன்பாட்டுக்குள் இறைவன் சேர்க்கப்படவேண்டும்.

## ஜிஹாத்

'ஜிஹாத்' என்ற சொல், புனித யுத்தத்தைக் குறிப்பதாக நேரடி யாகவோ மறைமுகக் கருத்துடனோ விளக்கமளிக்கும் வகையில் கடந்த சில தசாப்தங்களாக மேற்கத்தியப் பத்திரிகைகளினால் அடிக்கடி பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது. உண்மையைச் சொல்வதானால், சிலுவை யுத்தங்களின் போதுதான் 'புனித யுத்தம்' என்ற சொற்றொடர் ஐரோப்பாவில் உருவாக்கப்பட்டது. அப்போது அது முஸ்லிம்களுக்கு எதிரான போரையே குறித்தது. அதற்குச் சமமான ஒன்று இஸ்லாமிய சொற்றொகுதியில் இல்லை. ஜிஹாத் அதன் மொழிபெயர்ப்பும் அல்ல.

ஜிஹாத் என்றால் போராடுதல் என்று பொருள். அது பிரதானமாக உளப் போராட்டத்தையே குறிக்கிறது. உன்னதமான ஒழுக்க நியம

மொன்றை அடைவதற்காகச் சளைக்காமல் தொடர்ந்து தனது கீழ்த் தரமான செயல்களிலிருந்தும் முனைவுகளிலிருந்தும் விடுபடுவதற்காக ஒருவர் தனக்குள்ளேயே நடத்தும் போராட்டமே அது. இஸ்லாம் ஒரு தனியாளின் வட்டத்திற்குள் மட்டுப்படாமல் சமூகத்தினதும் பொது வாக மனித சமுதாயத்தினதும் நலன் நோக்கி விரிவடைந்திருப் பதனால் ஒரு முஸ்லிம் தனது சமுதாயத்திலும் பரந்த உலகிலும் நிகழ்வன பற்றி அக்கறை காட்டாது தனிமைப்பட்டுத் தன்னை மாத் திரம் மேம்படுத்திக்கொள்ள முடியாது. எனவேதான் குர்ஆன் முஸ்லிம் சமூகத்தை நோக்கி நன்மையை ஏவித் தீயதை விலக்குமாறு (3:104) ஆணையிடுகிறது. இக்கடமை தனிப்பட்ட முறையில் முஸ்லிம்களுக்கு மட்டும் உரியதல்ல. பூமியில் இறைவனின் பிரதிநிதிகள் என்ற வகை யில் முழு மனித சமுதாயத்துக்கும் உரியது. எனினும் ஏனையவர்கள் இப்பொறுப்பிலிருந்து தவறினாலும் முஸ்லிம்கள் அதில் தவறமுடியாது. இதனை அடைவதற்கான வழிமுறைகள் பல்வேறுபட்டவை. இன்றைய நவீன உலகில் சட்டம் சார்ந்த, இராஜதந்திர, பொருளாதார, அரசியல் வழிமுறைகளையும் இதற்காகப் பயன்படுத்தலாம்.

வேறு மாற்று வழிகள் இல்லாத நிலையில் தீமையை ஒடுக்கு வதற்காகப் பலத்தைப் பிரயோகிப்பதை இஸ்லாம் ஒதுக்கிவிடவில்லை. ஐக்கிய நாடுகளின் பட்டயத்தில் குறிப்பிடப்படும் கூட்டுப் பாதுகாப்புக் கோட்பாடு, ஆக்கிரமிப்பைத் தடுப்பதற்காகக் கூட்டாகத் தலையிடுதல் போன்றவற்றுக்கு முன்னோடியாக குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது: *''விசுவாசிகளில் உள்ள இரு கூட்டத்தார், மற்றொரு கூட்டத்தார் மீது வரம்பு மீறினால் (வரம்பு மீறிய) அக்கூட்டத்தவர் இறைவனுடைய கட்டளையின்பால் திரும்பிவரும் வரை நீங்கள் போர் செய் யுங்கள்...''(49:9)* எனவே ராணுவ நடவடிக்கை ஜிஹாதின் ஓர் உப அங்கமே தவிர அதன் முழுமையல்ல. ஒரு ராணுவப் படை யெடுப்பிலிருந்து திரும்பிவரும் போது இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் தமது தோழர்களிடம் இவ்விடயத்தை இப்படிச் சொன்னார்கள்: ''இன்று நாங்கள் ஒரு சிறிய ஜிஹாதிலிருந்து (போரில் இருந்து) பெரிய ஜிஹாதுக்கு (சுய கட்டுப்பாடும் சுய மேம்படுத்தலும்) திரும்பி யிருக்கிறோம்.''

ஜிஹாத் என்பது ஏனைய மதங்களுக்கு எதிரான ஒரு யுத்தப் பிரகடனமல்ல. சில ஊடகங்களும் அரசியல் வட்டாரங்களும் எடுத்துக் காட்ட முயற்சிப்பது போன்று நிச்சயமாக அது கிறிஸ்தவர்களுக்கும் யூதர்களுக்கும் எதிராக திசைதிருப்பப்படவில்லை. கிறிஸ்தவர்களையும் யூதர்களையும் ஆபிரஹாமிய மரபைப் பின்பற்றி ஒரே இறைவனை வணங்குகின்ற சகாக்களாகவே முஸ்லிம்கள் கருதுகின்றனர்.

இஸ்லாத்திலே நியாயமான யுத்தமொன்றுக்குரிய கண்டிப்பான பிரமாணங்கள் பற்றியும் அது தொடர்பாகப் பின்பற்றப்படவேண்டிய தார்மீக மற்றும் ஒழுக்கரீதியான கட்டுப்பாடுகள் பற்றியும் ஏற்கனவே தொட்டுக்காட்டியுள்ளோம். நவீன யுத்தமுறை இந்த தார்மீக நியமங்களுக்கு இசைவானதல்ல. எனவே யுத்தத்துக்குப் பதிலாக பிணக்குகளைத் தீர்ப்பதற்கான மாற்று முறையொன்று தேவை. இதற்கான பொதுச் சூத்திரமொன்றுக்கு அனைத்துத் தரப்பினரும் இணங்கினாலே இது சாத்தியப்படும். நல்விளக்கமும் திடச்சித்தமும் கொண்ட உலகளாவிய மக்கள் அபிப்பிராயத்தின் மூலம்தான் யுத்தம் சார்ந்த மனப்பாங்கினை அடக்கி வெற்றிகொள்ளமுடியும். இதற்கு மனமாற்றமே முக்கியம். தனி மனிதருக்கிடையான உறவுகளில் மன்னிப்புக்கு இருக்கும் ஆக்கரீதியான பங்களிப்பு பன்னாட்டு உறவுகளிலும் சாத்தியப்படலாம். இங்கு இறுதி மத்தியஸ்தம் செய்வதில் பலத்துக்குப் பதிலாக நீதியே முன்நிற்கவேண்டும்.

நேர்மை கருதி நாம் ஒரு விடயத்தை வலியுறுத்திக் கூறவேண்டி இருக்கிறது. வரலாற்று ரீதியில் முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் யூதர்களும் ஏனையோரும் தத்தமது சமயங்களினதும் தத்துவங்களினதும் பெறுமதியான இலட்சியங்களை நேர்மையாக பின்பற்றும் விடயத்தில் தவறிழைத்திருக்கிறார்கள். நாம் அனைவரும் தவறுகள் செய்திருக்கிறோம்; தொடர்ந்தும் செய்யப்போகிறோம். இதற்கு முஸ்லிம்கள் விதிவிலக்கு அல்லர். பேராசை பிடித்த கொடுங்கோலர்களாலும் அறிவுகெட்ட குண்டர் கூட்டங்களாலும் சமயம் மீண்டும் மீண்டும் துஷ்பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. இது சமயத்தின் குற்றமல்ல. நல்ல கல்வியும், மனித கண்ணியம், உரிமைகள், சுதந்திரம் என்பன பற்றிய இடைவிடாத கரிசனையும் எவ்வளவுக்கு அவசியமாக இருக்கின்றன என்பதையும் அரசியல், பொருளாதாரப் பேராசைகளை அடக்கியாவது நீதி நியாயத்தைப் பேணுவதன் அவசியத்தையும் இது காட்டுகின்றது.

## குடும்பமும் பாலியல் புரட்சியும்

“ஆண்களின் மறுபாதியே பெண்கள்” என இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மனித குலத்தின் தனி அலகு ஆணோ பெண்ணோ அல்ல. திருமணத்தினால் இணைந்த ஒரு ஆணும் ஒரு பெண்ணும் தான் குடும்பத்தை உருவாக்குகிறார்கள். (நீரின் தனி அலகு ஒக்ஸிஜனோ ஹைட்ரஜனோ அல்ல - அவை

இரண்டினதும் இணைப்பே என்பது போல). யூத சமயம், கிறிஸ்தவம் மற்றும் ஏனைய சமயங்களைப் போல ஒரு குடும்பத்தை உருவாக்கும் வகையில் ஓர் ஆணையும் பெண்ணையும் சோடி சேர்ப்பதை ஒரு புனிதப் பிணைப்பாகவே இஸ்லாம் கூறுகிறது. திருமண ஒப்பந்தத்தின் மூலம் ஆவணப்படுத்தப்படவேண்டிய இதனை ஒரு ''புனிதமான உறுதி மொழி'' என குர்ஆன் அழைக்கின்றது.

திருமணம், கணவன் மனைவிக்கிடையிலான பரஸ்பர அர்ப் பணிப்பைக் குறித்து நிற்பதோடு அவர்கள் ஒவ்வொருவரினதும், அத் தோடு அவர்களினது பிள்ளைகளினதும் பரஸ்பர உரிமைகளையும் பொறுப்புக்களையும் நிலைநாட்டுகின்றது. தாம் சட்டபூர்வமானவர்களாக இருப்பதற்கான உரிமை பிள்ளைகளுக்கு உண்டு. (அதாவது தமது பெற்றோர்களை அடையாளம் காணவும், இரு பெற்றார்களின் உறவு மூலம் நன்மை பெறவும், செல்லுபடியான திருமணம் ஒன்றினூடாகப் பிறக்கவும் உள்ள உரிமை) அத்தோடு தாம் வளரும் காலத்தில் அன்பான பராமரிப்புடன், உடல் உளப் போஷிப்பையும் கல்வியையும் பெற்று வாழ்க்கைக்கு முகங்கொடுக்கவும், முதிர்ந்த பயனுள்ள பிரஜை கள் என்ற வகையில் தம் பொறுப்புக்களை ஏற்கவும் தேவையான ஆற்றல்களைப் பெற்றுக்கொள்ளும் உரிமையும் உண்டு.

பெற்றோர்கள் முதுமையடைந்தால் அல்லது ஏதேனும் முறையில் செயற்பட முடியாதவர்களானால், பொறுமையிழக்காது அவர்களைப் பராமரித்து அவர்களது சௌகரியத்துக்குத் தேவையானவற்றைச் செய்வது பிள்ளைகளின் சமயக் கடமையாகிவிடும். இது இறைவனுக் குரிய உரிமையாக இருப்பதோடு தொடர்ந்து செல்லும் காப்புறுதி யாகவும் அமைகிறது. ஏனெனில் அந்தப் பிள்ளைகள் பெற்றோர்களாக மாறி முதுமையடைந்து அவர்களது பிள்ளைகளின் பராமரிப்பை வேண் டும்போது இது அவர்களுக்கு நன்மையளிக்கத்தான் போகிறது.

குடும்பத்தின் ஒற்றுமைக்கும் குடும்ப உறவுகளின் உறுதித் தன்மைக்கும் இஸ்லாத்தில் மிக உயர்ந்த முக்கியத்துவம் வழங்கப்பட் டுள்ளது. இது கருக் குடும்பத்துக்கு அப்பாலும் பரவலாகிச் சென்று இரத்த உறவு வட்டாரங்களுக்குள் ஊடுருவி நிற்கும். குர்ஆன் அத னைக் கருப்பையின் உறவு என அழைக்கிறது. நட்புப் பாராட்டி, தேவையான போது நிதியுதவி வழங்கி இரத்த உறவினருக்கு அன்பு காட்டுவது கடமையாகவும் அதேவேளை வெகுமதி தரும் தர்மச் செயலாகவும் விளங்குகிறது. பெற்றோர் மறைந்த பின்னர் அவர் களுக்காகப் பிரார்த்தனை புரிவதும் அவர்களது நண்பர்களோடு தொடர்புகளைப் பேணி அவர்களுக்கு மரியாதை காட்டுவதும்

தேவையான போது உதவிகள் புரிவதும் பிள்ளைகளின் கடமையாக இருக்கும்.

இஸ்லாத்தில் திருமணம் இரண்டு செயற்பாடுகளுக்கு உதவு கிறது. அவ்விரண்டுக்கும் சட்டரீதியாக உதவத் திருமணத்தால் மட் டுமே முடியும். இவற்றுள் முதலாவது ஒரு பாதிக்கு மற்றப்பாதியின் மீதுள்ள ஆசையை நிறைவு செய்து உடல் ரீதியாகவும் ஆன்மீக ரீதியாகவும் அவை ஒன்றித்துப் போவதாகும். *"உங்கள் துணைகளை நீங்கள் அவர்களிடம் மனநிம்மதி பெறுவதற்காக உங்களிலிருந்தே உங்களுக்காக அவன் படைத்து, உங்களுக்கிடையில் அன்பையும் கிருபையையும் ஆக்கியிருப்பதும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளதாகும்." (30:21)* அடுத்த செயற்பாடு இனப்பெருக்கம் செய்து சந்ததியினை உருவாக்குவது. *"உங்களிலிருந்தே உங்களுக்காக மனைவியரை இறைவன் ஆக்கியுள்ளான். உங்கள் மனைவியரி லிருந்து ஆண் மக்களையும் பேரக் குழந்தைகளையும் உங்களுக்கு அவன் ஆக்கியுள்ளான். இன்னும் நல்லவற்றிலிருந்து உங்களுக்கு உணவளித்துள்ளான். அவர்கள், பொய்யானதை விசுவாசித்து அல்லாஹ்வின் அருட்கொடையையும் நிராகரிக்கின்றனரா?" (16:72)*

பாலுறவுக்கும் இனப்பெருக்கத்துக்கும் உரிய ஒரேயொரு தளம் திருமணமே. திருமண உறவுக்கு அப்பால் வரம்பு மீறுவது பெரும் பாவம். குற்றமிழைத்தவர்கள் பாலுறவில் ஈடுபடுவதை நேரடியாகக் கண்ட நான்கு சாட்சிகள் அவர்களை இனங்கண்டு சாட்சியம் கூறினால் இஸ்லாத்தில் தண்டனைக்குரிய குற்றமாக அது அமையும். (அவர்கள் பாலுறவில் ஈடுபட்டிருப்பார்கள் என அவர்களுடைய தோற்றத்தி லிருந்தோ உடல் நிலைப்பாட்டிலிருந்து ஊகித்தல் செல்லுபடியாகாது) ஒருவர் மீது திருமணத்திற்குப் புறம்பான பாலுறவுக் குற்றம் சுமத்தும் விடயத்தில் சாட்சிகள் பற்றிய சட்ட நிபந்தனைகள் மிகக் கண்டிப் பானவை. இதுபோன்ற பாரதூரமான விடயமொன்றில் பொய்க்குற்றம் சுமத்துவதையும் அதன் மூலம் ஒரு குடும்பத்தையே நாசமாக்கு வதையும் முற்றாகத் தடுப்பதே இதன் நோக்கம்.

திருமணத்துக்கு முன்னர் கற்பைப் பேணுதல், அதன் பின்பு விசுவாசமாக நடந்துகொள்ளல் ஆகிய ஒழுக்கக் கோட்பாடுகள் ஒரு காலத்தில் அமெரிக்காவிலும் மேற்கிலும் போற்றப்பட்டு வந்தன என்பது இங்கு கவனிக்கத்தக்கது. எனினும் அதிகமான மக்கள் நாத்திகத்திலும் அரைகுறையான இறை நம்பிக்கையிலும் வீழ்ந்த பின்னர் மாற்றம் தவிர்க்கப்பட முடியாததாயிற்று. நாத்திகம் என்பது இறைவனை மறுத்தல். அரைகுறை இறை நம்பிக்கை என்பது இறைவனை ஏற்றுக்

கொண்டாலும் அவனுக்கு ஆகக் குறைத்தே மரியாதை வழங்குதல். நாம் அவனை எங்கள் பிரமாணங்களுக்கு ஏற்பத் தான் வழிபடுகிறோம். நாம் வார இறுதிநாட்களில் வழிபாட்டுத் தளங்களுக்குப் போகிறோம். ஆனால் எங்கள் சொந்த மற்றும் பகிரங்க வாழ்க்கையில் என்ன செய்யவேண்டும் என்று கூற இறைவனுக்கு இடம் கொடுப்பதில்லை. இறை நம்பிக்கையில் ஏற்பட்ட இந்தச் சிதைவுதான் 'பாலியல் புரட்சி'க்கு வழிவகுத்தது. இதன்படி அனைத்து சமயப் பெறுமானங்களும் தீவிர மறுபரிசீலனைக்கு உள்ளாகின.

பலர் நினைப்பதுபோல் பாலியல் புரட்சி 1960கள் போன்ற அண்மைக்காலத்தில் ஆரம்பிக்கவில்லை. மந்தமாக நிகழ்ந்த இயல்பான சமூக மாற்றத்தினால் அது விளையவுமில்லை. மாறாக, பாலியல் தொடர்பான சமூக நியமங்களில் மாற்றம் கொண்டுவர வேண்டுமென நன்கு திட்டமிட்டுச் செயற்பட்ட சிலரின் இடைவிடாத முயற்சியின் விளைவே அது. பொது வாழ்க்கையிலிருந்து திருச்சபை ஒதுக்கித் தள்ளப்பட்டதைத் தொடர்ந்து அறிவியலும் தொழிநுட்பமும் பற்றி சமூகத்தில் உருவான தீவிரக் கவர்ச்சியோடுதான் அது ஆரம்பித்தது. உண்மையான அறிவின் மூலாதாரம் என்ற வகையில் சமயத்தை வீழ்த்திவிட்டு அறிவியல் முடிசூடியிருக்கிறது என்ற நம்பிக்கையில் எல்லா மனித விவகாரங்களிலும் மனித மனம்தான் தீர்ப்புச் செய்யவேண்டும் எனப் பலர் கருதலாயினர். எனவே காலங்காலமாக மதிக்கப்பட்டுவந்த பெறுமானங்கள் மனித உள்ளத்தின் தீர்ப்புக்கு உள்ளாயின. மனித உள்ளம் பரிபூரணமற்ற ஒரு சாதனம்; அதன் வரையறைகள் காரணமாக ஒழுக்க நியமங்கள் பற்றி இறுதித் தீர்ப்பு வழங்க அதற்குத் தகுதியில்லை என்ற வெளிப்படையான உண்மையை அவர்கள் தமது ஆழமற்ற, அவசரப் போக்கினால் உணர்ந்து கொள்ளத் தவறிவிட்டனர். தொடர்ச்சியாக ஆர்வத்தோடு மனிதன் அறிவைத் தேடிக்கொண்டிருக்கிறான், ஆய்வுகளைத் தொடர்கிறான் என்பது நாம் கற்றுக்கொள்ள வேண்டியவை நிறைய இருக்கின்றன என்பதை ஒப்புக் கொள்வதாகவே இருக்கின்றது. எங்களிடம் எல்லா அறிவும் இருக்கிறது; எங்கள் உள்ளங்கள் பரிபூரணமானவை என நாங்கள் மெய்யாகவே நம்பினால், வாழ்க்கை பற்றியும் சூழல் பற்றியும் நடத்தப்படும் ஆய்வுகள் அனைத்தையும் நிறுத்தியிருக்க வேண்டும். அப்போது ஆராய்ச்சிக்காகப் பெருந்தொகைப் பணத்தைச் செலவு செய்யும் தேவையும் இல்லாது போகும். ஆனால் உண்மை நிலை அதுவல்ல. இதனால் தான் குர்ஆன் *"அறிவிலிருந்து வெகு சொற்பமே தவிர நீங்கள் (மனித சமுதாயம்) கொடுக்கப்படவில்லை" (17:85)* எனக் கூறுகிறது.

இறைவனின் இடத்தில் மனிதனை வைப்பதை மேலும் முன்னெடுப்பதற்காக இரண்டு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் ''சமயம் இன்றி ஒழுக்கம்'' (Morality without Religion) என்ற இயக்கம் தலையெடுத்தது. மக்களுக்கு மத்தியில் பகைமையையும் மோதலையும் ஏற்படுத்துவது சமயமே - மனிதத் தவறுகள் அல்ல - என குற்றம் சுமத்தப்படலாயிற்று. சமயத்தைப் பின்பற்றாமலேயே ஒழுக்க நெறிகளைப் பேணலாம் என அவ்வியக்கத்தைச் சேர்ந்தவர்கள் நம்பினர். இதனை ''பிணைப்பற்ற ஒழுக்கநெறி'' என அவர்கள் அழைத்தனர். உத்தியோகபூர்வமாக சிலரே இவ்வியக்கத்தில் சேர்ந்திருந்தபோதிலும், அது போதித்த தத்துவம் மக்களிடையே பரவலாயிற்று. விஞ்ஞான கண்டுபிடிப்புக்களுக்கும் பைபிளுக்கும் இடையிலிருந்த முரண்பாடுகள் காரணமாக மக்கள் சமயத்தில் நம்பிக்கை இழந்தது இதற்கு வாய்ப்பாக அமைந்தது. இவ்வாறு சமயத்தை விட்டுக் கவனம் திருப்பப்பட்டு, இறைவன் புறந்தள்ளப்பட்டபோது புதுப் புது ஒழுக்கவிதிகள் வெளிவரலாயின. இதனால் நேற்றைய ஒழுக்கக்கேடுகள் இன்றைய சாதாரண செயல்களாயின. மனிதப் பெறுமானங்களை, மனிதனல்லாத அல்லது தெய்வீகமான பிரமாணங்களில் ஆதாரங்களைத் தேடாது மனிதர்களே தீர்மானித்துக்கொள்ள முடியும் எனப் பிரகடனம் செய்ய மதச் சார்பற்ற மனிதர்களால் இறுதியில் முடியுமாயிற்று. சடவாதத்தை நோக்கிய இந்த மாற்றத்தோடு கௌரவம், கற்பு, தூய்மை போன்ற பெறுமானங்கள் நடைமுறைச் சாத்தியமற்ற வெறுஞ்சொற்களாக மாறின. பரவலான கருத்துத் திணிப்புப் பிரசாரத்தின் மூலம் அனைத்துக்கும் உரிமை வழங்கும் அளவுக்கு சுதந்திரத்தின் வரையறைகள் விரிவடைந்தன. தனியாளுக்கு அழுத்தம் கொடுக்கும் சமூகத்தில் ஒவ்வொரு மனிதனினதும் சபல ஆசையும் மனித உரிமையாகியது.

சமூகத்தைத் தாக்கிய இந்தப் பேரலை பாரம்பரியமான சமயப் பாதுகாவலர்கள் சிலரையும் பெறுமானங்களையும் அள்ளிச் சென்றமை ஒழுக்க நெறிகளுக்கு ஏற்பட்ட இன்னொரு பின்னடைவாகும். இவ்வாறு பாதிக்கப்பட்ட மதகுருமார் ஐந்தாம் படையினராக மாறினர். சமயப் பாசறையை விட்டு வெளியேறாமல் அவர்கள் விருப்பச் சுதந்திரக் கொள்கையினராக மாறினர். அவர்கள் சமயத்துக்குள்ளேயே செயற்பட்டு, சமயத்தின் வரலாறு முழுவதிலும் விலக்கப்பட்டவையாகவும் வெறுப்புக்குரியனவாகவும் கருதப்பட்டவற்றை சட்டபூர்வமானவையாகவும் அனுமதிக்கப்பட்டவையாகவும் மாற்றும் வகையில் சமய நூல்களுக்கு புதிய மறு வியாக்கியானங்களையும் விளக்கவுரை

களையும் வரையலாயினர். தாம் தடுத்து நிறுத்தியிருக்கவேண்டிய விஷக் கிருமிகளுக்கு இந்த மதகுருமாருள் பலர் பலியாகினர். பிரம் மச்சரியம் என்பது திருமணத்தைத் தவிர்ப்பதே தவிர பாலுறவைத் தவிர்ப்பதல்ல என்றுகூடச் சிலர் விளக்கம் கொடுக்கலாயினர்.

எதிர்பார்த்தபடி இவற்றின் விளைவுதான் சமூகங்களில் குழறுபடியான பாலியல் நடத்தைகளை ஏற்படுத்தியுள்ளது. திரு மணத்திற்கு வெளியே கற்பையும், திருமணத்தினுள்ளே விசுவாசத் தையும் பேணுகின்ற பெறுமானங்கள் இல்லாமையால், ஒரு பெண் ணுக்கும் ஆணுக்கும் இடையிலான அதிவிசேட பிணைப்பு என்ற வகையில் பாலியல் உறவின் புனிதத்துவம் அற்றுப்போயுள்ளது. நினைத்தவிதமான பாலுறவு, கற்பழிப்புக்கள், கருக்கலைப்பில் அல்லது சட்டபூர்வமான தாய் தந்தைக்கு உரிமை பாராட்டமுடியாத பிள்ளைகளில் முடிகின்ற வேண்டாத பிரசவங்கள், சிறுமிகள் பிள்ளை பெறுதல் என்பனவும் இதன் விளைவே. மேலும் உறுதியான குடும்பங் களில்கூட முறைதவறிப் பிறந்த பிள்ளைகள் பதினைந்து சதவீதம் இருக்குமளவுக்குக் குடும்பங்கள் பற்றிய விசுவாசம் குலைந்திருக் கிறது. பாலுறவு மூலம் பரவும் நோய்களின் பரம்பல் மேலும் பிரச் சினையை அதிகரிக்கச் செய்துள்ளது. இவற்றுள் புதிய நோய்களும் எப்போதோ ஒழிக்கப்பட்டதாகக் கருதப்பட்ட பழைய நோய்களும் அடங்கும். இப்பழைய நோய்களை உருவாக்கும் கிருமிகள் நுண் ணுயிர்கொல்லி மருந்துகளை எதிர்க்கும் திறனைப் பெற்றுக்கொண்டுள் ளன. முறைதவறிய உறவுகள் காரணமாக சமூகத்தில் - குறிப்பாக இளைஞர்கள் மத்தியில் - இந்நோய்களால் பெரும் சேதம் ஏற்பட்டு வருகிறது.

எமது சமயத்தில் எது அனுமதிக்கப்பட்டுள்ளது எது விலக்கப் பட்டுள்ளது என்ற விடயத்தில் முஸ்லிம்களிடையே எவ்வித மனக் குழப்பமோ தெளிவின்மையோ இல்லை. குர்ஆன், சொல்லுக்குச் சொல், எழுத்துக்கு எழுத்து அது இறங்கிய ஆரம்ப வடிவத்திலேயே இருக்கின்றது. குர்ஆன் என்பது தெய்வீக வார்த்தை. குர்ஆனின் மொழியான அறபு உட்பட எந்த மொழியிலும் அதற்கு வழங்கப்படும் மொழிபெயர்ப்பையோ விளக்கத்தையோ குர்ஆன் எனக் கூறமுடியாது. குர்ஆனில் குறித்துக் காட்டப்பட்டுள்ள ஒழுக்கங்களும் ஒழுக்கக்கேடு களும் அவ்வாறே என்றும் இருக்கும். அவற்றை நீக்கச் செய்யவோ, தந்திரமாக மாற்றவோ, காரணங்காட்டி பகுத்தறிவுக்கு ஏற்றபடி விளக் கவோ முடியாது. விசேட வியாக்கியானங்கள் செய்யும் உரிமையோ ஆற்றலோ தமக்கிருப்பதாக உரிமை பாராட்டக்கூடிய மதகுருமாரோ

மார்க்க அறிஞர்களோ கிடையாது. எல்லா முஸ்லிம்களும் பாவம் செய்யாத புனித ஆத்மாக்கள் என்பது இதன் கருத்தல்ல. நிச்சயமாக முஸ்லிம்கள் சிலர் பாவமான, வெறுப்புக்குரிய காரியங்களைச் செய்து தமது சமயத்தின் வரம்புகளை மீறத்தான் செய்கிறார்கள். ஆனால் தாம் செய்வது பாவம் என்பது அவர்களுக்குத் தெரியும். அவற்றி லிருந்து தவிர்ந்துகொண்டு இறைவனிடம் பாவமீட்சி பெறும் வரை இவை அவர்களது மனச் சாட்சியை உறுத்திக்கொண்டேயிருக்கும்.

ஒழுக்கநெறிகளை முன்னெடுத்துச் செல்வதில் முஸ்லிமல்லாத சமுதாயங்களில் பிரஜைகளாகவுள்ள முஸ்லிம்கள்தான் உண்மையான சவாலை எதிர்நோக்குகின்றனர். அவர்களுடைய பிள்ளைகள் இஸ் லாத்தின் போதனைகளோடு முரண்படுகின்ற சமூக, ஒழுக்க நியமங்களால் சூழப்பட்டிருக்கிறார்கள். இதில் முஸ்லிம்கள் மட்டும் தனித்துப் போகவில்லை. இதேபோன்ற தெய்வீக ஒழுக்கநெறிகளைப் பேணுகின்ற, அவற்றைப் பற்றிய விசுவாசத்தைத் தம் பிள்ளைகளுக்கு ஊட்ட அனைத்து முயற்சிகளையும் மேற்கொள்கின்ற யூதர்களும் கிறிஸ்தவர்களும் ஏனைய சமயத்தினரும் இதில் அடங்கியிருக்கின் றனர். இந்த விடயத்தில் பரஸ்பர ஒத்துழைப்பு ஏற்கனவே முன்னேற்றம் கண்டுள்ளது. முஸ்லிம்களுக்கும் அவர்களையே போன்ற நம்பிக்கை களைக் கொண்டோருக்கும் இடையில் - அவர்கள் மதகுருமாராகவோ, தனியாட்களாக அமைப்புக்களாகவோ இருக்கலாம் - கூடிய ஒத் துழைப்பு ஊக்குவிக்கப்படவேண்டும்.

பிள்ளைகளுடனான நமது அணுகுமுறையில் இளவயதிலேயே இறைவன் அறிமுகப்படுத்தப்படவேண்டும் (அத்தியாயம் ஒன்று பார்க்க) அத்தோடு அவனை விசுவாசிப்பது என்பது அவனது விதிகளை ஏற் றுக்கொண்டு அவற்றுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதே என்ற கருத்துப் படிவமும் அறிமுகப்படுத்தப்படவேண்டும். நாம் அவனுடைய விதி களுக்கு கீழ்பபடிந்து நடக்கும் போது அவ்வாறு செய்யாதவர்களைப் பற்றி அலட்டிக்கொள்ளத் தேவையில்லை. ஏனெனில் ஒருவன் இறை வனின் பக்கம் இருக்கும் போது அவன் பெரும்பான்மையின் பக்கமே இருக்கின்றான். அவனுடைய படைப்புக்கள் அனைத்தும் அவனுடைய விதிகளுக்கு அடிபணிந்து நடப்பதே நாம் இவ்வாறு சொல்லக் கார ணம்.

சமவயதினரின் அழுத்தத்தையும், தூண்டுதல்களைத் தரும் உளக் கோளாறுகளையும் எதிர்த்து நிற்பதற்குத் தேவையான தன்னம்பிக்கையை விசுவாசம் உருவாக்கும். அப்போது ‘மற்றவர்கள் செய்கிறார்களே’ என்பது சாக்குப் போக்காக அமையாது. இந்த ‘‘தடுப்பு மருந்து போடும்’’ அணுகுமுறையானது விசுவாசம் பற்றிய

அறிவில் பிள்ளைகளை நிலைத்து நிற்கச் செய்வதோடு நோய்கள் அணுக முன்னரே அவற்றுக்குரிய எதிர்ப்புச் சக்தியை அவர்களில் உருவாக்கிவிடும். ஒரு போர் வீரனைத் தயார்படுத்தவேண்டியது போரின் போதல்ல; அதற்கு முன்னரே. எதிர்காலத்தில் நேரக்கூடிய ஆபத்துக்கள் பற்றி பிள்ளைகளோடு கலந்துரையாடுவதன் மூலம், புகைத்தல், மதுவருந்துதல், போதைப்பொருள் நுகர்தல், பாலுறவு போன்ற ஏதேனும் செயலில் பங்கு கொள்ளுமாறு அழைப்பு விடுக்கப்படும் போது எப்படி நடந்துகொள்ள வேண்டும் என அவர்கள் முன்கூட்டியே தீர்மானித்துக்கொள்ள முடிகிறது.

திருமணத்திற்கு முந்திய கற்புநிலை பற்றிப் போதிக்கும் போது கீழ்ப்படியுமாறு கட்டளையிடவேண்டியதில்லை. (எனினும் இறைவன் கட்டளையிடும் போது நாம் கீழ்ப்படிய வேண்டும் என்பதே நியதி) முஸ்லிம், முஸ்லிம் அல்லாத இளைஞர் யுவதிகளுடன் கலந்துரை யாடும் போது அறிவு ரீதியாக விடயத்தை முன்வைக்கமுடியும். இரு பாலாருக்கும் சமத்துவம் தேவை என நம்புபவர் யார்? எனக் கேட்டால் எல்லோரும் சார்பாக வாக்களிப்பார்கள். நீதி நியாயத்தில் நம்பிக்கை உள்ளவர் யார்? என்று கேட்டால் மீண்டும் ஏக மனதாக அனைவரும் இணங்குவர். அதன் பின்னர், இரண்டு பங்காளிகளுக்கு இடையிலான ஏதேனுமொரு உறவின்போது சமமாகப் பகிரப்படாவிட்டால் அது நியாயமானதாக இருக்கமுடியாது என்ற கருத்து முன்வைக்கப்பட வேண்டும். அதனை அனைவரும் ஆமோதிப்பார்கள். விருப்பத்துக் கேற்ப நிகழும் பாலுறவில் அதன் விளைவுகள் சமமாகப் பகிரப்படுவ தில்லை. ஏனெனில் எல்லாவகையிலும் பெண் தரப்பே இழப்புக்கு ஆளாகிறது. அவள் கைவிடப்பட்டாலும் அல்லது கர்ப்பமுற்று கருக்கலைப்புச் செய்தாலும் அல்லது பிள்ளையைப் பெற்று அதனைத் தத்துக் கொடுத்தாலும் அல்லது தந்தையில்லாத பிள்ளையொன்றை வளர்க்கும் பொறுப்பைத் தனியே மேற்கொள்ளவேண்டி நேர்ந்தாலும் சரியே. இந்த விளைவுகளை அவதானிக்க விட்ட பின் “இது நியா யமா?” எனக் கேட்டால் பொதுவாக ‘இல்லை’ என்றே கத்துவார்கள்.

ஓரினப் பாலுறவு என்பது பாலுறவுப் புரட்சியில் பிந்தி வந்து சேர்ந்துகொண்ட ஓர் அம்சம். ஓரினப் பாலுறவு என்பது புதிய கண்டு பிடிப்பொன்றல்ல. இது எல்லாச் சமூகங்களிலும் எல்லாக் கலாச்சா ரங்களிலும் - ஆனால் இன்றை விடக் குறைந்த எண்ணிக்கையில் - இருந்திருக்கிறது. கடந்த இரு தசாப்தங்களில்தான், ஆதரவு தேடல் முயற்சிகளின் ஊடாக அதன் செல்வாக்குப் பெருகியுள்ளது. குதவழிப் புணர்ச்சி பாதுகாப்பானது என்பதை அறிவியல் பரிசோதனை மூலம்

நிரூபிப்பதற்காக அறிவியல் ஆய்வு முறையைப் பயன்படுத்திய ஆய் வுகள் சமர்பிக்கப்பட்ட சில அறிவியற் கருத்தரங்குகளில் நான் கலந்து கொண்டிருக்கிறேன். எழுபதாம் ஆண்டுகளின் ஆரம்பப் பகுதியில் நிகழ்ந்த இவற்றில் முன்வைக்கப்பட்ட முடிவுகள் எந்தளவுக்கு எனது விவேகத்துடன் முரண்பட்டனவெனில், வாழ்க்கையிலே முதற் தடவை யாக சில அறிவியல் ஆராய்ச்சியாளர்கள் மீது எனக்குச் சந்தேகமே ஏற்பட்டது. அதற்குச் சிறிது காலத்தின் பின்னர் ஓரினப் பாலுணர்வு நாட்டத்தை ஒரு கோளாறென இனிமேல் கருதமுடியாது எனவும் அது வெறுமனே பாலுறவு நாட்டத்தின் வித்தியாசமான போக்கொன்று மட்டுமே எனவும் அமெரிக்க உளநோய் மருத்துவர் சங்கம் பிரகடனம் செய்தது. அதற்குப் பின்னர் நடந்தவை வரலாறாகிவிட்டன.

ஓரினப் புணர்ச்சியினால் ஏற்படுகின்ற Gay Bowel Syndrome என்ற நோய் பற்றி பிற்காலத்தில் மருத்துவ நூல்கள் விவரித்தன. அதன் பின்னர் எய்ட்ஸ் பற்றிய செய்தி வந்தது. ஓரினப் பாலுறவுக்கும் அதற்கும் இடையில் உள்ள தொடர்பு நிறுவப்பட்டது. எய்ட்ஸ் பிரச் சினை வெகுவிரைவில் மருத்துவத் துறையிலிருந்து அப்புறப்படுத்தப் பட்டது. ஏனெனில் தொற்று நோய்களைத் தடுப்பதற்கான அதன் வழமையான விதிமுறைகளை இந்த விடயத்தில் அத்துறையினால் அமுல்படுத்த முடியாமற் போயிற்று. எனவே எய்ட்ஸ் ஓர் அரசியல் பிரச்சினையாக மாறியது. பதவிகளில் உள்ளவர்களையும் அரசியல் பிரமுகர்களையும் மிரட்டக்கூடிய அளவுக்கு ஓரினப் பாலுறவுக்கு ஆதரவு தேடும் குழுக்கள் வலிமை பெற்றன. ஊடகத்துறையிலும் கலைத்துறையிலும் மதகுருமார் மத்தியிலும் அவை ஆதரவைப் பெற்றுக்கொண்டன. எய்ட்ஸ் கட்டுப்படுத்தப்படுவதற்குப் பதிலாக வரம்புடைத்துப் பரவியது. இரத்த தானம் பெறுவோர், போதைப் பொருட்களுக்கு அடிமையானோர், கருவில் வளரும் முளையங்கள், அப்பாவி மனைவிமார், மாசுபட்ட திரவங்களோடு தவறுதலாகத் தொடர்புற்றவர்கள் எனப் பல வகையினரும் அதனால் பாதிக்கப்பட் டனர். அது உலகளாவிய தொற்றுநோயாக மாறித் துரித கதியில் பரவிக்கொண்டிருக்கிறது. எய்ட்ஸ் நோயாளியைப் பொறுத்தமட்டில் முஸ்லிம்களின் பச்சாத்தாபமும் கருணையும், சிறந்த மருத்துவப் பராமரிப்புக் கிடைக்கவேண்டும் என்ற நன்னம்பிக்கையும் இருக்கும். பாதிக்கப்படாதோருக்குத் தவிர்ப்பு அணுகுமுறையையே நாம் சிபாரிசு செய்கின்றோம். அது ஆணுறையின் பயன்பாடு அல்ல. பாதுகாப்பான

பாலுறவு என்று எதுவுமில்லை. திருமணம் வரை கற்போடு இருப்பதும் திருமணத்தின் பின்னர் விசுவாசமாக நடப்பதும் தான் பாதுகாப்பான பாலுறவுக்கு வழியாகும்.

ஓரினப் பாலுறவு பற்றிய விவாதம் சூடுபிடித்திருக்கிறது. ''நீங்கள் நீங்களாக இருங்கள். அதற்கு வெட்கப்படத் தேவையில்லை'' என்று கூறப்படுகிறது. அப்பாவிகளான இளைஞர்கள் தாம் எப்படிப்பட்டவர்கள் என்பதைக் கண்டறிவதற்காகப் பரிசோதனை செய்ய ஆரம்பிப்பர். எல்லாவற்றுக்கும் சம்மதம் ஒரு முன் நிபந்தனையாக இருக்கிறது. ஸ்கண்டிநேவியாவிலுள்ள ஆதரவு தேடும் குழுவொன்று சம்மதத்திற் கான வயதை நான்காகக் குறைக்க முற்படுகின்றனர். கலிபோர்னியா வில் வருடந்தோறும் ஓரினப் பாலுறவு நாட்டமுடையவர்களின் Gay Pride ஊர்வலம் ஊடகங்களின் மேற்பார்வையோடு நடத்தப்படுகின்றது. இவ்விடயம் பற்றிய 'பிடிவாதக் கருத்துக்களையும் தப்பெண்ணங்களை யும்' நீக்குவதற்காக சில பள்ளிக்கூட மாவட்டங்களில் Gay Pride மாதம் கொண்டாடப்படுகின்றது. இரண்டு ஆண்கள் அல்லது இரண்டு பெண்கள் சேர்ந்து வாழும் குடும்பங்கள் மாற்றுவகைக் குடும்பங்களாக முன்வைக்கப்படுகின்றன.

ஓரினப் பாலுறவு நாட்டத்திற்குக் காரணமாக இருக்கக்கூடிய உடலமைப்பு அல்லது மரபணு ரீதியான அடிப்படையைக் கண்டறி வதற்கு அண்மைக் காலத்தில் அறிவியல்துறை முயற்சி மேற்கொண் டுள்ளது. இது முஸ்லிம்களான எமது மனதை ஈர்க்கப்போவதில்லை. எமது நிலைப்பாடு இதுதான்: ''நாம் எமது சமயத்தை உருவாக் குவதில்லை. நாம் அதைப் பெற்றுக்கொண்டு அதன்படி நடக்கின் றோம்.'' எமது நம்பிக்கையை நாம் இன்னொருவர் மீது திணிக்க முடியாது. எனினும் ஓரினப் பாலுறவைத் தெளிவாகக் கண்டிக்கின்ற குர்ஆனினதும் இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களினதும் போத னைகள் சரியானவை என நாம் நம்புகிறோம். ஒருவருக்கு இயல்பான நாட்டம் இருக்கிறதோ இல்லையோ, ஒருவர் தன்னுள் ஓரினப் பாலுற வுக்குரிய மரபணுவொன்று இருப்பதாக நம்பினாலும் சரி நம்பாவிட் டாலும் சரி, ஒருவருடைய உணர்வுகளும் ஆசைகளும் அவரது நடத்தையைத் தீர்மானிக்கமுடியாது. (அது ஓரினப் பாலுறவாகவோ, உங்கள் துணையல்லாத ஒருவருடனான பாலுறவாகவோ, மதுபானம் அருந்துவதாகவோ, வன்முறையான குற்றச் செயலை அல்லது திருட் டைப் புரிவதாகவோ இருக்கலாம்) உங்கள் உணர்வுகள் தான் உங்

கள் செயல்களாக இருக்கவேண்டியதில்லை. *"இறைவனும், அவனுடைய தூதரும் யாதொரு காரியத்தை முடிவெடுத்துவிட்டால், அவர்களுடைய அக்காரியத்தில் சுயமாக வேறு அபிப்பிராயம் கொள்வதற்கு விசுவாசியான எந்த ஆணுக்கும் எந்தப் பெண்ணுக்கும் உரிமையில்லை. (அதில்) அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எவர் மாறு செய்கின்றாரோ அவர் பகிரங்கமான வழிக்கேடாக திட்டமாக வழிகெட்டுவிட்டார்." (33:36)* ஒவ்வொரு மனிதப் பிறவியிலும் மறுக்கப்படமுடியாத மரபணுவொன்று இருக்கிறது அது இல்லாமல் மனிதப் பிறவியாக இருக்கமுடியாது. அது "சுய கட்டுப்பாட்டுக்குரிய மரபணு" என அழைக்கப்படுகிறது.

## உயிரியல் மருத்துவ நெறிமுறைகள்

### இனப்பெருக்கம் தொடர்பான பிரச்சினைகள்

**கருவளத்தைச் சீராக்கல்**

கருத்தடை
தாய்ப்பாலூட்டல்
கருப்பையகச் சாதனம்
கருக் கலைப்பு
கருவளமில்லாது செய்தல்

**கருவளமின்மைக்கான சிகிச்சைகள்**

செயற்கையாக விந்தணு செலுத்தல்
உடலுக்கு வெளியான கருக்கட்டல்
மாற்றுத் தாய்மை

**உறுப்பு தானம் செய்தலும் உறுப்பு மாற்றுச் சிகிச்சையும்**

நரம்பு இழையங்களை மாற்றிப் பொருத்துதல்
தலையற்ற முளையம்
பாலியல் சுரப்பிகளை மாற்றிப் பொருத்துதல்

**மரணத்தின் வரைவிலக்கணம்**

**கருணைக் கொலை**

**மரபணுப் பொறியியல்**

சில கருத்தடைச் சாதனங்கள் அவை உற்பத்தி செய்யப்பட்ட (மேற்கு) நாடுகளில் தடைசெய்யப்பட்டிருக்கும் நிலையில் அவை இஸ்லாமிய மற்றும் மூன்றாம் உலக நாடுகளுக்கு பெருமளவு ஏற்று மதி செய்யப்படுவதைக் கண்டு அந்நாட்டவர்கள் அதிர்ச்சியடைந்துள் ளனர். மூன்றாம் உலகின் உள்நாட்டு வளங்களை விருத்தி செய்வதற் காக மேற்கு நாடுகள் மேலும் அதிகமாக முதலீடு செய்தல் வேண்டும். மேலும் அதற்குத் தேவையான தொழிநுட்பத்தை வழங்குவதற்கும் முன்வர வேண்டும்.

**தாய்ப்பாலூட்டல்:** இஸ்லாமியப் போதனைகள் தாய்ப்பாலூட்டலைப் பெருமளவு ஊக்குவிக்கின்றன. ஒரு குடும்பக் கட்டுப்பாட்டு முறை என்ற வகையில் தனிக்குடும்பமொன்றைப் பொறுத்தமட்டில் நம்பக மானதாக இல்லாவிடினும், ஒரு குழு (கூட்டு) அடிப்படையில் அது ஏனைய எல்லா முறைகளையும்விடச் சக்தி வாய்ந்த குடும்பக் கட்டுப் பாட்டு முறையாக விளங்குகிறது. பாலூட்டும் தாய்மாரைக் கொண்ட சமுதாயங்களில் கருவளம் குறைந்திருப்பது அவதானிக்கப்பட்டுள்ளது. குர்ஆன் தாய்ப்பாலூட்டல் பற்றிக் குறிப்பிட்டிருப்பதோடு அதற்குரிய இயல்பான காலம் இரண்டு வருடங்கள் என்றும் கூறியுள்ளது.

இஸ்லாத்தில் தாய்ப்பாலூட்டலானது வெறுமனே போசனைக் குரிய (அல்லது குடும்பக் கட்டுப்பாட்டுக்குரிய) நடைமுறையொன்றாக மட்டும் கருதப்படவில்லை. அது ஒரு பெறுமானமாகவும் சிறப்பான பிணைப்பொன்றினை உருவாக்கும் காரணியாகவும் அங்கீகரிக்கப் பட்டுள்ளது. ஒரு குழந்தைக்கு அதன் இயற் தாயைவிட வேறொரு பெண் பாலூட்டினால் அப்பெண்ணுக்கு அக்குழந்தையின் 'பால் குடித் தாய்' என்ற சிறப்பு அந்தஸ்தை இஸ்லாமிய சட்டம் வழங்குகிறது. திருமண உறவு பற்றிய சட்ட விடயங்களில் அவளுக்கு இயற்கையான தாயின் நிலை வழங்கப்படுகிறது. இதன் விளைவாக அப்பெண்ணின் சொந்தப் பிள்ளைகள், பாலூட்டப்பட்ட குழந்தையின் "பால் குடி சகோதரர்களாகக்" கணிக்கப்படுவர். எனவே அவர்களில் எவரையும் அக்குழந்தை பிற்காலத்தில் விவாகம் செய்ய முடியாது.

கருப்பையகச் சாதனம் (IUD): கருப்பையகச் சாதனமொன்று கருக்கலைப்பைச் செய்வதன் மூலம் கருத்தடைச் சாதனமாகச் செயற் படுமாயின் அதனை ஏற்றுக் கொள்ள முடியாது. இந்த உதாரணத்தில் கரு பதிக்கப்படுவதை அது தடுப்பதில்லை. தற்காலத்திலுள்ள சாதன

வகையில் விந்தை கொல்லக்கூடிய செம்பு அயன்களை வெளிவிடும் செம்புக் கம்பியொன்று இருக்கும். அல்லது கருப்பைக் கழுத்தின் சீதப்படையை விந்து துளைத்துச் செல்ல முடியாதபடி தடிப்பாக்குகின்ற புரோஜெஸ்ட்ரோன் ஹோர்மோனை அச்சாதனம் வெளிவிடும். மேற் சொன்ன இரு செயற்பாடுகளும் IUD சாதனத்தை கருத்தடைச் சாதன வகையில் - கருச்சிதைப்பு வகையிலல்ல - அடங்கச் செய்கின்றன. இது உலகச் சுகாதார அமையத்தினால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

**கருக்கலைப்பு:** உயிருக்கு ஆதரவானவர்கள் (Pro Life) தெரிவுக்கு ஆதரவானவர்கள் (Pro Choice) என்ற ஆதரவு தேடும் குழுக்கள் இஸ்லாத்தில் இல்லை. இஸ்லாம் கருக்கலைப்பை, கருத்தடையி லிருந்து முற்றிலும் வேறுபட்டதாகவே நோக்குகிறது. ஏனெனில் முன்னையது மனித உயிர் விடயத்தில் வரம்பு மீறுவதாகும். இங்கு, கருப்பையில் உள்ள முளையத்தின் உயிர், மனித உயிர் என்பதற்குள் அடங்குமா எள்ற கேள்வி எழுகிறது. இஸ்லாமிய சட்டவியலின்படி அது அடங்கும். இஸ்லாம் முளையத்துக்கு முழுமையடையாத **திம்மா** என்ற அந்தஸ்தைக் கொடுக்கிறது. சட்டரீதியில் உரிமைகளும் கடமை களும் கொண்ட ஒன்றைத்தான் **திம்மா** என்பார்கள். இந்த வகையில் முளையம் முழுமையடையாதது எனக் கருதப்படுவதற்குக் காரணம் அதற்கு உரிமைகள் இருந்து கடமைகள் இல்லாதிருப்பதே! முளை யத்திற்குரிய சில உரிமைகள் பின்வருமாறு:

1. மனைவி கர்ப்பமாக இருக்கும் போது ஒரு கணவன் இறந்தால் வாரிசுரிமைச் சட்டத்தின்படி, அம்முளையம் உயிரோடு பிறப்பின், ஒரு வாரிசாக அங்கீகரிக்கப்படும். அடுத்த வாரிசுகளுக்கு சட்டரீதியாக அவர்களுக்குரிய விகிதங்கள் வழங்கப்பட முன்னர் பிறக்கவிருக்கும் பிள்ளைக்குரிய பங்கு வேறாக்கி வைக்கப்பட வேண்டும்.

2. கர்ப்பத்தின் ஏதேனுமொரு கட்டத்தில் முளையம் குறைப்பிரசவமாகி அது இருமுதல், அசைதல் போன்ற உயிர்க்குறியொன்றைக் காட்டி னால், அது கர்ப்பமுற்றதற்குப் பின் இறந்த எவரிடமிருந்தும் வாரி சுரிமை பெற அதற்குச் சட்டரீதியான தகுதி உண்டு. அந்த முளையம் இறந்த பின்னர், அது வாரிசாகப் பெற்றவை அதனுடைய சட்டரீதியான வாரிசுகளைச் சேரும்.

3. மரண தண்டைனைக்குரிய குற்றமொன்றைப் புரிந்த ஒரு பெண் கர்ப்பமுற்றிருப்பதாக நிரூபிக்கப்பட்டால், அவள் குழந்தை பெற்று அதற்குப் பாலூட்டி இறுதியில் குழந்தை பால் மறக்கச் செய்யப்படும் வரையில் அந்தத் தண்டனை நிறைவேற்றம் ஒத்திவைக்கப்பட வேண்டும் - கர்ப்பத்துக்குரிய காலம் எவ்வளவு நீண்டதாக இருந்தாலும் சரியே. ஆரம்பத்திலிருந்தே அந்த முளையத்துக்குள்ள உயிர் வாழும் உரிமையை இது எடுத்துக்காட்டுகிறது. அந்தக் கர்ப்பம் முறை தவறிய நடத்தையால் ஏற்பட்டதாயினும் இது செல்லுபடியாகும். திருமணத்திற் குப் புறம்பாக கருவுற்ற முளையத்துக்கும் உயிர் வாழும் உரிமை உண்டு என்பதையே இது காட்டுகிறது. எல்லாச் சமயப் பிரிவினரும், சட்டவறிஞர்களும் ஏகமனதாக இந்தத் தீர்ப்பை அங்கீகரித்துள்ளனர்.

4. தவறுதலாகக்கூட, கருக் கலைப்பொன்று செய்யப்பட்டால் அதற்கான தண்டப் பணமொன்று அறவிடப்படும். இது குர்ரா என அழைக்கப்படு கிறது. வன்முறையினாலோ அல்லது வேண்டுமென்றோ கருக்கலைப்பு நிகழ்ந்தால் நீதிமன்றத்தினால் அதற்குரிய தண்டனை வழங்கப்படும்.

உயிர் எப்போது ஆரம்பமாகிறது என்ற சர்ச்சை பற்றிய கலந் துரையாடல்கள் இஸ்லாமிய வட்டாரங்களில் ஆரம்ப காலம் தொட்டே இடம்பெற்றுள்ளன. உயிர் இருக்கிறது என்று நிறுவப்படுவதன் அடிப் படையிலேயே கருக்கலைப்புக்கு அனுமதி மறுக்கப்படுவதால் இது முக்கியமாகிறது. (முன்னைய கால சட்டவறிஞர்கள் சிலர் நான்காவது மாதத்திற்கு முன்னர் கருக்கலைப்பை அனுமதித்தனர். மற்றவர்கள் பிரசவத்துக்கு ஏழாவது வாரத்திற்கு முன்னர் என்றனர். இக்காலப்பகுதி யில் உயிர் இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை என அவர்கள் எடுத் துக்கொண்டனர்) சுமார் பத்து நூற்றாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த புகழ்பெற்ற அறிஞரான அல்-கஸ்ஸாலி, உயிர் புலப்படாத கட்டம் என்ற ஒன்றினைச் சரியாக விபரித்திருந்தார். குழந்தையின் துடிப்பினைத் தாய் உணரக்கூடிய கட்டத்துக்கு முந்தியதே அது. அண்மைக்கால சட்டம் சார்ந்த மாநாடுகளில் இவ்விடயம் மீளாய்வு செய்யப்பட்டது. நவீன தொழிநுட்பங்களின் பிரயோகத்தின்படி ஒருவரின் உயிரின் ஆரம்பம் என்று கருதக்கூடிய கட்டமானது பின்வரும் பிரமாணங்கள் அனைத்தையும் திருப்தி செய்வதாக அமைதல் வேண்டுமெனத் தீர் மானிக்கப்பட்டுள்ளது. (1) அது தெளிவான, நன்கு வரையறை செய்

யப்பட்ட நிகழ்வாக இருத்தல். (2) அது உயிரின் பிரதான இயல்பான வளர்ச்சியைக் காட்டுதல் (3) அதன் வளர்ச்சி இடைநிறுத்தப்பட்டாலன்றி அது நாம் அறிந்துள்ளபடி அடுத்தடுத்த கட்டங்களுக்கு முன்னேறிச் செல்லுதல் (4) பொதுவாக மனித குலத்துக்குரியதும் குறிப்பாக ஒரு தனி நபருக்குரியதுமான மரபணுக் கோலத்தைக் கொண்டிருத்தல் (5) முதற் குறிப்பிட்ட நான்கும் இணைந்த வேறு கட்டமொன்று அதற்கு முன்னர் இடம்பெறாதிருத்தல். இவற்றின்படி பார்க்கும் போது அந்தக் கட்டம் கருக்கட்டலையே குறிக்கிறது.

எனினும், ஒரு கர்ப்பம் தொடர்வதனால் தாய்க்குப் பாரதூரமான தீங்கு ஏற்படும் நிலையிருப்பின் இக்கருக்கலைப்பு அனுமதிக்கப்படும். தாயை மூல வேராகவும் கருவிலுள்ள குழந்தையை ஒரு சிறு கிளை யாகவும்தான் ஷரீ'ஆ கருதுகின்றது. எனவே முன்னையதைக் காப் பதற்காக பின்னையது அர்ப்பணிக்கப்படலாம். கருக்கலைப்புக்குரிய அனுமதியானது, உயிர் வாழச் சாத்தியமற்ற நோய்களையும் ஊனங் களையும் கொண்டுள்ள முளையங்களை உள்ளடக்கும் வகையில் விரிவாக்கப்படவேண்டும் எனச் சிலர் கருதுகின்றனர். இவையும் நான் காம் மாதத்திற்கு முன்னரே செய்யப்படவேண்டும்.

**கருவளம் இல்லாமற் செய்தல்:** குறிப்பிட்ட மருத்துவக் காரணம் எதுவும் இல்லாத நிலையில் கருவளத்தை இல்லாமற் செய்வது விரும்பத்தகாத செயலாகவே கருதப்படும். எனினும் போதியளவு பிள்ளைகளைப் பெற்ற மற்றும் இனப் பெருக்க வாழ்வின் இறுதிக் கட்டத்தை அடைந்த பெண்களைப் பொறுத்தமட்டில் அது அனுமதிக் கப்படும். இதற்குக் கணவன் மனைவி இருவரும் சுய விருப்பத்துடன் சம்மதம் தெரிவிக்க வேண்டும். அவர்களில் எவரும் மனமாற்றம் அடைந்தால் அச்செயன்முறை பழைய நிலைமைக்குத் திருப்பப்பட லாம் என்ற வாக்குறுதி எதுவும் அளிக்கப்படக்கூடாது. அரசாங்கக் கொள்கை எதுவும் மக்களை கருவள ஒழிப்புச் செய்யமாறு வற்புறுத் தக்கூடாது. குறிப்பிட்ட சத்திர சிகிச்சை சம்பந்தப்பட்டவரின் நலனுக்கு உகந்ததல்ல என விளங்கினால் அதனைச் செய்ய மறுப்பதற்கான உரிமை வைத்தியர்களுக்கு உண்டு.

**மலட்டுத் தன்மைக்கான சிகிச்சைகள்**: ஒருவர் கர்ப்ப நிலையை நாடுவது சட்டபூர்வமானது. அதற்காக வேண்டிய முயற்சிகளை தனிப்பட்டட முறையில் ஒருவர் மேற்கொள்ளலாம். ஆனால் அந்த

முயற்சிகள் எதுவும் ஷரீ'ஆவுக்கு முரணாக அமையக்கூடாது.

**செயற்கை முறையில் விந்தணு சேர்த்தல்**: விந்து கணவனுடை யதாக இருந்தால் மட்டுமே செயற்கையான விந்தணுச் சேர்ப்பு அனு மதிக்கப்பட்டதாக இருக்கும். தானம் செய்த ஒருவரின் விந்தைப் பயன்படுத்த முடியாது. ஏனெனில் இனப்பெருக்கம் விவாக உடன் படிக்கையொன்றின்படி அதன் இரு தரப்பினருக்கும் இடையில் மட்டுமே சட்டபூர்வமானதாக இருக்கும்.

**உடலுக்கு வெளியிலான கருக்கட்டல் (IVF)**: பொதுவாகச் சோதனைக் குழாய்க் குழந்தைத் தொழிநுட்பம் என அழைக்கப்படும் இச்செயல்முறை கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் நிகழ்ந்தால் மாத்திரமே இஸ்லாமிய ரீதியில் ஏற்றுக்கொள்ளப்படும். - அதாவது அது விவாக உடன்படிக்கையின் வரையறைகளுக்குள் அமைய வேண் டும். அந்த உடன்படிக்கை செல்லுபடியானதாகவும் காலாவதியாகா மலும் இருத்தல் அவசியம். விதவையாதல் அல்லது விவாக விலக்கு அவ்வுடன்படிக்கையை முடிவுறச் செய்வதனால் ஒரு பெண் இச்செயன் முறைக்காக விந்து வங்கியொன்றில் சேமித்து வைக்கப்பட்ட தனது மறைந்த கணவனின் அல்லது மாஜிக் கணவனின் விந்தைப் பயன் படுத்தமுடியாது. கணவன், மனைவியல்லாத மூன்றாவது தரப்பினரை அல்லது அவர்களது மரபணுக்களைக் கொண்ட விந்து அல்லது முட்டையைச் சேர்த்துக்கொள்வது தடுக்கப்பட்டுள்ளது. ஏனெனில் அவ்வாறு செய்வது அந்த சோடியைப் பிணைத்து வைத்த விவாக உடன்படிக்கையில் தலையீடு செய்வதாக அமையும். 'அந்நிய விந்து' 'அந்நிய முட்டை' அல்லது 'அந்நிய கருப்பை' (ஒரு தம்பதியின் முளையத்தைச் சுமப்பதற்காக) என்பன அனுமதிக்கப்படமாட்டா.

**மாற்றுத் தாய்மை**: இன்னொரு தம்பதியின் முளையத்தை ஒரு பெண் தன் கருப்பையில் சுமக்கும் மாற்றுத் தாய்மை முறைக்கு இஸ்லாத்தில் அனுமதி கிடையாது. அது விவாக உடன்படிக்கைக்குப் புறம்பான கர்ப்பமொன்றாக அமைகிறது. அத்தோடு அதன் விளைவாகத் தாய்மையானது மரபணு ரீதியானது உயிரியல் ரீதியா னது என இரு கூறுகளாகப் பிரிகின்றது. தாய் ஒருத்தியாகத் தான் இருக்கமுடியும். இவ்வாறான செயல்முறையில் சம்பந்தப்படுகின்ற பெண்களுக்கிடையில் பெற்றாரின் உரிமை தொடர்பான பிணக்குகள் அமெரிக்காவில் சட்டரீதியான மற்றும் வேறு பிரச்சினைகளைத் தோற்று வித்துள்ளன. ஒரு குழந்தையின் தலைவிதியை ஓர் உடன்படிக்கை மூலம் தீர்மானிப்பது மனிதாபிமானத்துக்கு ஏற்றதல்ல; ஏனெனில்

அது அக்குழந்தையை ஒரு பண்டமாகக் கருதுகின்ற செயல். இதன் விளைவுகள் பாரதூரமானவையாக அமையலாம். வரலாற்றிலே இதற்கு முன்னர் பெண்கள், பிறக்கப் போகும் குழந்தையை இன் னொருவருக்குக் கொடுத்துவிடும் நோக்கோடு, தாமாக விரும்பி முழு கர்ப்ப காலத்தையும் பிரசவத்தையும் அனுபவித்தது கிடையாது. எனவே இதன் விளைவுகள் இன்னும் சரிவரப் புரிந்துகொள்ளப்பட வில்லை. அதிகமான சந்தாப்பங்களில், இது பேரம்பேசப்பட்ட ஒரு விலைக்கே செய்யப்படுகிறது. இது தாய்மையை ஒரு பெறுமானம் என்ற நிலையிலிருந்து ஒரு சொத்தாகத் தரம் குறைக்கிறது. இச் செயன்முறை நிலைபெற்றால், பரம்பரைகளுக்கிடையிலான பிணைப்பு களில் அது ஏற்படுத்தக்கூடிய நீண்டகால விளைவுகள் பேரழிவுக் குரியனவாக இருக்கும்.

## உறுப்புத் தானமும் உறுப்பு மாற்றுச் சிகிச்சையும்

*''...எவரொருவர் ஓர் உயிரைக் காப்பாற்றுகிறாரோ அவர் அனைத்து மக்களினதும் உயிரைக் காப்பாற்றியவர் போலாவார்''* எனக் குர்ஆன் கூறுகிறது. இக்கருத்துப் படிவத்தை அமுல்படுத்து வதற்கு, செயழிலந்து போய்க்கொண்டிருக்கும் உறுப்பொன்றுக்குப் பதிலாக உயிருள்ள ஒருவரிலிருந்தோ இறந்த உடலொன்றிலிருந்தோ பெறப்பட்ட உறுப்பொன்றை மாற்றிப் பொருத்துவது போன்ற சிறந்த வழிமுறை வேறு இருக்காது. சில இஸ்லாமிய சட்டவிதிகளைத் தொகுத்தாய்வதன் மூலமே இந்த முடிவு மேற்கொள்ளப்பட்டது.

அடிப்படையில், உயிருடனோ உயிரில்லாமலோ மனித உயி ரொன்றில் அத்துமீறிச் செயற்படுவதை இஸ்லாம் அனுமதிப்பதில்லை. இதன்படி உயிருள்ள ஒருவரின் உடலையோ அல்லது இறந்த சடலமொன்றையோ வெட்டித்திறந்து தானம் செய்யப்படுவதற்காக உறுப்பொன்றை அகற்றுவது அனுமதிக்கப்படாததாகவே அமைந் திருக்கவேண்டும் எனினும் இரண்டு சட்டத் தீர்ப்புக்களை ஆதாரம் காட்டி இந்த விடயத்துக்கு தீர்வுகாணப்பட்டுள்ளது. இவற்றுள் முதலாவது சட்டவிதி அத்தியாவசிய நிலையில் தடை மீறப்படலாம் என்பதாகும். இரண்டாவது விதி: இரண்டு தீமைகளில் ஒன்றைத் தவிர்க்கமுடியாத நிலையில் குறைந்த தீமையைத் தெரிவுசெய்தல் வேண்டும். உயிரொன்றைக் காப்பாற்றுவது அத்தியவசியமானதாக இருப்பதனால் உடலொன்றின் அல்லது சடலமொன்றின் புனிதத் துவத்தைப் பாதுகாப்பதைவிட முன்னையது கூடிய முக்கியத்துவம் பெறுகின்றது. மேலும் உறுப்புத் தானம் செய்யும் ஒருவரின் உடலைக்

காயப்படுத்துவது ஒரு நோயாளியைச் சாகவிடுவதை விடக் குறைந்த தீமையே. இந்த அடிப்படையில் உறுப்புத் தானம் செய்வதும், உறுப்பு மாற்றுச் சிகிச்சையும் அனுமதிக்கப்பட்டனவாக அமைகின்றன. மருத்துவர்களால் நிர்ணயித்துக்கொள்ளக்கூடிய அளவுக்கு அது தானம் கொடுப்பவருக்கு ஆபத்தை ஏற்படுத்தக்கூடாது. எவ்வித புற அழுத்தமுமின்றி சுயாதீனமான சம்மதம் தானம் கொடுப்பவரிடமிருந்து (அவர் இறந்திருப்பின் அவருடைய நெருங்கிய உறவினரிடமிருந்து) பெறப்படுவது அவசியம்.

**நரம்புத்திசு மாற்றுச் சிகிச்சை:** நரம்புத்திசு மாற்றுச்சிகிச்சை மூலம் சில நோய்களுக்குச் சிகிச்சை வழங்கும் வாய்ப்பு இருப்பதாக அண்மைக்காலப் பரிசோதனைகள் எடுத்துக்காட்டியுள்ளன. அத்ரீனல் சுரப்பியின் மையவிழையத்திலிருந்து அல்லது விலங்கு முளைய மொன்றிலிருந்து அல்லது குறைப் பிரசவத்தில் பிறந்து இயற்கையாக இறந்துவிட்ட மனித முளையத்திலிருந்து அந்த திசு பெறப்பட்டிருந்தால் அது சட்டத்தினால் ஏற்றுக்கொள்ளப்படும். எனினும் உயிருள்ள அல் லது பிழைக்கும் சாத்தியமுள்ள மனித முளையமொன்றை இதற்காகப் பலியிடுவது தடுக்கப்பட்டுள்ளது. தாயின் உயிரைக் காப்பாற்றுவதற் காகச் செய்யப்படுவது போன்ற கருக்கலைப்பொன்றின் போது வெளிவரும் முளையத்தின் திசுவைப் பெறுவதும் அனுமதிக்கப்பட்டதே. எனினும் இதே நோக்கத்திற்காக முளையங்களை உருவாக்குவதும் கருக்கலைப்புச் செய்வதும் சட்டவிரோதமானவை.

**தலையற்ற முளையம்:** தலை வளர்ச்சியடையாத முளையம் உருவாவதற்கு ஒரு பிறவிக் கோளாறு காரணமாக இருக்கிறது. இவ்வாறான முளையத்தில் கபாள அறையும் மூளையின் அரைக் கோளங்களும் இருக்கா. அது உயிருடன் பிறந்தாலும் ஒரு சில நாட்களுக்குள் இறந்துவிடும். அது உயிருடன் இருக்கும் வரை மாற்றுச் சிகிச்சைக்காக உறுப்புக்களை அதிலிருந்து பெறக்கூடாது. செயற்கை முறையில் அதனைச் சாகடிப்பதும் சட்டத்துக்கு முரணானது. அதன் மூளைத் தண்டு இறக்கும் வரை அதன் திசுக்களை ஆரோக்கியமாக வைத்திருப்பதற்காக அதனைச் செயற்கை முறையில் உயிர் பிழைக் கச் செய்யலாம். மூளைத் தண்டு இறந்த பின்பே அதன் உறுப்புக் களைப் பெற்றுக்கொள்ளலாம்.

**பாலியல் சுரப்பிகளை மாற்றிப் பொருத்துதல்:** விந்தை உற்பத்தி செய்ய கூடிய விதைகளையோ முட்டையாக்கம் செய்யக்கூடிய சூலகங் களையோ இன்னொருவருக்கு மாற்றிப் பொருத்துவது சட்டவிரோத

மானது. ஏனெனில் அது வம்சாவழி பற்றிய குழப்ப நிலையை உரு வாக்கும். உண்மையான திருமணத்தினூடாக இணைக்கப்படாத புணரிக் கலங்களிலிருந்தே இங்கு குழந்தை உருவாகின்றது.

அவ்வாறான விந்தணுக்களும் முட்டைகளும் அவற்றை தானம் செய்தவருக்கேயன்றி பெற்றுக்கொண்டவருக்குச் சொந்தமானவை அல்ல. மலட்டுத் தன்மையான (புணரிக் கலங்களை உற்பத்தி செய்யாத) ஆனால் ஹோர்மோன்களை உருவாக்குகின்ற பாலியல் சுரப்பிகள் இந்தத் தடைக்குள் அடங்குவதில்லை. எனினும் மருத்துவ நடைமுறையில் அவை பயனற்றவை.

**மரணத்தின் வரைவிலக்கணம்**

மரணம் நிகழ்ந்த கணத்தை நிச்சயித்துக் கொள்வது பல வகைகளிலும் முக்கியமானது. செயற்கை உயிர்ப்பூட்டலை அகற்றுவது அல்லது மாற்றிப் பொருத்துவதற்காக (இதயம் போன்ற) முக்கிய உறுப்பொன்றை எடுப்பது நிறைவேற்றப்படலாமா என்பது போன்ற மருத்துவ ரீதியான பிரச்சினைகளுக்குத் தீர்வு காண இது தேவை. மேலும் சில சட்டரீதியான பிரச்சினைகளுடனும் அது நேரடியான தொடர்புடையது. உதாரணமாக: வாரிசுகளில் இருவரோ அதற்கு மேற்பட்ட தொகையினரோ அடுத்தடுத்து இறந்தால் சொத்துப் பங்கீடு செய்வது, ஒரு விதவையின் காத்திருப்புக் காலத்தின் (இத்தா) தொடக் கத்தை நிர்ணயிப்பது முதலியன. ஒரு பெண் தனது கணவனின் மரணத்தின் பின்னர் மீள விவாகம் செய்ய முன்னர் குறிப்பிட்ட காலத் துக்குக் காத்திருக்கவேண்டும். (இது நான்கு மாதங்களும் பத்து நாட்கள்; அவள் கர்ப்பிணியாக இருந்தால் பிரசவத்தின் முடிவுரை வரை)

அண்மைக்கால சட்டவியல் மாநாடுகள், மூளையின் முற்றான (மூளைத் தண்டு உட்பட) மரணத்தை அடிப்படையாக வைத்து மரணத் துக்கான புதிய வரைவிலக்கணமொன்றை ஏற்றுக்கொண்டுள்ளன. இந்நிலையில் செயற்கை உயிர்ப்பிப்பு முறையில் சில உடல் தொழில் செயற்பாடுகள் பேணப்பட்டுக்கொண்டிருக்கலாம். மரண காயம் என்ற கருத்துப்படிவத்தின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டிருந்த பழைய சட்ட விதியிலிருந்து ஒப்புவமை முறையில் புதிய வரைவிலக்கணம் உருவாக்கப்பட்டுள்ளது. பல நூற்றாண்டுகளுக்கு முன்பு ஒருவர் கூரிய ஆயுதத்தினால் குத்தப்பட்டு அவரது குடல் வெளியே வந்தால் அதனை மரண காயம் என சட்டம் கூறியது. இந்நிலையில் காயமுற்றவர் தொடர்ந்து அசைவுகளையும் உயிர் பிரியும் அறிகுறிகளையும் காட்

டினாலும் சரியே - இவை 'கொலையுண்டவரின் அசைவுகள்' என்றே அழைக்கப்பட்டன. அவரை இரண்டாம் நபரொருவர் தாக்கி முழுமை யாக சாகடித்தாலும் முதலாவது நபர் மீதே கொலைக்குற்றம் சுமத் தப்படும். இரண்டாமவர் மீதும் குற்றம் சுமத்தப்படும் - ஆனால் கொலைக் குற்றம் அல்ல. ஒருவரில் மூளை மரணம் ஏற்பட்டிருக்கும் நிலையில் அவரது உடல் உறுப்புக்களும் தொகுதிகளும் செயற்கை யான முறையில் செயற்படச் செய்யப்பட்டிருந்தால் அவற்றின் இயக்கம் கொலையுண்டவரின் அசைவுக்கு ஒப்பானதாகக் கருதப்படும் - அவை மீண்டும் உயிர் வாழும் நிலைக்குத் திரும்பும் சாத்தியம் அறவே இருக்காது. எனவே இந்நிலையில் அவருக்கு வழங்கப்பட்டுள்ள உயிர்ப்பிப்பு நிறுத்தப்படுவதோ அல்லது அவருடைய இயக்க நிலை யிலுள்ள இதயத்தை அகற்றி இதயம் முற்றாகச் சேதம் அடைந்திருக் கின்ற நோயாளி ஒருவருக்குப் பொருத்துவதோ குற்றமல்ல.

**கருணைக் கொலை (Euthanasia)**

ஒல்லாந்தில் கருணைக் கொலைக்கு சட்டரீதியான அங்கீகாரம் கிடைத்திருக்கிறது. அமெரிக்காவின் இரு மாநிலங்களில் அது வாக் களிப்புக்கு விடப்பட்டபோது தோற்கடிக்கப்பட்டது. எனினும் அதற்காக ஆதரவு தேடும் குழுக்கள் அதிக சுறுசுறுப்படைந்து வருகின்றன. கருணைக் கொலை பற்றிய திட்டவட்டமான கருத்துக்களை இஸ்லாம் கொண்டுள்ளது.

**மனித உயிர்:** மனித உயிரின் புனிதத் தன்மையானது மூஸா (அலை), ஈஸா (அலை), முஹம்மத் (ஸல்) ஆகியோருடைய காலங் களுக்கு முன்பே இறைவனால் விதிக்கப்பட்டுவிட்ட ஒரு பெறுமான மாகும். ஆதமுடைய மகனான காபில் அவரது சகோதரனால் கொலை செய்யப்பட்டதைப் பற்றிக் குறிப்பிடும் குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது: *''இதன் காரணமாகவே, எவரொருவர் மற்றோர் ஆத்மாவின் கொலைக்குப் பிரதியாகவோ, அல்லது பூமியில் குழப்பத்தைத் தடுப்பதற்காகவோ தவிர (அநியாயமாக மற்றொருவரை) கொலை செய்கின்றாரோ அவர், மனிதர்கள் யாவரையுமே கொலை செய்தவர் போலாவார் என்றும், எவர் (ஓர் ஆத்மாவை) வாழ வைக்கின்றாரோ அவர் மனிதர் யாவரையுமே வாழ வைத்தவர் போலாவார்'' என்றும் இஸ்ராயீலின் மக்களின் மீது விதியாக்கிவிட்டோம்... (5:32)* மேலும் குர்ஆன் இப்படிக் கூறுகின்றது: *''அல்லாஹ் தடுத்துள்ள எந்த உயிரையும் (நியாயமின்றி) உரிமையின்றிக் கொலைசெய்யாதீர்கள்'' (6:151, 17:33)* யுத்தத்தின் போதோ சமாதான காலத்திலோ (குற்ற

வியல் சட்டத்தின் ஓர் அம்சமாக) உயிரொன்றைப் பறிப்பதற்கு அனுமதி வழங்குவது தொடர்பான நிபந்தனைகளை ஷரீ'ஆ மிகத் தெளிவாக வரையறுத்துள்ளது. அவ்வனுமதியைப் பயன்படுத்துவதைக் கட்டுப் படுத்துவதற்காக கடுமையான முன்நிபந்தனைகளும் முன்னெச்சரிக் கைகளும் விதிக்கப்பட்டுள்ளன.

தற்கொலை செய்வதற்கு அனுமதி உண்டா? இஸ்லாம் தற் கொலையை ஓர் உரிமையாக அங்கீகரிப்பதில்லை. அதனை ஒரு வரம்பு மீறலாகவே அது கருதுகின்றது. எம்மை நாமே சிருஷ்டித்துக் கொள்ளவில்லை. எனவே எமது உடல் எமக்குச் சொந்தமானதல்ல. அதனைப் பேணிப் போஷித்துப் பாதுகாக்கும் பொறுப்பு எமக்குத் தரப்பட்டுள்ளது. உயிருக்குச் சொந்தக்காரனும் அதனைத் தருபவனும் இறைவனே. அதனைத் தருவதற்கும் எடுப்பதற்கும் அவனுக்குள்ள உரிமையை நாம் மீறக்கூடாது. தற்கொலை செய்துகொள்ள முயற் சிப்பது இஸ்லாத்தில் ஒரு குற்றமும் கடுமையான பாவச் செயலு மாகும். குர்ஆன் இவ்வாறு கூறுகிறது: *''...உங்களையே நீங்கள் கொலைசெய்து கொள்ளாதீர்கள். நிச்சயமாக இறைவன் மிகக் கிருபை யுள்ளவனாக இருக்கின்றான்'' (4:29)*

தற்கொலைக்கு எதிராக எச்சரிக்கும் வகையில் இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் பின்வருமாறு சொன்னார்கள். ''எவரொ ருவர் தற்கொலை செய்துகொள்வதற்கு இரும்பு ஆயுதமொன்றைப் பயன்படுத்துகிறாரோ அவர் நரகத்தில் அதனை என்றென்றும் சுமக்க நேரிடும். எவரொருவர் நஞ்சு அருந்தித் தற்கொலை செய்து கொள்கி றாரோ அவர் நரகில் அந்நஞ்சினை என்றென்றும் பருகிக்கொண்டே இருப்பார். எவரொருவர் ஒரு மலையிலிருந்து குதித்துத் தற்கொலை செய்து கொள்கிறாரோ அவர் நரகத்தின் கிடங்குகளில் என்றென்றும் விழுந்துகொண்டே இருப்பார்.''

**கருணைக் கொலை:** உயிரொன்ரைப் பறிப்பதற்கு இடமளிக் கும் நிபந்தனைகளை ஷரீ'ஆ குறித்துக் காட்டிப் பட்டியல்படுத்தி யுள்ளது. (அதாவது மனித உயிரின் புனிதத்துவம் பற்றிய பொது விதிக்கு விலக்கான சந்தர்ப்பங்கள்) கருணைக் கொலை அவற்றுள் அடங்குவதில்லை. அதற்கு அதில் இடமளிக்கப்படவுமில்லை. ஏனைய சூழல்கள் எவ்வாறிருப்பினும் நிபந்தனையின்றி கௌரவிக்கப்பட வேண்டிய உள்ளீட்டுப் பெறுமானமொன்று மனித உயிருக்கு இருக் கிறது. வாழ்வதற்குப் பெறுமதியற்ற உயிர் என்ற கருத்துப்படிவம் இஸ்லாத்தில் காணப்படுவதில்லை.

கடும் வேதனையைத் தவிர்ப்பதற்காக அல்லது அதிலிருந்து தப்புவதற்காக உயிரைப் பறிக்கலாம் என்ற நியாயம் ஏற்றுக்கொள்ளப் படமுடியாதது. ‘‘முன்னொரு காலத்தில் ஒரு மனிதர் இருந்தார். அவருக்கு ஏற்பட்டிருந்த நோயொன்று அவரது பொறுமையைச் சோதிப்பதாக இருந்தது. எனவே அவர் ஒரு கத்தியால் தனது மணிக் கட்டை வெட்டி இரத்தம் சிந்தி இறந்துபோனார். அதனைக் கண்டு எனது அடியான் தன் முடிவை அவசரப்படுத்திக்கொண்டான். நான் அவனுக்கு சுவனபதியை இல்லாமற் செய்துவிட்டேன் என இறைவன் கூறினான்’’ என ஒரு தடவை இறைதூதர் முஹம்மத் (ஸல்) கூறி னார்கள். ஒரு படையெடுப்பின் போது முஸ்லிம்களில் ஒருவர் கொல்லப் பட்டார். அவரது வீரத்தையும் போர்த் திறனையும் இறைதூதரின் தோழர்கள் புகழ்ந்து பேசிக்கொண்டனர். ஆனால் ‘‘அவர் செல்லுமிடம் நரகமே’’ என இறைதூதர் கூறியதைக் கேட்டு அவர்கள் ஆச்சரியப்பட் டார்கள். அந்த மனிதர் கடுமையாகக் காயமுற்றிருந்தார் என்றும் அதன் காரணமாக அவர் தனது வாளின் பிடியை நிலத்தில் நிறுத்தி அதன் முனையின் மீது தனது நெஞ்சை அழுத்தித் தற்கொலை செய்துகொண்டார் என்றும் பின்னர் விசாரித்த போது தெரியவந்தது.

இஸ்லாமிய மருத்துவம் பற்றிய முதலாவது சர்வதேச மாநாட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்ட மருத்துவ ஒழுக்கநெறி தொடர்பான இஸ்லாமிய சட்டக்கோவையில் ‘‘தற்கொலையைப் போன்றே கருணைக் கொலைக் கும் எவ்வித ஆதரவும் கிடையாது. இப்புவியில் எமது வாழ்க்கை முடிந்த பின் எதுவும் நடக்காது என்று நம்புகிற நாத்திகச் சிந்தனையில் மட்டுமே அதற்கு இடமுண்டு. வேதனைமிக்க, அறவே நம்பிக்கையற்ற நோய்க்காகக் கொல்லுதல் என்ற கோரிக்கையும் நிராகரிக்கப்படவேண் டும். ஏனெனில் மருந்துகளாலோ, தகுந்த நரம்பு சத்திர சிகிச்சை யாலோ கட்டுப்படுத்தமுடியாத வலி எதுவும் மனிதருக்கு இல்லை...’’ எனக் குறிப்பிட்டுள்ளது.

மேலும் வலிக்கும் வேதனைக்கும் எளிதில் புலப்படாத பரி மாணங்களும் இருக்கின்றன. பொறுமையும் சகிப்புத் தன்மையும் மதிப்புக்கும் சன்மானத்துக்கும் உரிய பெறுமானங்கள் என இஸ்லாம் கருதுகின்றது. *‘‘...பொறுமையாளர்கள், தங்களுடைய கூலியை நிறைவு செய்யப்படுவதெல்லாம் கணக்கின்றியே தான்...’’ (39:10) ‘‘...மேலும் உனக்கேற்படும் கஷ்டங்களை நீ பொறுமையுடன் சகித்துக் கொள்வாயாக. நிச்சயமாக இது செயல்களில் உறுதியானதாகும்’’ (31:17)*

“ஒரு விசுவாசி வலியினால் பாதிக்கப்படும் போது - அது ஒரு முள் குத்தியதைப் போன்றோ அதனை விடக் கூடுதலாகவோ இருக்க லாம் - இறைவன் அவனுடைய பாவங்களை மன்னிக்கின்றான். ஒரு மரத்திலிருந்து இலைகள் உதிர்வது போல அவனது பாவச் செயல்கள் நீங்கிவிடும்” என இறைதூதர் முஹம்மத் (ஸல்) போதித்தார்கள்.

வலியைத் தவிர்க்கவோ நிவர்த்தி செய்யவோ முடியாமற் போகும் போது ஆன்மீகப் பரிமாணங்களைக் கொண்டு, உதவி வழங்கப்படலாம். தவிர்க்க முடியாத வலியை ஏற்றுச் சகித்துக்கொள் வதன் மூலம் உண்மையானதும் நியாயமானதுமான மறுமைவாழ்வுக்கு நன்மை பெறலாம் என்ற நம்பிக்கை விசுவாசிக்கு உதவியாக அமை யும். மறுமை பற்றிய நம்பிக்கை இல்லாதவருக்கு இது உதவாததாக இருக்கலாம். அதே போன்றுதான் மறுமையை நம்புவோருக்குக் கருணைக் கொலை ஒருபோதும் உதவப் போவதில்லை.

**நிதி தொடர்பான காரணிகள்**: குணமாக்க முடியாத நோயாளி களையும் முதியவர்களையும் பராமரிப்பது பெருஞ் செலவை ஏற்படுத்து கிறது என்பதில் ஐயமில்லை. இதனால்தானோ என்னவோ சில கரு ணைக் கொலை ஆதரவாளர்கள் “சாவதற்குரிய கடமை” பற்றிப் பேசுகின்றனர். மனித இயந்திரம் அதன் பயன்தரு காலத்தைக் கடந்த பின், அதனைப் பராமரித்துப் பேணுவது சமூகத்தின் உற்பத்தித் திறன் மிக்க பகுதியினர் மீது தேவையற்ற சுமையொன்றாக அமை கிறது. எனவே அதனைப் படிப்படியாகச் சிதைந்து போகவிடாமல் ஒரேயடியாக அகற்றிவிட வேண்டும் என அவர்கள் கூறுகின்றனர்.

இந்தத் தர்க்கம் இஸ்லாத்துக்கு முற்றிலும் அந்நியமானது. நிதி பற்றிய சிந்தனையைவிடப் பெறுமானங்களுக்கே முன்னுரிமை வழங்கப்படவேண்டும். நலிவுற்றவர்களையும், முதுமை அடைந்தவர் களையும் அநாதரவானவர்களையும் பராமரிப்பது என்பது ஒரு பெறுமா னம். அதற்காக தமது நேரம், முயற்சி, பணம் என்பவற்றை அர்ப் பணிக்க மனிதர்கள் முன்வரவேண்டும். இயற்கையாக இது ஒருவரது பெற்றோர்களின் விடயத்திலேயே ஆரம்பிக்கப்படவேண்டும்.

*“உமதிரட்சகன், அவனைத் தவிர (வேறெவரையும்) நீங்கள் வணங்கக்கூடாதென்றும் பெற்றோர்க்கு உபகாரம் செய்ய வேண்டு மென்றும் கட்டளையிட்டிருக்கின்றான். அவ்விருவரில் ஒருவரோ, அல் லது அவ்விருவருமோ உம்மிடத்தில் திண்ணமாக முதுமையை அடைந்துவிட்டால் அவ்விருவருக்கும் சீ என்றுகூட (இழித்துச்) சொல்ல வேண்டாம். அவ்விருவரையும் விரட்டிவிடவும் வேண்டாம். அவ்விரு*

*வருக்கும் மரியாதையான வார்த்தையைக் கூறுவீராக! இன்னும், இவ்விருவருக்குமாக இரக்கத்துடன் பணிவு என்னும் இறக்கையை நீர் தாழ்த்துவீராக! மேலும் என் இரட்சகனே! நான் குழந்தையாக இருந்தபோது (மிக்க அன்பாக) என்னை அவர்கள் வளர்த்தது போன்று நீயும் அவ்விருவருக்கும் அருள்புரிவாயாக!'' என்று கூறுவீராக. (17:23-24)* அந்தப் பராமரிப்பு இறைவனால் கட்டளையிடப்பட்டு அவனால் இவ்வுலகிலும் மறுமையிலும் சன்மானம் அளிக்கப்படுவதாக இருப்ப தனால் விசுவாசிகள் அதனை ஒரு செலவாகவன்றி ஒரு முதலீடாகவே கருதுகின்றனர். சடவாதப் போக்குள்ள, பணத்தை மையமாகக் கொண்ட ஒரு சமுதாயத்தில் இவ்வாறான தர்க்கம் அர்த்தமற்றதாகத் தோன்றலாம். ஆனால் பெறுமானங்களினால் நெறிப்படுத்தப்பட்ட இறையச்சமுள்ள விசுவாசிகளின் சமூகத்தைப் பொறுத்தமட்டில் அப்படி யிருக்காது.

தேவையான பராமரிப்பை வழங்கத் தனியாள் வருமானம் பற்றாத நிலையில் இஸ்லாத்தின்படி அது சமூகத்தின் கூட்டுப் பொறுப் பாக மாறுகிறது. இந்நிலையில் இன்பங்களைவிடப் பெறுமானங்கள் முன்னுரிமை பெறும் வகையில் நிதி தொடர்பான முன்னுரிமைகள் மாற்றியமைக்கப்படவேண்டும். (உண்மையில் சுகபோகங்களைத் தேடித் திரிவதைவிட பெறுமானங்களுக்கு மதிப்புக் கொடுப்பதன் மூலம் மனிதர்கள் உண்மையில் அதிக இன்பம் பெறுபவர்கள்) இந்தப் பிரமாணங்களைக் கொண்டிராத ஒரு சமூகம் தன்னை ஒழுக்க மற்றும் ஆன்மீக ரீதியில் மீள் திசைமுகப்படுத்திக்கொள்வது இதற்குத் தேவை யான முன்நிபந்தனையாக விளங்குகிறது.

**வைத்திய நிலைமைகள்**: இஸ்லாமிய அமைப்பொன்றில் கருணைக் கொலை பற்றிய கேள்வி பொதுவாக எழுவதில்லை. அப்படித்தான் எழுந்தாலும் மார்க்கரீதியில் விலக்கபட்டது என அது தள்ளுபடி செய்யப்படும். நோயாளியின் ஆன்மீக (சமய) ஆலோசகர்கள் உட்பட குடும்பத்தவர்களும் நண்பர்களும் நோயாளிக்கு முடிந்தளவு உள வியல் ரீதியான ஆதரவையும் கருணையையும் வழங்க வேண்டும். மருத்துவரும் இதில் பங்குபற்றுவதோடு வலி நிவாரணத்துக்கான சிகிச்சைகளையும் வழங்குவர். தேவைப்படும் வலி நிவாரணியின் அளவு நோயாளியில் மரண ஆபத்தை ஏற்படுத்தக்கூடிய அளவை நெருங்கும் போது அல்லது அதை மிஞ்சும் போதுதான் இழுபறி நிலையொன்று ஏற்படும். இப்படியான நிலையொன்றைத் தவிர்ப்பது மருத்துவரின் கெட்டித்தனமாகும். எனினும் சமயக் கண்ணோட்டத்தில்

மருத்துவரின் நோக்கமே பிரதானமானதாக அமைகிறது. நோக்கம் கொலை செய்வதா நிவாரணம் வழங்குவதா? நோக்கத்தை சட்டத் தால் பரிசீலிக்க முடியாது. எனினும் இஸ்லாத்தின்படி அது இறைவனின் நிலையான பார்வையிலிருந்து தப்பித்துக் கொள்ளமுடியாது. குர்ஆனின்படி *''(மனிதர்களின்) கண்களின் மோசடியையும், நெஞ் சங்கள் மறைத்து வைத்திருப்பதையும் அவன் நன்கறிவான்'' (40:19)* சட்டரீதியாக நிரூபிக்கப்படமுடியாத குற்றங்கள் ஒரு நீதிபதியின் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டவை. ஆனால் இறைவனுக்குப் பதில் கூறப்படவேண்டியவை.

இறைதூதரின் இரு கூற்றுக்களின்படி நோய்க்கு மருத்துவ சிகிச் சையைப் பெறுவது இஸ்லாத்தில் கட்டாயமானது. ''இறைவனின் அடியார்களே, சிகிச்சையை நாடுங்கள். ஒவ்வொரு நோய்க்கும் இறை வன் ஒரு மருந்தைப் படைத்திருக்கிறான்'' என்றும் ''உங்கள் உடம் புக்கு உங்கள் மீது ஓர் உரிமை இருக்கிறது'' என்றும் அன்னார் கூறினார்கள். எனினும் சிகிச்சையொன்று பலனளிக்கும் என்ற நம் பிக்கையைத் தராத நிலையில் அது கட்டாயமாகாது. இது மருந்து களுக்கும் சத்திர சிகிச்சைகளுக்கும் பொருந்தும். பெரும்பாலான அறிஞர்களின் கருத்துப்படி செயற்கை உயிர்ப்பிப்புச் சாதனங்களுக்கும் இது பொருந்தும். உயிரோடுள்ள ஒவ்வொரு மனிதருக்கும் உரிமை யான சாதாரண தேவைகள் 'சிகிச்சை' என்ற வகையில் அடங்கா. அவை வேறாகவே கருதப்படும். உணவு, பானம், சதாரண தாதிப் பராமரிப்பு போன்ற இவை நோயாளி உயிரோடிருக்கும் வரை நிறுத் தப்படக்கூடாது.

மருத்துவ ஒழுக்க நெறிகள் பற்றிய இஸ்லாமிய சட்டக் கோவை (பக்கம் 67) பின்வருமாறு கூறுகிறது: ''உயிரைக் காப்பதற்காகத் தான் எடுக்கும் முயற்சிகளின் போது ஒரு வைத்தியர் தனது எல்லைகளை அறிந்திருப்பதோடு அவற்றை மீறக்கூடாது. உயிரைத் திருப்பி நிலைநிறுத்த முடியாது என்பது அறிவியல் அடிப்படையில் உறுதியாகிவிடின், நோயாளியை தொடர்ந்து உணர்வற்ற நிலையில் பேண முயல்வதோ, அல்லது அதிகுளிரூட்டுதல் அல்லது வேறு செயற்கை முறைகளினால் நோயாளியைப் பேணிப் பாதுகாப்பதற்கு முயற்சிப்பதோ அர்த்தமற்றது. மருத்துவர் இலக்காகக் கொள்ளவேண் டியது உயிர் வாழும் செயல்முறை பற்றியல்ல. என்ன இருந்தாலும், நோயாளியின் வாழ்வை முடிவடையச் செய்யும் நடவடிக்கை எதனை யும் மருத்துவர் செய்யக்கூடாது.''

**விவரணம்**

எந்தவொரு சமுதாயத்தினதும் முழுமையான சித்தாந்தப் பின்னணியிலிருந்து தனிப்படுத்திக் கருணைக் கொலை பற்றிக் கலந்துரையாடமுடியாது. இறைவனிலும் தெய்வீக ரீதியாக விதிக்கப் பட்டுள்ள ஷரீ'ஆவிலும் நம்பிக்கை வைத்துள்ள முஸ்லிம்கள், இறை வனை நம்பாதவர்களிலிருந்தும் இறைவன் இருப்பதாக ஏற்றுக் கொண்டுள்ள, ஆனால் நாம் செய்யக்கூடியதையும் கூடாததையும் சொல்ல அவனுக்கு அதிகாரமில்லை என்று நினைப்பவர்களிலிருந்தும் இயல்பாகவே இவ்விடயத்தில் வேறுபட்ட கருத்துடையவர்களாகவே இருப்பர். இன்றைய கிறிஸ்தவ உலகத்தின் பெரும்பாலான பகுதிகளில் திருச்சபையையும் அரசையும் பிரித்து வேறாக்குதல் என்ற கோட்பாடு, மனித விவகாரங்களிலிருந்து இறைவனைப் புறந்தள்ளிவிடுதல் என்ற கருத்துடையதாக மாறியிருக்கிறது. ஆனால் அவ்விரு கருத்துப்படிவங் களும் ஒரே விதமானவையல்ல.

இருபதாம் நூற்றாண்டில் நாஜி ஜெர்மனியில் கருணைக் கொலை தொடர்பான அனுபவம் எமது கண்களைத் திறக்கச் செய் துள்ளது. உயர் விவேகமும், நல்ல தொழில் அந்தஸ்தும் கொண்ட மருத்துவர்களாலேயே அது அங்கீகரிக்கப்பட்டு, முன்னெடுத்துச் செல்லப்பட்டு அமுல்படுத்தப்பட்டது. ''பிழைப்பதற்குத் தகுதியற்ற உயிர்'' என்ற கருத்துப்படிவம் கண்டிக்கப்படாமல் ஏற்றுக்கொள்ளப் பட்டவுடன், பின்பு நிகழ்ந்த படுபாதகச் செயல்களுக்கு வழிவகுத்த முடிவுகளை மேற்கொள்வதற்குரிய அடித்தளம் அமைக்கப்பட்டுவிடும். கருணைக் கொலை ஆதரவுக் குழுவினர் மீண்டும் நெதர்லாந்தில் ஒன்று திரண்டு ஐரோப்பாவையும் அமெரிக்காவையும் இலக்கு வைத் துள்ளனர். அவர்களை எதிர்ப்பவர்கள், நோயாளிகளிடமிருந்து பெறப் படும் 'சுயாதீன சம்மதம்' பற்றிக் கேள்வி எழுப்பியுள்ளனர். ஏற்கனவே தனிப்பட்ட துன்பச் சுமைகளுக்கு ஆளாகியுள்ள இந்நோயாளிகள், தங்கள் நோயின் காரணமாக தங்கள் குடும்பத்தினர் மீது ஏற்படுத்தப் பட்டுள்ள உள ரீதியானதும் பணரீதியானதுமான சுமைகள் பற்றி அறிந்து மேலதிக வேதனைக்குள்ளானவர்களாக இருக்கின்றனர். அத்தோடு, குடும்பத்தினரால் வழங்கப்படும் சம்மதத்திற்கு அவர் களுடைய சொந்த ஆர்வ முரண்பாடுகள் காரணமாக அமையவும் கூடும். இது பற்றிய கருத்துப் போராட்டம் ஆரம்பித்துள்ளது. முடிவு எப்படியிருக்குமோ தெரியாது. இஸ்லாத்தின் உறுதிமிக்க இறையியல் ரீதியான வலிமை காரணமாக இவ்வாறான முரண்பாடுகள் அதில் தவிர்க்கப்பட்டுள்ளன.

**மரபணுப் பொறியியல்**

குர்ஆனில் கூறப்பட்டுள்ள ‘இறைவனின் சிருஷ்டிகளை மாற்றி விடுதல்’ என்ற சொற்றொடரின் காரணமாக மரபணுப் பொறியியல் பற்றி இஸ்லாமிய அறிஞர்களிடையே நீண்ட கலந்துரையாடல்கள் இடம்பெற்று வந்துள்ளன. குர்ஆனின்படி, தனது தூண்டுதலினால் தடை செய்யப்பட்ட மரத்திலிருந்து புசித்துப் பாவம் செய்த ஆதமும் ஹவ்வாவும் பின்னர் பாவமன்னிப்புக் கோரி மன்னிக்கப்பட்டு இறை வனின் பிரதிநிதிகளாகப் பூமியில் வசிப்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டதைக் கண்ட சைத்தான் விசனமடைந்தான். மனிதர் கள் நம்பகமானவர்களல்ல என்பதை நிரூபிப்பதற்காகத் தனக்கு இன்னொரு வாய்ப்புத் தருமாறு அவன் இறைவனிடம் கேட்டான். மனிதர்களை வழிகெடுத்த (சைத்தானைப் பின்பற்ற விரும்பியோரை மட்டுமே அவ்வாறு வழிகெடுத்த முடியும் என்ற தெளிவான நிபந்த னையுடன்) இறைவன் அனுமதி கொடுத்தபோது, மனிதர்களைக் குழப்புவதற்கான தனது திட்டங்கள் சிலவற்றை சைத்தான் பின் வருமாறு வெளிப்படுத்தினான்: *“...நிச்சயமாக உன் அடியார்களில் ஒரு குறிப்பிட்ட பகுதியை நான் எடுத்துக்கொள்வேன். இன்னும் நிச் சயமாக நான் அவர்களை வழிகெடுப்பேன். அவர்களுக்கு வீணான ஆசைகளையும் உண்டாக்குவேன். நிச்சயமாக நான் அவர்களுக்குக் கட்டளையும் இடுவேன். அப்போது (சிலை வணக்கப் பலியீடுகளுக் காக) கால் நடைகளின் காதுகளை அவர்கள் அறுத்துவிடுவர். இன் னும், அவர்களை நிச்சயமாக நான் ஏவுவேன். அப்போது இறைவனின் சிருஷ்டிகளை நிச்சயமாக அவர்கள் மாற்றிவிடுவர்...” (4:118-119)* குறிப்பிட்ட பிரச்சினைகள் தொடர்பாக இஸ்லாமிய அறிஞர்களின் தீர்ப்புக்களிலும் மருத்துவர்களின் அபிப்பிராயங்களிலும் இவ்வாக்கியங் கள் ஆழமான செல்வாக்கைச் செலுத்தியுள்ளன. உதாரணமாக, ஆண்கள் தங்களைப் பெண்களாக மாற்றிக் கொள்வதற்கும் மறு தலையாகச் செய்வதற்கும் பயன்படுத்தப்படும் பால் மாற்றுச் சத்திர சிகிச்சைகள் விடயத்தில் இவ்வாக்கியம் தாக்கம் செலுத்துகிறது. அதுபோன்ற தீவிர போக்குடைய இயற்கைக்கு முரணான சத்திர சிகிச்சைகள் விடயத்தில் இவ்வாக்கியம் தெளிவாகப் பிரயோகிக் கப்படக்கூடியதாக இருப்பினும் இதனை மரபணுப் பொறியியல் மீதான முற்று முழுதான தீவிரத் தடையாகக் கொள்ளமுடியாது. இதனை அளவுமீறிக் கொண்டு சென்றால் இறைவனின் சிருஷ்டிகளில் சில மாற்றங்களை ஏற்படுத்தக்கூடிய, உண்மையாகவே பரிகாரத்துக்குரிய சத்திர சிகிச்சைகள் பலவற்றுடன் அது முரண்படலாம்.

மரபணுப் பொறியியலின் அறிவியல் ரீதியான விருத்தி பல ஒழுக்கரீதியான பிரச்சினைகளை எழுப்பியுள்ளது. எழுபதுகளின் ஆரம் பத்தில் மீள்சேர்ப்பு DNA தொழிநுட்பம் பற்றி முதன் முதலாக விவரிக்கப்பட்டபோது, உயிரியல் ரீதியான போர் முறைகளுக்கான உக்கிரம் மிக்க பக்டீரியாக்களை உருவாக்குவது பற்றிச் சர்ச்சை எழுந்தது. அப்படியான பிரயோகம் நிச்சயமாகத் தவறானது. மரபணு சார்ந்த நோய்களைக் கண்டறிதல், நோய் நிலைகளை மேன்மைப்படுத் துதல், குணமாக்குதல், அத்தகைய நோய்களைத் தடுத்தல் முதலிய பிரயோகங்கள் ஏற்றுக்கொள்ளப்படத்தக்கவை; மெச்சத் தகுந்தவை. மரபணு மாற்றீடு செய்வது என்பதும் மூலக்கூறு மட்டத்தில் செய்யப்படும் ஒரு மாற்றுச் சிகிச்சையே. மருந்துத் தயாரிப்புத் துறையில் மரபணுப் பொறியியல் பல்வேறு நோய்களுக்குரிய சிகிச்சைகளுக்கான வாய்ப்புக் களைத் திறந்துவிடக்கூடும். அதேபோன்று விவசாயத்திலும் மிருக வளர்ப்பிலும் உருவாகக்கூடிய வாய்ப்புக்கள் உலகமெங்கும் பட் டினிப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு உதவக்கூடும்.

இதுவரை அறியப்படாத துறைகளிலும் ஐயம்தராத எதிர் காலத்திலும்தான் மரபணுப் பொறியியல் தொடர்பான பிரதான கவலை கள் தென்படுகின்றன. புதிய மரபணுக்களை சாதாரண உடற் கலங் களில் மட்டுமன்றி புணரிக் கலங்களிலும் ஒட்டுவதற்குரிய சாத்திய மானது வரப்போகின்ற சந்ததிகளைப் பாதிப்பதோடு அதன் பிற்பாடு, கவலைக்குரியதும் தானாகத் தொடர்ந்து நிகழக்கூடியதுமான மரபணு விவகாரங்களோடு சம்பந்தப்படவும்கூடும். அணுக் கதிர்வீச்சின் ஆபத் துக்கள் சிறிதுகாலம் வரை புலப்படவுமில்லை. அதனால் ஏற்பட்ட சேதங்களைத் திருத்தவும் முடியவில்லை. மரபணுப் பொறியியலின் பங்களிப்பினால் ஏற்படக்கூடிய பாதிப்புக்கள் அதைவிட மிகப் பார தூரமானவையாக இருக்கலாம்.

ஓர் இனத்திலிருந்து எடுக்கப்பட்ட மரபணுப் பதார்த்தங்களை இன்னோர் இனத்தினுள் புகுத்துவது, செயல்முறையில் கலப்பு இயல் புகளைக் கொண்ட புதிய இனமொன்றை உருவாக்குவதே. இம்முயற் சிகள் அறியாததை அறிந்துகொள்ளவும் அடைய முடியாததை அடைந்துகொள்ளவும் துடிக்கும் மனிதப் போக்கின் காரணமாகத் தொடர்ந்து இடம்பெற்றால், உயிரியல் அரங்கில் இதுவரை தோன்றி யில்லாத உயிர்க் கோலங்களுக்கு முகங்கொடுத்து எதிர்க்க வேண்டிய நிலை மனித குலத்துக்கு ஏற்படலாம். இப்படி நிகழ்ந்தால், எல்லாம் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதாக விஞ்ஞானிகள் நினைத்தாலும் உண்மை நிலை அப்படியிருக்காது. மனித சந்ததியில் தலையீடு

செய்வது நோய்த் தடுப்புக்கு அப்பாலும் சென்று விரும்பத்தக்கவை என்று கருதப்படுகின்ற உடல் இயல்புகளை உற்பத்தி செய்யும் நிலையை அடையக்கூடும். இதன் விளைவாக உயர் வகை மனிதர்கள் என்ற பிரிவினர் தோன்றி அவ்வியல்புகள் அற்ற சாதாரண நபர்கள் ஒதுக்கித் தள்ளப்படலாம். நடத்தையை நிர்ணயிக்கும் மரபணுக்களை வேறாக்கி மனித நடத்தையில் தலையீடு செய்யும் முயற்சிகள் மேலும் மோசமானவையாக இருக்கும். மனித ஆளுமையையும், தனியாள் பொறுப்புணர்வுக்கும் பொறுப்புக்கூறலுக்கும் உள்ள ஆற்றலையும் திரிபுபடுத்தும் முயற்சிகளை இஸ்லாம் நிச்சயமாகக் கண்டனம் செய்யும்.

மரபணுப் பொறியியல் தொழிநுட்பத்திற்கு பாரிய அளவில் மூலதன முதலீடு தேவை. எனவே அதில் முதலீடு செய்பவர்கள் நிச்சயமாக ஆகக்கூடிய பிரதிபலனை எதிர்பார்ப்பார்கள். பல விஞ்ஞானிகள் ஏற்கனவே பணத்திற்கு முன்னுரிமை கொடுத்திருப்பதோடு, திறந்த மனதோடு பொதுநலத்துக்காக ஒத்துழைப்பதைக் கைவிட்டு, வர்த்தக ரகசியங்களுக்கும் உயிர் வடிவங்களின் பேடண்ட் பதிவுக்கும் தம்மைப் பறிகொடுத்திருக்கிறார்கள். அதேவேளை சமத்துவம், நியாயம், பொதுநலம் என்பன தொடர்பான தார்மீக ரீதியான அக்கறைகள் பற்றி குரல் எழுப்பப்பட்டு வருகின்றது. மரபணுப் பொறியியல் பற்றிப் பகிரங்க விவாதம் நடத்தப்பட்டு அது தொடர்பான ஒழுக்கநெறிக் கோவையொன்றை வரைவதற்குரிய காலம் வந்திருக்கிறது. நீண்ட கதையொன்று காத்திருக்கிறது. இப்போதுதான் அது விரியத் தொடங்கியிருக்கிறது.

# முடிவுரை

இந்த நூலை ஏனைய நூல்களைப் போன்று வெறுமனே வாசித்து விட்டு ஒதுக்கித் தள்ளிவிட்டால் அது கவலைக்குரியதாகவே இருக்கும். தீட்சண்யமான பார்வையுடைய வாசகர்கள் நான் எழுதியிருக்கும் ஒவ்வொரு வார்த்தையையும் விசுவாசத்தோடு ஏற்றுக்கொண்டு அத்தோடு நின்றுவிட்டாலும் நான் எனது நோக்கத்தில் தோல்வியடைந்தவனாகவே இருப்பேன். அறிவுசார் கட்டம் செயல் ரீதியானதாக மாறாத வரை எனது பணி நிறைவேறாததாகவே இருக்கும். இந்த நூலின் பக்கங்களில் முன்வைக்கப்பட்டுள்ள அறிவானது (வாசகரின் உள்ளத்தில்) உணர்வுகளைத் தோற்றுவிக்காவிட்டால், அவரது நடத்தையில் பிரதிபலிக்காது போனால், அவ்வறிவு காய்க்காத மரத்தைப் போன்று மலட்டுத்தன்மை கொண்டதாகவே விளங்கும்.

எம் இதயங்களில் வெற்றிடம் இருக்க முடியாது. அவை அன்பினால் அல்லது வெறுப்பினால் அல்லது அலட்சியப் போக்கினால் நிரப்பப்பட வேண்டும். எனது இந்த வயோதிபக் காலத்தில் வாழ்நாள் முழுதும் எனது இஸ்லாமிய மார்க்கம் பற்றிக் கற்றுச் சிந்தித்து, உள்ளுணர்வு பெற்றுத் தேர்ந்த பின்னர் எனது இதயத்திலே அன்பு பொங்கி வழிகிறது. அந்த அன்பு பொதுமையானது. எந்தத் திட்டவட்டமான முகவரியும் இல்லாதது. எனது சக மனிதப் பிறவிகள், விலங்குகள், பறவைகள், மரங்கள், சடப்பொருட்கள், நாம் வாழும் இந்தப் பூமி, அண்ட சராசரம் அனைத்தின் மீதும் நான் அன்பினை உணர்கின்றேன். அது அனைவருக்கும் தொற்றிப் பரவ வேண்டும் என்பதே என் இதயத்தின் ஆசையாகும்.

அன்பு என்பது அரசியல், பொருளாதாரம், கைத்தொழில், முகாமைத்துவம், உழைப்பு, வியாபாரம் அல்லது யுத்தம் போன்ற எதற்கும் மாற்றீடாக அமைய முடியாது என்பது உண்மையே. மனிதர்களின் நடத்தைகளை ஏவிவிடும் ஏவுதளமாக அவர்களின் மனப்பாங்குகளே இருக்கின்றன. இதுவரை காலமும் தனியாள் மட்டத்திலும் பன்னாட்டு மட்டத்திலும் கவலைக்குரிய முறையில் செயல்படுகின்ற சுயநலம், பேராசை, இனப்பற்று, பிறர்பற்றிய உணர்வின்மை முதலியனவே மனப்பாங்குகள் என்ற வகையில் முனைப்பானவையாக இருந்துவருகின்றன. இந்நிலையினை மாற்றியமைக்க முடியுமானால், பொது நன்மைக்காகத் தங்கள் வாழ்க்கைப் பாணியை அர்ப்பணம் செய்ய முன்வருவோர் உட்பட அனைவரும் மகிழ்ச்சி அடைவார்கள்.

அன்பினை அடிப்படையான ஊக்குவிப்புக் காரணியாகக் கருதும் தத்துவம் புதியதாகத் தோன்றிய ஒன்றல்ல. எனினும் எங்கள் காலத்தில் பெரும்பாலானவர்கள் அதனை மனத்திடத்தோடு அரவணைத்துக்கொள்வதில்லை. அது சமயம், இனம் என்பவற்றுக்கு அப்பாலும் விரிந்து செல்லக்கூடியது. எனவேதான் அதனைக் கடைப்பிடிப்பவர்கள் வெளியே அன்புக் கரம் நீட்டி ஒருவரோடு ஒருவர் இணைந்துகொள்வது முக்கியத்துவம் பெறுகிறது. நல்ல தன்மை பெருகி வருமாயின் சிறு தொகையினராக இருப்பது ஒரு தடையாக அமையப்போவதில்லை. இது முழு மனித சமுதாயத்தாலும் உணரப்படுகின்ற ஒரு தேவையாக இருக்கிறது. சடவாதத் தீர்வுகளாலும் நாத்திகத்தின் ஏமாற்றுப் போக்கினாலும் மக்கள் சலிப்படைந்திருக்கின்றனர். தீர்த்துவைக்கப்படும் வரை ஆத்மீகத் தாகமொன்று காத்திருக்கிறது. வாழ்க்கையில் நல்ல தன்மைக்கும் பண்பான நடத்தைக்குமாக முயற்சிப்பவர்களில் கணிசமான தொகையினர் முன்னிறங்கிச் செயற்பட்டால் பாரிய ஆற்றல் கொண்ட சங்கிலித் தாக்கமொன்றை முடுக்கிவிட முடியும். உலகம் மாறத்தான் போகிறது. ஆனால் அதன் முக்கியத்துவத்தை விசுவாசிப்பவர்களின் தன்னலமற்ற விடாமுயற்சியின்றி அது சாத்தியமாகாது.

'உங்கள் மீது சாந்தி உண்டாவதாக!' என்ற இஸ்லாமிய வாழ்த்துரையோடு நான் இதனை நிறைவு செய்கிறேன்.